# சனிக்கிழமைப்

# புதுமை.



சர்வேசுரனுடைய பரிசுத்த மாதாவே
எங்களுக்காக வேண்டிக்கொள்ளும்.

# சனிக்கிழமைபுதுமை



இஃது

சேசுசபைக் குருவாகிய

## ரொஸ்சியெனனும்

சின்ன சவேரியார் சுவாமியாராற்

செய்யப்பட்டது.



2-ம் பதிப்பு.



புதுவை

மாதாக்கோவில் அச்சுக்கூடம்.

1896

சனிக்கிழமைப் புதுமையின்.

## விவேகமாவுரா.



சர்வேசுரன் இந்தப் பூலோகத்திலே வியாதிக்காரர் முகாந்தரமாக அநேக மருந்துகளைக் கட்டளை இட்டாப்போலே கஸ்திப்படுகிறவர்களுக்கு ஆதரவாகத் தேவமாதாவைக் கட்டளையிட்டார் வியாதிக்காரருக்கான மருந்தினாலே வியாதி நீங்கி ஆரோக்கியம வருகிறாப்போலே கஸ்திப்படுகிறவர்களுக்குந் தேவமாதாவின் உதவியினாலே கஸ்தி நீங்கி ஆறுதல் வருமே. இவ்வுலோகத்தில் எண்ணப்படாத கஸ்திகள் இருந்தாலுந் தேவமாதா வல்லபமுள்ளவளாகவுந் தயையுள்ளவளாகவும் இருக்கிறதினாலே அவளுடைய உதவியுண்டானால் கஸ்தியெல்லாம நீங்கிப்போம்.

கிறீஸ்துவர்களே, நாமிப்போது சொன்ன உவமையின் பேரிலே உங்களுக்குச் சந்தேகமுண்டானால் இனிமேல் நாஞ்சொல்லப் போகிற தேவமாதாவின் புதுமைகளினாலே அந்தச் சந்தேகம நிவாரணமாகி மெய்யென்றறிவீர்களாக. ஆகையால் தேவமாதா சனிக்கிழமைப் பிறந்ததினாலே அவளுடைய உதவியைக்கொண்டு சனிக்கிழமை தோறுந் தேவமாதாவைக் குறித்து ஒவ்வொரு புதுமையை நாஞ்சொல்லிக் காண்பிப்போம். வருஷத்திலே ஐம்பத்திரண்டு சனிக்கிழமை இருக்கிறதினாலே தேவமாதாவின் எண்ணப்படாத புதுமைகளுக்குள்ளே ஐம்பத்திரண்டு புதுமைகளைமாத்திரம் வெளிப்படுத்

இந்தப் புதுமைகளை நீங்கள் பத்தியோடே கேட்டு வேண்டியபோதெல்லாந் தேவமாதாவைத் தக்க பத்தியோடே மன்றாடினால் தேவமாதா உங்களுக்கு வருகிற தின்மைகளிலே நின்றிரட்சித்து அநேக நன்மைகளைக் கட்டளையிட்டுக் கடைசியிலே மோட்ச சபாக்கியம் உங்களுக்கு வரப் பண்ணுவாளென்று அறியக்கடவீர்களாக.

விவேகமுற்றிற்று.





# முந்தின சரித்திரமைப்

புதுமையாவது.



## செபமாலை வேண்டிக்கொண்டதினால் வந்தபலன்.



இத்தாலிய என்கிற இராச்சியத்திலே இரண்டு துரைகள் இருந்தார்கள். அவர்களுக்குள்ளே காணியாட்சி நிமித்தமாக ஒருவர்க்கொருவர் எப்போதுஞ் சண்டையிட்டுப் பகையாயிருந்தார்கள். இந்த இரண்டு பேருக்குள்ளே ஒருத்தன் மரணத்தையடைந்தான். செத்துப்போனவனுக்கு ஒரு சின்ன குழந்தைமாத்திரம் இருந்தது. அந்தத் துரை செத்துப்போனதினாலேயும் அவனுடைய ஸ்திரீ கைம்பெண்சாதி ஆனதினாலேயுங் குழந்தை சின்னதாயிருந்ததினாலேயும் அவனுடைய காணியாட்சி எல்லாம் எதிராளியான துரை கட்டிக்கொண்டான். இந்தக் குழந்தைக்கு வயது வந்தபிற்பாடு தானுந் தன்னுடைய சேவகனுமாக அந்த எதிராளியான துரை கட்டின காணியாட்சியைத் திருப்பத்தக்கதாகப் பிரயாசப்பட்டான். இவனுடைய தாயாராகிற கைம்பெண்சாதி எதிராளியான துரைக்குப் பலன் மெத்த இருந்ததினாலே அவனாலே தன்னுடைய மகனுக்குக் கஸ்திவராதபடிக்குத் தினந் தேவமாதாவைக் குறித்து

ஐம்பத்து மூன்றுமணிச் செபம் பண்ணிக்கொண்டு வருவாள். இந்தக் கைம்பெண்சாதி மகன் உரோசகாரனாயிருந்ததினாலே ஒருநாள் பயப்படாமல் எதிராளியான துரையோடே சண்டை பண்ணினான். அப்போது எதிராளியான துரை செயுங்கொண்டு அந்தக் கைம்பெண்சாதி மகனைப் பிடித்துத் தன்னுடைய அரண்மனைக்குக் கொண்டுபோய் அங்கே தன்னுடைய முற்றத்திலிருந்த ஒரு மாத்திலே இவனைத் தூக்கிக் கொன்றுபோட்டான். அப்போது ஒருத்தியாய்த் தனித்த இந்தக் கைம்பெண்சாதிகிட்டப் போய் நடந்த சேதியெல்லாம் ஊழியக்காரன் சொன்னான். அவள் இந்தச் சேதியைக் கேட்டமாத்திரத்திலே நான் தினந்தினந் தேவமாதாவுக்கு ஐம்பத்து மூன்றுமணிச் செபம் பண்ணிக்கொண்டு வந்தேன். ஆகையால் என் மகனுக்கு இப்படிக்கொத்த கஸ்திவராதென்று மிகுந்த விசுவாசத்தோடே சொன்னாள்.

பிற்பாடு வேறேயொரு சேவகன் வந்து உன்னுடைய மகன் செத்துப்போனான், அவன் சரீரத்தை என்னுடைய கண்ணாலே நான்தானே கண்டேனென்று சொன்னான். அப்போது அந்தக் கைம்பெண்சாதி மெய்யென்றெண்ணினாள். பிற்பாடு இவள் கஸ்திப்பட்டாலும் உடனே தாமதமில்லாமல் தேவமாதாவின் கோவிலுக்குப் போய் முழங்காலிலிருந்து வேண்டிக்கொண்டதாவது: தேவமாதாவே என் மகனுக்குக் கஸ்திவராதபடிக்கு இங்கேதானே உம்மைக்குறித்துத் தினம ஐம்பத்து மூன்றுமணிச் செபம பண்ணினேன். தேவரீர் என் மகனுக்கு வருகிற தின்மையினின்று இரட்சிப்பீரென்று உம்முடைய பேரிலே நம்பிக்கையாயிருந்தேன். ஆனால் என் மகன் செத்துப்போனதினாலே நான் எம்மாத்திரங் கஸ்தி அனு

டிக்கிறேனென்று சொல்லக்கூடாது. மகனை இழந்துபோகிறது எம்மாத்திரங் கஸ்தியென்று தேவரீருக்கு நன்றாய்த் தெரியும். அதேனென்றால் மூன்று நாள் மாத்திரஞ் சேசுநாதரைக் காணாமல் போனதினாலே தேவரீர் வெகு கஸ்தி அநுபவித்தீர். அதின் பிறகு அவரைக் கண்டதினாலே உமக்கெத்தனையோ சந்தோஷமாயிற்று. அப்படியே நானுஞ் சந்தோஷமாயிருக்கத் தக்கதாக உம்முடைய கிருபையினாலே என்னுடைய மகனுக்குச் சீவன் வரவேணும்.

சாவானது தேவரீருக்குக் கீழ்ப்படிந்திருக்கிற படியினாலே தேவரீரால் இந்தச் சகாயம் வரலாம். என்னுடைய மகன் சீக்கிரமாய் வீட்டுக்கு வரத்தக்கதாக உம்முடைய குழந்தையாகிற சேசுநாதர் உமது திருக்கையில் இராமல் என்கிட்ட இருக்கவேணும். ஆகையால் நான் இப்போது என் கஸ்தியினாலே இந்த நல்ல குழந்தையை என்னுடைய அரண்மனைக்கு எடுத்துக்கொண்டு போகிறேன். பிற்பாடு என்னுடைய மகன் உம்முடைய கிருபையினாலே என்னுடைய வீட்டிலே வந்தவுடனே உம்முடைய குழந்தையை உம்முடைய திருக்கையில் மகா பூச்சியத்துடனே திரும்ப ஒப்புவிப்பேனென்று அழுகையோடு வேண்டிக்கொண்டவுடனே அவள் பீடத்தின்மேல் ஏறித் தேவமாதாவின் கையிலிருக்கிற குழந்தையைப் பூச்சியத்துடனே எடுத்து ஒரு பட்டுச் சீலையினாலே மூடிக்கொண்டு அரண்மனைக்குக் கொண்டுபோய் ஒரு நல்ல பெட்டியிலே வைத்துக்கொண்டாள். மறுநாள் சூரியன் உதயமான பிற்பாடு அந்தக் கைம்பெண் சாதி தன்னுடைய மேல் வீட்டிலே இருக்கிறபோது இவளுடைய ஊழியக்காரர் கீழ்வாசலிலே சந்தோஷத்தினாலே குதித்துக்கொண்டு சந்தோஷத்துக்கான அநேக அடையாளங்களைக் காண்பித்தார்கள். அந்தக்

கைம்பெண்சாதி தேவமாதாவின்பேரிலே இருக்கிற நம்பிக்கையினாலே ஊழியக்காரருடைய சந்தோஷத்தைக் கேட்டவுடனே தன் மகன் வந்தானென்று யோசனைசெய்து கீழேவந்து தன்னுடைய மகனுக்கு எதிராகப்போய்க் கண்டு சந்தோஷப்பட்டுக் கட்டிக்கொண்டு முத்தஞ்செய்து மகனைப்பார்த்துக் கேட்டதாவது:

என் குமாரனே நீ எப்படி சீவனோடே எழுந்திருந்து இங்கே வந்தாயென்று சந்தோஷத்தினால் அழுது கொண்டு கேட்டதற்கு அவன் தன் கழுத்திலிருக்கிற காயத்தைக் காண்பித்து இன்றிராத்திரிதானே என்னுடைய சத்துரு தன் வாசலிலே என்னைத் தூக்கியிருக்கிறபோது தேவமாதா அநேக சம்மனசுகளோடேவந்து தம்முடைய அனந்த கிருபையினாலே என்னை உயிர்ப்பித்துச் சம்மனசுகளைக் கொண்டு என்னைத் தூக்கியிருந்த கயிற்றை அவிழ்க்கச் சொல்லி என்னை அனுப்புகிற சமயத்திலே என்னோடே சொன்னதாவது: நம்முடைய மகன் உன்னுடைய தாய்கிட்ட இருக்கிறார். நீபோய் இந்தப் பிரகாரம் உன் தாயாருக்குச் சொல்லு: நாம் உனக்கு உன்னுடைய மகனை ஒப்புக் கொடுத்தாற்போலே நம்முடைய குழந்தை சேசுநாதனை நமக்கு ஒப்புக் கொடுக்க வேணுமென்று சொல்லென்று திருவுளம் பற்றி மறைந்துபோனாள். ஆனால் இதற்கர்த்தம் நானறியேனென்று மகன் சொன்னபிற்பாடு அந்தக் கைம்பெண்சாதி மகனோடே சொன்னதாவது: நீ சீக்கிரமாய்த் திரும்பி வரத்தக்கதாக நான் இப்படி செய்தேனென்று நடந்த சேதியைச் சொன்னாள்.

பிற்பாடு இவள் ஆரவாரத்தோடேயும் மகிமையோடேயும் எல்லோருமறிய அந்தக் குழந்தை சேசுநாதனைக் கோயிலுக்குக் கொண்டுபோய்த் தேவமாதா

வின் கையிலே ஒப்புக்கொடுத்தாள். அதின் பிறகு தாயும் மகனும் அங்கே தானே முழங்காலிலேயிருந்து தங்களுக்குத் தேவமாதா செய்த உபகாரத்துக்காக நன்றியறிந்த மனதோடே வேண்டிக்கொண்டார்கள். பிற்பாடு தாயும் பிள்ளையும் அரண்மனைக்கு வந்தபின் தேவமாதா அந்தக் கைம்பெண்சாதிக்கு வேறே சகாயம் பண்ணினாள். அதேதென்றால் அந்த எதிராளியான துரை தான் தூக்கினவனுடைய பிரேதத்தைக் காணாததினாலே எங்கே போச்சுதென்று விசாரித்தான். அந்தக் கைம்பெண்சாதி மகனுக்குத் தேவமாதாவின் உதவியினாலே சீவன் வந்ததென்கிற சேதியறிந்து தேவமாதாவின் உதவியினாலே பழைய பகையெல்லாம் விட்டுப்போட்டு அவன் அந்தக் கைம்பெண்சாதி கிட்டவந்து அறியாமற் செய்தேனென்று முன்னே தான் அநியாயமாய்க் கட்டிக்கொண்ட காணியாட்சி நிலத்தைத் திரும்பக் கொடுத்துச் சமாதானமாயிருந்தான்.

கிறீஸ்துவர்களே இந்தப் புதுமையிலே சொல்லப்பட்ட பெண்பிள்ளை கோவிற் பீடத்தின்மேலேறித் தேவமாதாவின் சுரூபக்கையிலே இருந்த குழந்தையை எடுத்துக்கொண்டு போனது செய்யத்தகாத காரியமானாலும் அவள் துயரமிகுதியில் யோசியாமற் செய்ததினால் தேவமாதா அதைப் பொறுத்துச் சித்தமிரங்கினாள். ஆயினும் அப்படிப்பட்ட காரியஞ் செய்யலாகாது. நீங்கள் இப்போது கேட்ட புதுமையினாலே உங்களுடைய ஆத்துமத்துக்கு அநேக ஞானப்பிரயோசனம் வரலாம்.

முந்தமுந்த நாம் இப்போது சொன்ன கைம்பெண்சாதி தேவமாதாவைக்குறித்துத் தினந்தினந் தப்பாமல் ஒம்பத்துமூன்றுமணிச்செபம் பண்ணிக்கொண்டு வந்ததினாலே தேவமாதா அவளுக்கும் அவளுடை-

ய மகனுக்குங் கனமான சகாயம் பண்ணினுள். இதி னாலே நீங்கள் தேவமாதாவைக்குறித்துத் தினந் தப் பாமல் ஐம்பத்துமூன்று மணிச் செபம் பண்ணுவீர் களாக. இந்த வழியாகத் தேவமாதா உங்களுக்குச் சகாயமாயிருப்பாள்.

இரண்டாவது. நான சொன்ன கைம்பெண்சாதி க்குக் கஸ்திவந்த பிற்பாடு தன் மகனுக்குப் பொல லாபபு செய்த எதிராளியைத் தூஷணிக்காமல் கோ யிலுக்குப்போய்த் தேவமாதாவை விசுவாசத்தோ டேயும் நம்பிக்கையோடேயும் வேண்டிக்கொண் டாள். அவளுடைய விசுவாசத்தைக் குறித்து மறு படியுந் தேவமாதா அவளுக்குக் கனமான புதுமை பண்ணினுள். உங்களுக்குக் கஸ்தி வருகிற சமயத் திலே அந்தக் கைமபெண்சாதியைப் போலே உங் களுக்குத் தேவமாதாவின் பேரிலே எம்மாத்திரம விசுவாசமிருக்குமோ அம்மாத்திரந் தேவமாதா உங் களுக்குச் சகாயமாயிருப்பாள்.

கிறீஸ்துவர்கள் கஸ்திவந்தவுடனே தேவமாதாவை வேண்டிக்கொள்ளாமல் தூஷண வார்த்தைகள் சொல்லி முறையிட்டுக்கொண்டு திரிகிறதினாலே க ஸ்தி அதிகம் வருகின்றது. சிலபேர்கள் தங்களுக்கா கிலுந் தங்கள் குழந்தைக்கென்கிலும் வியாதிவந்த பிற்பாடு தேவமாதாவின் பேரிலே உண்டான விசு வாசத்தை விட்டுக் கோணங்கி சாஸ்திரங் கேட்பார் கள். இந்த வழியாகச் சிலவிசை வியாதிக்காரருக் குங் குழந்தைகளுக்குஞ் சாவுவரும். கிறீஸ்துவர்க ளே நீங்கள் இப்படிச் செய்யவேண்டாம். உங்களுக்கு வியாதியாகிலும் வேறே கஸ்தியென்கிலும் வந்தால் உடனே கோயிலுக்குப்போய் நாமிப்போது சொன் ன கைம்பெண்சாதியைப் போலே விசுவாசத்தோ

டே தேவமாதாவை வேண்டிக்கொள்ளுங்கள். இந்தவழியாக உங்களுக்கு வந்த கஸ்தி நீங்கிப்போம்.

மூன்றாவது. நம்மாலே சொல்லப்பட்ட கைம்பெண்சாதி மகன் செத்துப்போன பிற்பாடு தேவமாதா கிருபையினாலே சரீர உயிர் வந்தது. பிரதானமாய் உன்னுடைய ஆத்துமத்துக்காகிலும உன் மக்கள் ஆத்துமத்துக்கென்கிலும் வேறே கிறீஸ்துவன் ஆத்துமத்துக்காகிலுஞ் சாவான பாவத்தினாலே சாவு வந்த பிற்பாடு ஆத்துமத்துக்கு ஞான உயிராகிற தேவ இஷ்டப்பிரசாதம் வரத்தக்கதாக அந்தக் கைம்பெண்சாதியைப்போலே விசுவாசத்தோடே அழுது கொண்டு தேவமாதாவை வேண்டிக்கொண்டால் இந்தப்பிரகாரமாய்த் தேவமாதாவின் புதுமையினாலே பாவிகள் ஆத்துமத்துக்கு ஞான உயிர்வரும். அதேதென்றால் தேவமாதாவுக்கு மிகுந்த பலனும இரக்கமும் இருக்கிறதினாலே சிந்துதேசத்துக்கு அப்போஸ்தலனாகிய அர்ச். சவேரியார் எல்லாருக்கும் அடிக்கடி சொன்ன புத்தியாவது: உங்களுடைய காரியமெல்லாம் அநுகூலமாகத் தேவமாதாவை வேண்டிக்கொள்ளுங்கள். அதேதென்றால் இப்படிக்கொத்த ஆண்டவள் சர்வேசுரனுக்குத் தாயாரானதினாலே மனுஷரைக் குறித்து அவள் சர்வேசுரனைக் கேட்கிற மன்றாட்டெல்லாம் எளிதாய் வாங்குவாளென்றார். இதுவே அர்ச். சவேரியார் சொன்ன புத்தி. நீங்கள் இதைக் கேட்டு உங்கள் ஆத்தும சரீரத்தினுடைய அவசரங்களிலே சம்மனசுகளுடைய இராக்கினியை வேண்டிக்கொள்ள வேணுமென்று அறியக்கடவீர்களாக.



# ௨-ம் சனிக்கிழமைப்

## புதுமையாவது.



### தேவமாதாவை வேண்டிக்கொண்டதினால் சமுசாரத்தில் தீர்ந்த அநீத சந்தேகம்.

இஸ்பானிய என்கிற இராச்சியத்திலே ஒரு துரையானவன் இருந்தான். அவனுடைய பெண்சாதி ஆத்துமத்திலேயுஞ் சரீரத்திலேயும் அநேக நன்மை உள்ளவளாய்த் தேவமாதாவின் பேரிலே மிகுந்த பத்தியாயிருந்து அவளைக் குறித்துத் தினந் தப்பாமல் தாழ்ச்சியோடே ஐம்பத்துமூன்று மணிச் செபம் பண்ணி வருவாள். இப்படித் துரையும் அவளுந் தங்களுக்குள்ளே அநேக வருஷமாய்ச் சமாதானமாய் இருந்தார்கள்.

பசாசு இந்தப் புண்ணியவதி செய்த புண்ணியங்களின் பேரிலே மெத்தப் பகையாய் இருந்ததினாலே அவளுக்குக் கனமான கஸ்தி வருத்துவிக்கத்தக்கதாக ஒரு உபாயம் பண்ணிற்று. அதெப்படியென்றால் துரை ஒரு காரிய நிமித்தமாக அப்பாலே போய்க் கொஞ்சநாள் இருந்து திரும்ப அரண்மனையிலே வந்தவுடனே தான் அப்பாலே இருக்கிறபோது தன்னுடைய பெண்சாதி தனக்குத் துரோகம் பண்ணினாளென்று பசாசு தந்திரஞ் செய்து அவள் பேரிலே சந்தேகம் வருவித்தது. இந்தச் சந்தேகத்தினாலே பெண்சாதி பேரிலே இருந்த பழைய பட்சம் போய்க் கோபமாயிருந்தான். அந்தப் புண்ணியவதி தன்பேரிலே புருஷன் அரோசிகமாய் இருக்கிறதற்குக் காரணத்தை அறிந்து தன் துரைக்கு அப்படிக்கொத்த துரோகம்

ஒருகாலுஞ் செய்யவில்லையென்று அடிக்கடி துரை யோடே சொல்லிக்கொண்டு வருவாள்.

ஆனால் அவள் இப்படிச் சொல்வதினால் அந்தத் துரைக்குக் கோபமாயிற்று. துரைக்குப் பெண்சாதி பேரிலே எம்மாத்திரங் கோபமென்று ஒரு அடையாளத்தினாலே இப்போது சொல்லிக் காட்டுவோம். இந்தத் துரை தன்னுடைய மாமனாராகிற துரைக்கும் பயப்படாமல் தன்னுடைய பெண்சாதிக்கு ஆக்கினையாக அவளை ஒரு சின்ன அறையிலே போட்டு அடைத்துப் பூட்டி அந்த அறையிலே ஒரு ஊழியக்காரியை மாத்திரந் தினம் ஒருவிசை கொஞ்சஞ் சாப்பாடு கொண்டுபோய்க் கொடுக்கத் திட்டம் பண்ணி வேறே ஒருத்தரும் அங்கே போகாதபடிக்குக் கட்டளை இட்டான். ஆகையால் அவளுக்கு அந்த அறையிலே லேசான சாப்பாடுந் தண்ணீரும இருந்தது. இந்தப் பிரகாரமாய்ப் புண்ணியவதி நாலு மாதம் அந்தச் சிறையிலே இருந்தாள்.

நாலா மாதத்துக்குள்ளாகப் புருஷன் கோபத்தினால் இராத்திரியிலே தன் கையிலே உருவின வாளை எடுத்துக்கொண்டு அந்த அறையிலே போய் ஒரு பயித்தியக்காரனைப்போலே அந்த அறைக்குள்ளேயிருக்கிற கட்டில் நாற்காலி பெட்டிகள்மேலே வாளினாலே வெட்டுகிறபோது கோபத்தோடே கெட்டியாய்ச் சொன்னதாவது: அந்தத் துரோகி எங்கே இருக்கிறான். இப்போ இந்த அறைக்குள்ளே வருகிறபோது கண்டேனே. எங்கே காணாமல் மறைந்து போனானென்று கட்டிலின் கீழே இருக்கிறானோவென்று கோபத்தோடே சொன்னான். ஆனால் அவன் சந்தேகத்தினாலே அறைக்குள்ளேபோய் ஒருத்தன் போகிறாப்போலே காண்பித்ததல்லாமல் வேறே ஆள் அங்கே போனதில்லை. ஆகையால் அந்த அறைக்கு

ள்ளே ஆள் இல்லையென்று நன்றாய்ப் பார்த்துக் கோபத்தோடே வெளியிலே போனான். அந்தப் புண்ணியவதி இது கண்டு புருஷன் இம்மாத்திரங் கோபத்தோடே இருக்கிறபோதே ஒரு ஆதரவு இல்லாவிட்டால் ஒரு நாள் தன்னை வெட்டிப்போடுவானென்று தனக்குப் பூலோகத்தில் வேறே உதவி இல்லையென்று யோசித்துத் தேவமாதா உதவி வேணுமென்று மகா அழுகையோடே வேண்டிக்கொண்டாள். இவளுடைய வேண்டுதலினாலே புருஷன் கோபஞ் சற்றும் அமர்ந்திருந்தது.

இப்படி இருக்கையிலே ஊழியக்காரி வழியாகத் தன் புருஷனை வரச் சொல்லிப் புருஷனிடத்தில் அவள் சொன்னதாவது: சுவாமீ எனக்கு இந்தத் துரோகம் உண்டோ இல்லையோவென்று நீர் அறியத் தக்கதாக நீரும் நானும் இந்தக் காரியத்தைத் தேவமாதாவின் பாதத்தில் வைக்கவேணும். இந்தச் செபமாலை வாங்கிக்கொள்ளும். நீரும் நானும் இந்தச் சேதி மெய்யோ பொய்யோவென்று தேவமாதாவின் கிருபையினாலே அறியுமட்டும் அவளைக் குறித்துத் தினம் ஐம்பத்து மூன்றுமணிச் செபம் பண்ணிக்கொண்டு வரவேணும். அப்போது என்பேரிலே குற்றம் உண்டானால் என்னுடைய தலையை வெட்டிப் போடும். இந்தக் குற்றம் இல்லாவிட்டால் நீரறிந்து என்பேரிலுண்டான கோபத்தை விடவேணுமென்று அழுதுகொண்டு சொன்னாள். அப்போது துரை தன் பெண்சாதிபேரிலே சற்றிரக்கம் வந்ததினாலே நல்லதென்று சம்மதித்து அங்கேதானே இரண்டு பேருந் தேவமாதாவைக் குறித்து ஐம்பத்துமூன்று மணிச் செபம் பண்ணினார்கள்.

பிற்பாடு துரை தன்னுடைய அறையிலேயும் வருடைய பெண்சாதி வேறே அறையிலேயும்

திரை போகிறபோது அந்த இராத்திரியிலேதானே தயையுள்ள தேவமாதா தாமதமில்லாமல் அந்தப் புண்ணியவதிக்குச் சகாயமாய் இருந்தாள். அதெப்படியென்றால் அந்த இராத்திரி துரை நித்திரை போகிறபோது தேவமாதா மகா மகிமையோடே ஒரு பெரிய இராக்கினியைப்போலே துரைக்குக் காண்பித்து அவனை மகா கோபத்தோடே பார்த்துத் திருவுளம பற்றினதாவது: நீ உன்னுடைய பெண்சாதிபேரிலே அநியாயமாய்க் கோபமாயிருந்து அவளுக்குக் கஸ்தி வருவித்ததினாலே நாம் உன்பேரிலே மெத்தத் தாங்கலாய் இருக்கிறோம், அவள் ஒருநாளும் உனக்குத் துரோகஞ் செய்யவில்லை, இனிமேல் இந்த முகாந்தரமாக நீ அவளைத் தெண்டித்தால் உனக்குப் பூலோகத்திலே பொல்லாப்பு வருகிறதல்லாமல் நீ செத்த பிறகு உனக்குக் கனமான ஆக்கினை வருமென்று கோபத்தோடே சொன்னபிற்பாடு தேவமாதா காணாமல் மறைந்துபோனாள்.

துரை இந்தத் தெரிசனத்தைக் கண்டதினால் அவனுக்கு வெட்கமும் பயமும் வந்தது. அந்த இராத்திரிதானே தாமதமில்லாமல் பெண்சாதியினுடைய அறைக்குப் போய் அவள் முன்பாக அழுதுகொண்டு நடந்த சேதியெல்லாம் அவளோடே சொன்னபிற்பாடு அறியாமற் செய்தேனென்று சொல்லி எனக்கு இனிமேல் கஸ்தி வராதபடிக்கு எனக்காக நீ தேவமாதாவை வேண்டிக்கொள்ள வேணுமென்று பெண்சாதியை மன்றாடினான். பெண்சாதி நல்ல புண்ணியவதியாய் இருந்தபடியினாலே புருஷன் தனக்குச் செய்த பொல்லாப்புக் கஸ்தியை விட்டுப் பழிவாங்க வேணுமென்கிற மனசில்லாமல் புருஷன்பேரிலே பட்சமாய் இருந்தாள். இதுவுமல்லாமல் அவள் சந்தோஷப்பட்டுத் தேவமாதாவின் சுரூபத்து

க்கு முன்பாகப் போய் முழங்காலிலேயிருந்து தேவ் மாதா னைக்குச் செய்த இந்தக் கனமான உபகாரத் துக்காக நன்றியறிந்த மனதோடே தோத்திரம் பண் ணினாள். பிறபாடு பெண்சாதி புருஷன் இருவருஞ் சாகிறமட்டும் எப்போதுஞ் சமாதான பட்சமாய் இ ருந்தார்கள் இதல்லாமல் அவர்களுக்கு இந்த வழி யாகத் தேவமாதாவின் பேரிலே மிகவும் பத்தி வந் தது.

கிறீஸ்துவர்களே நாம் இப்போது சொன்ன புது மையினாலே உங்களுடைய ஆத்துமத்துக்கு அநேக ஞானப் பிரயோசனங்கள் வரலாம். முந்த முந்தச் சிலபேர்கள் கலியாணஞ் செய்த துவக்கத்திலே கொ ஞ்ச நாள் பட்சமாய் இருந்தபிறபாடு புருஷன் பெ ண்சாதி இருவருக்குள்ளே மனஸ்தாபம் வருகிறதெ ன்ன. சிலவிசை கலியாணஞ் செய்கிறதற்கு முன் னே ஆண்பிள்ளைகளுக்கும் பெண்பிள்ளைகளுக்கும் பாவம் உண்டானபடியினாலே அந்தப் பாவத்துக்கு ஆக்கினையாக இந்த மனஸ்தாபம் வருகிறது. இதல் லாமல் சிலபேர்கள் தக்க ஆயத்தம் இல்லாமல் கலி யாணஞ் செய்ததினாலே சர்வேசுரன் அந்தக் கலியா ணத்துக்கு ஆசீர்வாதங் கொடுக்கவில்லை. ஆகையால் அதற்கு ஆக்கினையாக இருவருக்குள்ளே வெறுப்பும் மனஸ்தாபமும வருகின்றது. ஆனபடியினாலே புரு ஷன் பெண்சாதி சமாதானமாய் இருக்கத்தக்கதாக நாம் இப்போது சொன்ன பாவங்களுக்குப் பயந்து நடக்கவேண்டும்.

இரண்டாவது. தம்பீ உனக்குப் பெண்சாதி உண் டானால் அவளைத் தெண்டிக்கிறதற்கு முன்னே அ வளிடத்திற் குற்றமுண்டோ இல்லையோவென்று விசாரிக்க வேணும். உன்னுடைய சந்தேகத்தினாலே மாத்திரம் நீ உன் பெண்சாதியை அநியாயமாய்ச்

தெண்டித்தால் உனக்குப் பொல்லாப்பு வரும். சில பேர் குற்றமில்லாதிருந்தாலுங் கோபத்தினாலே பெண்சாதிமேலே குற்றஞ் சொல்லுவார்கள். தங்கையே உன்னுடைய புருஷனுக்கு ஆகாத குண முண்டானால் உன்னுடைய பொறுமையினாலே அவனுடைய ஆகாத குணத்தை அமரச்செய்ய வேணும். அதேதென்றால் உன்னுடைய புருஷன் கோபத்தினாலே உன்னை ஒரு வார்த்தை சொன்னால் நீ அதற்கு இரட்டிப்பாகப் பேசினால் அவனுக்குக் கோபம் அதிகம் வரும். நீ உன்னுடைய புருஷனுக்குச் சரியாய்க் கீழ்ப்படிந்திருந்தாலும் அவன் உனக்கு வருத்துவிக்கிற கஸ்தியை நீ பொறுமையோடே அநுபவிக்க வேணும். இதல்லாமல் உன் புருஷனுக்கு உன் பேரில் சந்தேகம் வாராதபடிக்குப் பிறத்தியாரோடே ஆகாத பட்சத்தைக் காண்பியாமல் உன்னுடைய நல்லொழுக்கப் புண்ணியங்களை அவனுக்குக் காண்பிக்க வேணும்.

மூன்றாவது. நாம் இப்போது சொன்ன புதுமையிலே து பாக்கும் பெண்சாதிக்கும் வந்த கஸ்தி நீங்கிப்போகத் தக்கதாகத் தன் புருஷனுடைய நிஷ்டூரத்தையுஞ் சந்தேகத்தையுந் தன் உறவின் முறையாருக்குச் சொல்லாமல் தேவமாதாவைக் குறித்து ஐம்பத்துமூன்று மணிச் செபம் வேண்டிக்கொண்டாள். அந்தச் செபத்தின் வழியாக அவளுக்குச் சந்தோஷமும் புருஷனுக்கு நல்ல குணமுந் தேவமாதா வருத்துவித்தாள். ஆகையால் உங்களுக்கு வந்த கஸ்தி நீங்கிப்போகத் தக்கதாகவும் உங்களுக்குச் சந்தோஷம் வாய்க்கத்தக்கதாகவும் ஐம்பத்து மூன்றுமணிச் செபத்தைக் கொண்டு தினந் தேவமாதாவை வேண்டிக்கொள்ளத் தக்கதென்று அறியக்கடவீர்களாக.

# ௩-ம் சனிக்கிழமைப்

## புதுமையாவது.

### ஒரு யூதனைச் சத்திய வேதத்திலே திருப்பத் தேவமாதா செய்த கிருபை.

அங்கிலந்தேர் என்கிற இராச்சியத்தில் பின்னும் யாக்கோபு அல்லது யாகப்பன் என்னும் ஓர் யூதன் இருந்தான். அவன் லொந்தரென்கிற பட்டணத்திலே இருந்து வேறே ஊருக்குப் பயணம் போகிற போது வழியிலே காட்டுக்குள்ளே கள்ளர் இவனைப் பிடித்து நன்றாய் அடித்துக் காலிலே விலங்குபோட்டார்கள். இவன் ஆஸ்திக்காரனாய் இருந்ததைக் கள்ளர் அறிந்து இவனைக் கட்டாயப்படுத்தி உன் கைச்சீட்டு உன்னுடைய வீட்டுக்கு எழுதி அநேகமாயிரம் பொன் இந்தக் காட்டிலே அழைப்பித்தால் பணம் வந்த பிற்பாடு உன்னை விட்டுவிடுவோமென்றார்கள். அவர்கள் சொன்னபடியே யாகப்பன் கேட்டுத் தன் வீட்டுக்குச் சீட்டெழுதினான். பிற்பாடு கள்ளர் இவனைக் காவலிலே வைத்தார்கள். இந்தப்பிரகாரமாய் அங்கே மூன்றுநாள் இருந்தான். இந்த மூன்று நாளைக்குள்ளாகப் பணம் வராததினாலேயும் இவனுக்குச் சாப்பாடு மெத்தக் கொஞ்சமானதினாலேயும் மிகுந்த சலிப்பாயிருந்தான்.

மூன்றுநாள் இராத்திரியில் ஒரு தெரிசனங் கண்டான். அதேதென்றால் ஒரு இராக்கினி மகா மகிமையோடே தன்கிட்ட இருக்கிறதையும் அந்த இராக்கினி முகம் ஒரு சூரியனைப்போல் இருந்ததையும் இந்த இராக்கினி இவன் கிட்ட வருகிற போது இவள் கிருபையினாலே இவனுடைய காலின்

விலங்கு தெறித்துப்போனதையுங் கண்டான். அவன் இதைக் கண்டவுடனே அந்த இராக்கினியினுடைய மகிமையுள்ள முகத்தைப் பார்த்துத் தாழ்ச்சியோடே சொன்னதாவது:

என்னாண்டவளே தேவரீர் எனக்கு இம்மாத்திரஞ் சகாயஞ் செய்ததினாலே தேவரீர் ஆரென்று அறிய ஆசையாயிருக்கிறேனென்று சொன்னதற்கு அந்த இராக்கினி சொன்னதாவது: யூதரான நீங்கள் சேசுநாதரைச் சிலுவையிலே அறைந்தீர்களே, அவருடைய தாயாராகிற கன்னிமரியாயி நான்தான், நீங்கள் எப்போதும் நம்முடைய பேரிலே தூஷணஞ் சொன்னாலும் பொல்லாப்பு செய்கிறவர்களுக்கு நன்மை செய்கிற குணம் நமக்கு இருக்கிறபடியினாலே நாம உன்னுடைய ஆத்துமத்துக்குஞ் சரீரத்துக்குஞ் சகாயமாயிருக்க இங்கே எழுந்தருளி வந்தோம். நாம் இங்கே வந்ததினாலே உன்னுடைய காலிலேயிருந்த விலங்கு போச்சுது, இனி உன்னுடைய ஆத்துமத்துக்கு ஞானப்பிரயோசனம் வரத்தக்கதாக இப்போது நம்மோடேகூட வரவேணுமென்று திருவுளம் பற்றின பிற்பாடு தேவமாதாவும் அவனுங் கிட்ட இருக்கிற ஒரு மலையின்மேல் ஏறினார்கள். அந்த மலையின் கீழே ஒரு பக்கத்திலே ஒரு கணவாயிருந்தது. அந்தக் கணவாய்க்குள்ளே தண்ணீர்போலே வெகு நெருப்பிருந்ததும் அல்லாமல் அந்த நெருப்புக்குள்ளே அநேக மனுஷர் வேகிறதை இவன் கண்டான். அந்த நெருப்புக்குள்ளே இருக்கிறவர்கள் மிகுந்த கஸ்தியினாலே அழுகிற சத்தங் கணவாய்ச் சுற்றிலுங் கேட்கப்பட்டது. இவர்களைக் கண்டதினாலேயும் அந்த அழுகைச் சத்தங் கேட்டதினாலேயும் மெத்த இரக்கமாயிருந்தான். அப்போது தேவமாதா இவனைப் பார்த்துச் சொன்னதாவது:

இந்த நெருப்பு யூதரொன்கிற உங்களைக் குறித்துச் சர்வேசுரன் உண்டாக்கினார். நெருப்புக்குள்ளே இருக்கிறவர்கள் உன்னுடைய உறவின்முறையார். நீ அவர்களைப்போலே சாகுமட்டும் நடந்தால் இந்த நெருப்பிலே எப்போதுமெப்போதும் இருப்பாய். ஆனால் நீ இப்போதே கண்ட இந்த நெருப்பைப் பார்த்தாயே. இப்போது ஆகாசத்தைப் பாரென்று தேவமாதா சொன்னவுடனே பரமண்டலந் திறந்து மோட்சத்திலே உண்டான அநேக நன்மைகளைக் காண்பித்தாள். அவன் அந்தப் பாக்கியத்தைக் காண்கிறபோது தேவமாதா அவனோடே சொன்னதாவது: இந்த நல்ல இராச்சியத்திலே உன்னுடைய மதத்திலே நடந்தவர்கள் போகக்கூடாது. சேசுநாதர் சித்தத்தின்படியே நடந்தவர்கள் அங்கே போகலாம். நீ இந்த நல்ல இராச்சியத்திலே போகிறதற்கு மனதாயிருந்தால் ஞானஸ்நானத்தின் வழியாக அங்கே போகலாம். யாகப்பா நாம் இப்போது உனக்குச் செய்த உபகாரங்களை எப்போதும் நினைத்துக்கொள்ளென்று திருவுளம்பற்றின பிற்பாடு தேவமாதா காணாமல் மறைந்து போனாள்.

அவன் தனியே இருந்து மறுநாள் சூரியன் உதயமான பிற்பாடு கண்ட காட்சி எல்லாம் நன்றாய் நினைத்துப் பாச்சனென்கிற ஊரிலே இருக்கிற சந்நியாசிகள் மடத்திலே போய் நடந்தசெய்தி எல்லாஞ் சொன்ன பிற்பாடு தான் ஞானஸ்நானம் பெறவேணுமென்று கேட்டான். அவர்கள் இந்தச் சேதியை அறிந்து சந்தோஷப்பட்டு இவனுக்கு உபதேசமெல்லாஞ் சொல்லி அருளப்பனென்று பேரிட்டு ஞானஸ்நானங் கொடுத்தார்கள்.

கிறீஸ்துவர்களே, நாம் இப்போது சொன்ன புதுமையினாலே உங்களுடைய ஆத்துமங்களுக்கு இ

ண்டு ஞானப்பிரயோசனம் வரலாம். முந்தமுந்த ஒரு யூதன் திருச்சபையில் உட்படுகிறது மெத்தப் பிரயாசம்: ஆனால் இப்போது நாம் சொன்ன புதுமையிலே யூதனாகிற யாகப்பன் தேவமாதாவின் உதவியினாலே நரகத்தையும் மோட்சத்தையுங் கொஞ்சங் கண்டு திருச்சபையில் உட்பட்டான். ஆகையால் உங்களுக்குள்ளே யாதொருத்தன் பாவியாயிருந்தால் அந்தப் பாவி தேவமாதாவின் உதவியினாலே நரகத்தின்பேரிலேயும் மோட்சத்தின்பேரிலேயுந் தியானித்தால் அந்தப் பாவி மனந்திரும்பலாம்.

இரண்டாவது நாம் இப்போது சொன்ன யாகப்பன் தேவமாதாவுக்கு ஊழியம் பண்ணாமலுந் தேவமாதாவை வேண்டிக்கொள்ளாமலுந் தேவமாதாவை அறியாமல் தூஷணஞ்சொல்லி இருந்தாலுந் தேவமாதா அவனுடைய ஆத்தும சரீரத்துக்குக் கனமான சகாயம் பண்ணினாள். ஆகையால் நீ பாவியாயிருந்தாலும் உன்னுடைய கஸ்தி நீங்கிப்போகத் தக்கதாக நீ தேவமாதாவை வேண்டிக்கொண்டால் தேவமாதா நீ செய்த பாவங்களைப் பாராமல் தம்முடைய நல்ல குணத்தைக் குறித்துச் சந்தேகமில்லாமல் உனக்குச் சகாயமாயிருப்பாள். இதல்லாமல் தேவமாதாவுக்கு இந்த நல்ல குணம் இருக்கிறபடியினாலே நீங்கள் சந்தோஷத்துடனே தேவமாதாவுக்கு ஊழியஞ் செய்யக் கடவீர்களாக.



# ௪-ம் சனிக்கிழமைப்

## புதுமையாவது.

தேவமாதாவைத் தப்பாமல் வேண்டிக்கொண்ட
திஞல் கிடைத்த இரக்ஷணியம்.

பிலாந்திராவென்கிற இராச்சியத்திலே ஒருபெரிய பட்டணத்திலே இரண்டு வாலர் சாஸ்திரங்களைப் படித்திருந்தார்கள். இவர்கள் படித்திருக்கையிலே பாவத்தின் வழியை வெகுவாய்ப் படித்தார்கள். அப்படி இரண்டு வாலரும் மோக பாவத்திலே அமிழ்ந்தி இருக்கிறதிஞலே ஒரு நாள் இராத்திரி பரஸ்திரீகள் வீட்டுக்குப்போய் அங்கே மனதின் படியே பாவங்களைக் கட்டிக்கொண்டார்கள். நடுச்சாமத்திலே இந்த இரண்டு பேருக்குள்ளே ஒருவஞகிய ரிக்கார்து என்கிறவன் மெத்த இளைப்பாயிருக்கிற படியிஞலே தன் வீட்டுக்குப் போகவேணுமென்று சிநேகிதனுக்குச் சொல்லித் தனியே வீட்டுக்குப் போஞன். இவன் காமபாவங்களைக் கட்டிக்கொண்டாலுந் தேவமாதாவைக் குறித்துத் தினங்கொஞ்சம் பிரியீதத்தமந்திரம் வேண்டிக்கொள்ள அவனுக்குப் பழக்கமிருந்தது. அந்தச் சமயத்திலே அவனுக்கு இளைப்பிஞலேயும் நித்திரை நிமித்தமாய்க் கண்விழிக்க மாட்டாமல் இருந்ததிஞலேயுந் தேவமாதாவை நினைத்து அந்த மந்திரம் வேண்டிக் கொள்ளுகிறது அவனுக்கு மெத்தப் பிரயாசமாய் இருந்தது. எத்தனைப் பிரயாசமிருந்தாலும் ரிக்கார்தென்கிறவன் கட்டாயம்போலே பத்தியில்லாமல் சீக்கிரமாய்த் தேவமாதாவைக்குறித்து அந்தக் கொ

ஞ்சம் பிரியதத்த மந்திரம் வேண்டிக்கொண்ட பிற்பாடு நித்திரைபோனான்.

நித்திரையின் துவக்கத்திலே கதவைத் தட்டுகிற சத்தங் கேட்டான். அந்தச் சத்தத்தினாலே விழித்த பிற்பாடு கதவைத் திறக்க ஆயத்தமாயிருந்தான். ஆனால் கதவு சாத்தியிருந்தாலுங் கதவு திறவாமல் ஒருவன் உள்ளே வந்தான். ரிக்கார்தென்கிறவன் பயப்பட்டு நீ ஆர் கதவு அடைத்திருக்கையிலே எப்படி வந்தாயென்று பயத்தோடே கேட்டான். அதற்கு வந்தவன் சொன்னது: நான் உன்னுடைய சிநேகிதனல்லவோ? உன்னோடேகூட இன்று இராத்திரி பாவஞ் செய்யப் போனவனென்று சொன்னான். அதற்கு ரிக்கார்தென்கிறவன் வெகுவாய்ப் பயந்து என் சர்வேசுராவென்று சொல்லி வந்தவனைப் பார்த்து உனக்கு வேறே முகம் இருக்கிறதற்குக் காரணம் என்னவென்று கேட்டான். அதற்கு வந்தவன் இந்த முகஞ் செத்துப்போன பிற்பாடு காண்பிக்கிறதென்று சொன்னான். அதற்கு ரிக்கார்தென்கிறவன் ஐயையோ நீ செத்துப்போனாயோ எப்படிச் செத்தாய். நடந்த சேதியை என்னோடே சொல்லென்று கேட்டான். அதற்கு வந்தவன் நீ இங்கே வந்தபிற்பாடு நான் அந்தப் பொல்லாத வீட்டிலே வேறே பாவத்தைச் செய்து இங்கே வருகிறபோது தெருவிலே ஒரு பசாசு எனக்குக் காண்பித்துத் தன் கையினாலே என் கழுத்தைப் பிடித்து நெருக்கி என்னைக் கொன்றுபோட்டது. என்னுடைய சரீரம் அங்கேதானே கிடக்கின்றது. நான் நரகத்துக்குப் போனேனென்று சொன்னான்.

ரிக்கார்தென்கிறவன் இந்தச் சேதியை அறிந்து இரக்கமாயிருந்தாலும் ஐயையோ நிர்ப்பாக்கியமுள்ளவனே, எப்போதும் நரகத்திலே இருப்பாயோ.

வென்று சொன்னான். அதற்கு வந்தவன் சொன்னது: எம்மாத்திரம் நான் நிர்ப்பாக்கியம் உள்ளவனோ அம்மாத்திரம் நீ தேவமாதாவின் கிருபையினாலே பாக்கியம் உள்ளவனாய் இருக்கிறாய். அதேதென்றால் இந்த இராத்திரியிலேதானே என்னைப் பசாசு கொலை செய்தாற்போலே உன்னையுங் கொலை செய்யச் சர்வேசுரனை உத்தாரங் கேட்டது. ஆனால் நீ எப்போதுந் தேவமாதாவைக் குறித்து வேண்டிக் கொண்டபடியினாலே நீ தபசு செய்கிறதற்குச் சர்வேசுரன் காலங் கட்டளையிடும்படியாகத் தேவமாதா சர்வேசுரனை மன்றாடினாள். ஆனபடியினாலே எனக்கு வந்த கஸ்தி தேவமாதாவின் உதவியினால் உனக்கு வரவில்லை. இதல்லாமல் நீ பாவத்தை விட்டுத் தபசுசெய்யத் தக்கதாகத் தேவமாதா என்னை இங்கே அனுப்புவித்தாள். எனக்கு வந்த ஆக்கினையைப் பார்த்துப் பாவத்தின் தொழிலை விட்டுவிடு வென்றுசொல்லித் தன்னுடைய மேலே இருக்கிற கம்பளியைத் திறந்து மேலே சுற்றியெரிகிற நெருப்புகளைக் காண்பித்த பின்பு மறைந்துபோனான்.

ரிக்கார்தென்கிறவன் இந்தச் சேதியை அறிந்து எம்மாத்திரம் பயப்பட்டான் என்று சொல்லக் கூடாது. ஆனால் அவன் சாஷ்டாங்கமாக உடனே விழுந்து செய்த பாவத்துக்காக உத்தம மனஸ்தாபத்தோடே அழுதான். இதுவும் அல்லாமல் தனக்குத் தேவமாதா செய்த கனமான சகாயத்துக்கு நன்றி அறிந்த மனதோடே தோத்திரஞ்செய்து பிற்பாடு தான் செய்த பாவங்களுக்குத் தபசு செய்யத்தக்கதாக அர்ச். ஐந்துகாயப் பிராஞ்சீஸ்கு சபையில் உட்பட அந்தச் சபைச் சிரேஷ்டரை உத்தாரங் கேட்டான். அவனுடைய ஆகாத நடக்கை எல்லாம் அந்தச் சிரேஷ்டர் அறிந்திருந்தபடியினாலே அவனுக்கு

மையயான மனதுண்டோ இல்லையோவென்று சந்தேகப்பட்டுத் துவக்கத்திலே சம்மதிக்கவில்லை.

ஆனால் ரிக்கார்தென்கிறவன் சிரேஷ்டரோடு நடந்த சேதியெல்லாஞ் சொன்ன பிற்பாடு ரிக்கார்தென்கிறவனுடைய சிநேகிதன் செத்துப்போய்விட்ட பிரேதந் தெருவிலே கிடக்கிறதைப் பார்க்கச் சிரேஷ்டர் இரண்டு சந்நியாசிகளை அனுப்புவித்தார். அவர்கள் அங்கே வந்து தெருவிலே கிடக்கிற அந்தச் சரீரத்தைக் கண்டார்கள். அதினுடைய முகம் ஒருவிதமாய் நெருப்பு கரிபோலே இருக்கிறதையும் பசாசு கழுத்தை முறித்த காயத்தையுங் கண்டு மடத்துக்குப் போய்ச் சிரேஷ்டருக்கு இந்தச் சேதியைச் சொன்னார்கள். ஆகையால் ரிக்கார்தென்பவன் சபையில் உட்படச் சிரேஷ்டர் சம்மதித்ததினாலே சபையில் உட்பட்டான். பிற்பாடு ரிக்கார்தென்கிறவன் அங்கே ஒருசந்தியினாலேயுஞ் சங்கிலியினாலேயுந் தன் சரீரத்தை நன்றாய்த் தெண்டித்து அநேகநாள் தபசு செய்துகொண்டுவந்தான்.

பிற்பாடு சர்வேசுரனுடைய வேதத்தை அஞ்ஞானிகளுக்குப் படிப்பிக்கத் தக்கதாகச் சப்போனியாவென்கிற இராச்சியத்திலே போய் அங்கே அநேகம் பிரயாசம் அநுபவித்த பிற்பாடு சர்வேசுரனுடைய வேத நிமித்தமாக அஞ்ஞானிகள் இவனைப் பிடித்து நெருப்பிலே சுட்டுப்போட்டார்கள்.

ஆகையால் கிறீஸ்துவர்களே அவருக்குத் தேவமாதாவினுடைய கிருபையினாலே வேத சாட்சியாகிற நல்ல மரணம் வந்தது. தம்பிமாரே நம்மாலே இப்போது சொல்லப்பட்ட புதுமையினாலே உங்கள் ஆத்துமங்களுக்கு அநேக ஞானநன்மைகள் வரவேணும். முந்தமுந்த நீங்கள் இராத்திரியிலே சாவான பாவத்தோடு நித்திரை போகாதேயுங்கள்.

அதேதென்றால் நித்திரை சாவினுடைய ரூபமாய் இருக்கின்றது. நித்திரை செய்கிறவன் பாதி சாவு செத்தவன்போலே இருக்கிறான்.

ஆகையால் நீ நித்திரை போகிறபோது சாவு வருமேயாகில் அப்போது நீ சாவான பாவத்தோடே இருந்தால் நரகத்திலே போவாய். பகலிலே நீ ஒரு சாவான பாவத்திலே விழுந்தால் இராத்திரி நித்திரை போகிறதற்குமுன்னே நல்ல பாவசங்கீர்த்தனமாகிலும் உத்தம மனஸ்தாபமென்கிலும் முடிக்கவேணும். தம்பிமாரே தங்கைமாரே, இராத்திரியிலே நீங்கள் நித்திரை போகிறதற்கு முன்னே உங்களுடைய படுக்கைமேலே ஒரு நல்லபாம்பைக் கண்டால் அந்தப் பாம்பைச் சட்டைபண்ணாமல் சந்தோஷமாய் அந்த வீட்டிலே தானே நித்திரை செய்வீர்களோ இல்லையே. சாவான பாவம் ஆத்துமத்துக்கு நல்ல பாம்பைப்போலே இருக்கின்றது. ஆகையால் நீ சாவான பாவத்தோடிருந்தால் விஷத்துக்குப் பயப்படாமல் எப்படி நித்திரை போகிறாய்.

இரண்டாவது. நீ தேவமாதாவைக் குறித்துத் தினந்தினம் ஏதாகிலுந் தோத்திரஞ் செய்யப் பழக்கமாய் இருந்தால் தினந் தப்பாமல் அந்தப் புண்ணியஞ் செய்யவேணும். ஆகையால் நீ பயணத்திலேயாகிலும் வெளியிலென்கிலும் எத்தனை இளைப்பாய் இருந்தாலும் அந்த இளைப்பு நிமித்தமாக இராத்திரியிலே கண் விழிக்கமாட்டாதிருந்தாலும் நித்திரை போகிறதற்கு முன்னே கட்டாயமாய்த் தேவமாதாவைக் குறித்து அந்தச் செபஞ் செய்யவேணும். அதேனென்றால் நீ இளைப்பினாலே ஒரு நாள் செபஞ் செய்யாமல் நித்திரை போனால் அந்த இராத்திரி தானே சரீரத்துக்கும் ஆத்துமத்துக்குங் கஸ்தி மோசம் வரலாம்.

மூன்றாவது. நீ இந்தமட்டுந் தேவமாதாவின் கிருபையினாலே நாகத்தில் போகாமலிருக்கிறதினால் உன்னுடைய மனது திரும்புகிறதற்கான காலமே வந்தது. நீ பாவத்தை விடத்தக்கதாகத் தேவமாதா உன்னை இந்தப் புதுமையைச் சொல்லப்பண்ணினாள். இனிமேல் நீ பாவத்தை விடுகிறதற்கு நேரமும் இடமும் இருக்குமோ இல்லையோ தெரியாது. நாம் இப்போ சொன்ன வாலிபனுடைய சரித்திரத்தைச் சொல்கிறவன் தேவமாதா உதவியினால் பாவத்தை விட்டாப்போல் நீ அந்த ஆண்டவளுடைய கிருபையினாலே பாவத்தை விடவேணுமென்று அறியக்கடவாயாக.

---

## ரு-ம் சனிக்கிழமைப்

புதுமையாவது.

---

தேவமாதாவின் மன்றாட்டினாலே தேவ கோபாக்கினை அமருகிறதைக் காட்டுகிற புதுமை

பிலோரேஞ்சு என்கிற பட்டணத்துக்கு மேற்றிராணியாராகிய அர்ச். அந்தோனீன் என்கிறவர் தம்முடைய புத்தகத்திலே ஒரு சேதியை எழுதினார். அதேதென்றால் தம்முடைய நாளிலே பூலோகத்திலெங்கும் மனுஷர் மனசின்படியே அநேக பாவங்களைச் கட்டிக்கொண்டதினாலே சர்வேசுரன் பூலோகத்தின்பேரிலே கோபமாயிருந்து பூலோகத்துக்குக் கனமான ஆக்கினையிடச் சித்தமானார். அந்த நாளிலே பூலோகத்திலே அநேகம் பாவிகள் இருந்தாலும்

ஒரு குடியானவன் பாவம் இல்லாமல் புண்ணியவா ளாய் இருந்தபடியினாலே சர்வேசுரன் அவன்பேரி லே மெத்தப் பட்சமாயிருந்தார். இவன் தியானத் திலே இருக்கிறபோது சேசுநாதர் இவனுக்குக் கா ண்பித்துத் திருவுளம் பற்றினதாவது:

உன்னுடைய வீட்டிலே இருக்கிற மூன்று அப்ப ங்களை எடுத்துக்கொண்டு குளத்திலே போய்த் தண் ணீருக்குள்ளே போடென்று கட்டளையிட்டார். இந் தக் குடியானவனுக்குக் கட்டளையின் இரகசியந் தெ ரியாததினாலே ஆண்டவர் திருவுளம் பற்றினபடிக்கு அந்த மூன்று அப்பங்களை எடுத்துக் குளத்துத் த ண்ணீரிலே போடுகிறதற்கு ஆயத்தமாயிருக்கிற ச மயத்திலே ஒரு இராக்கினி மகா மகிமையோடே இந்தக் குளத்தின் கிட்டே அவனுக்குக் காண்பித்து அந்த மூன்று அப்பங்களைத் தண்ணீரிலே போடவே ண்டாமென்று சொன்னாள். அந்தக் குடியானவன் அங்கே காண்பித்த ஆண்டவளுக்குப் பயந்து அந்த அப்பங்களைத் தண்ணீரிலே போடாமல் தன் வீட்டு க்குக் கொண்டுபோனான்.

சேசுநாதர் திரும்ப அவனுக்குக் காண்பித்து நாம் முன்னே சொன்ன பிரகாரத்துக்கு மூன்று அப்பங் களையுந் தண்ணீரிலே போடென்று கட்டளையிட் டார். அவன் பயந்து உடனே தண்ணீரின் கிட்டப் போய் அந்த மூன்று அப்பங்களைத் தண்ணீரிலே போடுகிற சமயத்திலே முன்னே காண்பித்த ஆண் டவள் அவனோடே சொன்னதாவது: இந்த மூன்று அப்பங்களைத் தண்ணீரிலே போடாதே. இந்த அப் பங்களைத் தண்ணீரிலே போடுகிற அர்த்தம் உனக் குத் தெரியாது. நீ தண்ணீரிலே இந்த அப்பங்களைப் போட்டால் பூலோகத்துக்கு எத்தனை பொல்லாப்பு வருமென்று நீ அறிவாயாகில் ஐயோ எம்மாத்திரம்

அழுவாயென்று சொன்னாள். அந்தக் குடியானவன் இந்தச் சேதியை அறிந்து என்ன செய்வேனென்று தத்தளித்துக்கொண்டிருந்தான். அதேதென்றால் இந்த ஆண்டவள் சொன்னபடி கேட்டால் சேசுநாதர் சொன்னபடி கேளாமல் இருக்கவேணும். ஆனால் பூலோகத்துக்குப் பொல்லாப்பு வாராதபடிக்கு அந்த அப்பங்களைத் தண்ணீரிலே போடாமல் திரும்ப வீட்டுக்குக் கொண்டுபோனான்.

வீடு சேர்ந்தவுடனே அவனுக்கு மூன்றும் விசையுஞ் சேசுநாதர் காண்பித்துத் திருவுளம் பற்றினதாவது: உனக்குக் காண்பித்த ஆண்டவள் சொன்னபடி நீ கேட்டாய். நல்லது, திரும்ப நீ அந்தத் தண்ணீர்க் கிட்டப்போய் அந்த ஆண்டவள் சொன்னபடி கேளென்று சொன்னார். பிற்பாடு அவன் சந்தோஷப்பட்டு மூன்று அப்பங்களையும் எடுத்துக்கொண்டு தண்ணீரின் கிட்டப்போனான். அங்கே அந்த ஆண்டவள் காண்பித்து அவனோடே சொன்னதாவது:

நாஞ் சேசுநாதருடைய தாயாராகிற அர்ச். கன்னிமரியாயியாய் இருக்கிறோம். நம்முடைய சேசுநாதர் பூலோகத்திலே இருக்கிற மனிதர் செய்கிற பாவத்தினாலே பூலோகத்துக்குக் கனமான ஆக்கினை இடச் சித்தமாய் இருந்தார். நீ அப்போ கொண்டு வந்த மூன்று அப்பங்கள் தண்ணீருக்குள்ளே அழுந்திப் போவதுபோலே பூலோகத்திலே இருக்கிற மனிதர் ஆக்கினைக்காகப் பொல்லாப்புக்குள்ளே அழுந்திப்போகவேணும். ஆனால் நாம் பாவிகளுக்கு அடைக்கலமாய் இருக்கிறபடியினாலே மனுஷருக்கு இந்தக் கனமான பொல்லாப்பு வாராதபடிக்கு நம்முடைய மகனை மன்றாடினோம். நம்முடைய மன்றாட்

டினாலே சேசுநாதர் சித்தமிரங்கினார். பூலோகத்தி லே இருக்கிற பாவிகளுக்குள்ளே ஒரு பங்கு மனு ஷர் தங்கள் பாவத்தினாலே தபசு பண்ணாமல் இருப் பார்கள் என்கிறதினாலே அவர்களுக்குச் சர்வேசு ரன் ஆக்கினை இடுவார். ஆகையால் இந்த மூன்று அப்பங்களுக்குள் ஒரு அப்பமாத்திரம் தண்ணீரிலே போடச் சர்வேசுரன் கட்டளையிட்டார். மற்ற இர ண்டு பங்குள்ள அப்பத்தைத் தண்ணீரிலே போடா தேயென்று தேவமாதா திருவுளம் பற்றினாள். ஆ கையால் அந்தக் குடியானவன் மூன்று அப்பங்களு க்குள்ளே ஒரு அப்பம மாத்திரந் தண்ணீரிலே போ ட்டபிற்பாடு தேவமாதா அவனோடே சொன்னதா வது: நீ தாமதம் இல்லாமல் இப்போது நடந்த சே தியைப் பாவிகளுக்கு அறியப்பண்ணு. பாவிகள் தங்கள் பாவத்துக்காகத் தாமதமில்லாமல் தபசு செ ய்ய வேணுமென்று சொன்னபிற்பாடு தேவமாதா காணாமல் மறைந்து போனாள்.

அந்தக் குடியானவன் தேவமாதா சொன்ன பிரகா ரத்துக்கு நடந்த சேதிகள் எல்லாம் பாவிகளுக்கு அறியப் பண்ணினான். குடியானவன் இந்தச் சேதி சொன்னதின் பேரில் தேவமாதாவின் கிருபையினா லே மனுஷருக்குள்ளே அநேகம்பேர்கள் முந்தமுந் தப் பாவிகள் அந்தக் குடியானவன் சொன்ன சேதி யை விசுவசித்தார்கள். ஆகையால் அவர்கள் தங்க ளுக்கு வருகிற ஆக்கினைக்குப் பயந்து பாவ வழியை விட்டுக் கடின தபசு பண்ணினார்கள். அதாவது: அவ ர்கள் ஒருசந்தியாயிருந்து வற்மமில்லாமல் சமாதா னமாகிக் களவாண்ட உடைமையைத் திரும்ப உத்த ரித்தார்கள். செய்த வேண்டுதலும் அழுகையும் இம்மாத்திரம் என்று வாக்கினாலே சொல்லக்கூ டாது.

இப்படி இருக்கையிலே தபசு செய்து ஒரு வருஷத்துக்குப் பிற்பாடு கிறீஸ்துவர்களுக்குள்ளே நோய் வந்ததினாலே அநேக மனுஷர் செத்தார்கள். கடைசியிலே கணக்குப் பார்க்கிறபோது அக்காலத்தில் பூலோகத்திலே இருந்த மனுஷரில் மூன்றில் ஒருபங்கு செத்துப்போனார்கள். மற்ற இரண்டு பங்கு மனுஷரை அந்தக் கனமான சாவாகிற தின்மையிலே நின்று தேவமாதா இரட்சித்துக்கொண்டாள்.

கிறீஸ்துவர்களே நாம் இப்போது சொன்ன புதுமையினாலே உங்கள் ஆத்துமங்களுக்கு அநேக ஞான நன்மைகள் வரவேணும். முந்தமுந்த நாம் இப்போது சொன்ன குடியானவன் அப்போது பாவிகளுக்குள்ளே இருந்தாலும் பாவ வழியிலே நடக்கவில்லை. அந்தப் பிரகாரமாய் நீங்கள் நடக்கவேணும். நீங்கள் பாவிகளுக்குள்ளேயும் அக்கியானிகளுக்குள்ளேயும் ஆவலாதிகளுக்குள்ளேயும் இருந்தாலும் பாவ வழியிலே நடவாமல் இருக்கிறதும் அல்லாமல் நம்மாலே இப்போது சொல்லப்பட்ட குடியானவனைப் போலே புண்ணிய வழியிலே நடக்கவேணும்.

இரண்டாவது. அந்த நாளையிலே இருந்த மனுஷருக்குள்ளே மூன்றுபங்கில் ஒரு பங்கு மனுஷருக்குப் பாவத்தினாலே சர்வேசுரன் ஆக்கினை இட்டார். ஆகையால் பாவத்தின் வழியாக மிகுந்த கஸ்தி வரும். சிலவிசை ஒரு சீமையிலே அநேகநாள் மழை பெய்யவில்லை. ஒரு வியாதியினாலே மனுஷருக்கும் மாடு ஆடுகளுக்குஞ் சாவு வந்தது. எதினாலே என்றால் அந்தச் சீர்மையிலே மனுஷர் அநேகம் பாவங்களைக் கட்டிக்கொள்ளுகிற படியினாலே ஆக்கினையாக அங்கே அநேகம் பொல்லாப்புகள் வந்தது. ஆகையால் வருகிற ஆக்கினைக்கு நீ பயந்து பாவத்தின் பேரிலே அரோசிகமாயிருக்கவேணும்.

மூன்முவது. நாம் இப்போது சொன்ன புதுமை யினுலே பூலோகத்திலே அப்போது பாவியாயிருந்த மனுஷருக்காகத் தேவமாதா சேசுநாதரை மன்ருடி னதினுலே இரண்டு பங்கு மனுஷருக்கு ஆக்கினை வ ரவில்லை. ஆகையால் உன்னுடைய ஊரிலேயாகு லும் உன் வீட்டிலே எங்கிலும் மழை இல்லாமல் ஆடு மாடுகளுக்கு வியாதி வந்தாலுங் குழந்தை மு தலியதற்குங் கஸ்தி வந்தாலும் அந்தக் கஸ்தியெல் லாம் நீங்கிப்போகத்தக்கதாகத் தேவமாதாவை அ டிக்கடி வேண்டிக்கொள்ள வேணும்.

நாலாவது. அந்த நாளிலே மனுஷர் செய்த பாவ த்தினுலே சர்வேசுரன் சிலவிசை ஆக்கினையிடுகிறத ற்குச் சித்தமாய் இருந்தாலுந் தேவமாதா மன்ருடி னதினுலே அந்த ஆக்கினை வரவில்லை. அப்படி உன க்குத் தேவ கிருபை வரத்தக்கதாக நீ உன்னுடைய இருதயத்தை முழுதுந் தேவமாதாவுக்கு ஒப்புக்கொ டுக்க வேணுமென்று அறியக்கடவாயாக.

## கூ-ம் சனிக்கிழமைப்

புதுமையாவது.

### தேவமாதாவுக்குப் பத்திப் பிரமாணிக்கமாய் இருந்ததினுற் கிடைத்த நன்மை.

இத்தாலியா என்கிற இராச்சியத்திலே நல்ல கோத்திரத்திலே பிறந்த தாய்தகப்பனுக்கு ஒரு ஆ ண்பிள்ளை இருந்தது. தாய் தகப்பன் அவனுக்கு

நல்ல புத்தி சொன்னதினாலே அவன தாய் தகப்பன் உயிரோடே இருக்கிறமட்டும் பாவ வழியிலே நடவாமல் புண்ணிய வழியிலே நடந்தான். ஆனால் அவன் சிறு பிள்ளையாய் இருக்கையிலே தாய் தகப்பன் செத்துப்போனார்கள். பிற்பாடவன் கடிவாளம் இல்லாத குதிரையைப்போலே மனதின்படியே பாவங்களைக் கட்டிக்கொண்டு ஆகாத கூத்தினாலேயும் நல்ல விருந்து சாப்படுகிறதினாலேயும் பரஸ்திரீ நிமித்தமாகவும் அநேகம் பணங்களைச் செலவழித்து ஒரு பிச்சைக்காரனாய்ப் போனான்.

அவன் இப்படி இருக்கையிலே தான் முந்தி ஆஸ்திக்காரனாய் இருந்ததையும் இப்போது பிச்சைக்காரனாய் இருக்கிறதையும் யோசனை செய்து சலிப்பாயிருந்து ஒருநாள் இந்தச் சலிப்போடே அவன் தனியே இருக்கிறபோது எதிரே வேறே ஒரு பாவியான் வாலன் எதிராக வந்தான். இவன் அவனுடைய கஸ்தியான சேதி எல்லாம் அறிந்து சொன்னதாவது: நீ என்னைப்போலே ஒரு பெரிய எசமானுக்கு ஊழியஞ் செய்தால் முன்னையிப் பார்க்க அதிக ஆஸ்தி வருமென்று சொன்னான். துக்கமாய் இருந்தவன் இந்தச் சேதியை அறிந்து சந்தோஷப்பட்டு எந்த எசமான்; என்ன ஊழியமென்று அவனைக் கேட்டான். அதற்கு அவன் பொது வார்த்தையாய்ச் சொன்னபிற்பாடு இந்த இரண்டுபேரும் பட்டணத்தை விட்டு வெளியிலே ஒரு காட்டுக்குள்ளே போனார்கள். எதிராக வந்த அந்த வாலனானவன் அங்கே சில மந்திரஞ் சொன்ன பிற்பாடு பசாசு பயங்கரமான மனுஷ ரூபமாக அவர்களுக்குக் காண்பித்தது.

அந்த இரண்டு பேருக்குள்ளே முன் துக்கமாய் இருந்தவன் இப்படிக்கொத்த முகத்தை ஒருகாலுங் காணாததினாலே அதைக் கண்டவுடனே மெத்த

பயந்து ஓடிப்போகிறதற்கு ஆயத்தமாய் இருந்தான். ஆனால் வேறே வாலனானவன் பசாசின் முகத்தை அநேகவிசை கண்டு பழக்கமாய் இருந்ததினாலே பயப்படாமல் நின்று தன்னோடேகூட வந்தவன் அந்தப் பயத்தினாலே ஓடிப்போகாமல் அவன் தயிரியமாய் இருக்கத்தக்கதாக அவனுக்குத் தேறுதல் சொன்னான். அப்போது இந்த இரண்டுபேர் கிட்டப் பசாசு சொன்னதாவது: நீங்கள் ஏதுக்கு இங்கே வந்தீர்கள், நம்மாலே உங்களுக்கு என்ன செய்யவேணுமென்று கேட்டது. அதற்கு அந்த இரண்டு பேருக்குள்ளே பசாசினுடைய பழைய சீஷன் சொன்னதாவது:

என்னோடேகூட வந்தவன் முன்னே ஆஸ்திக்காரனாய் இருந்தான். பிற்பாடு ஆஸ்திகள் எல்லாம் போய் இப்போது பிச்சைக்காரனாய் இருக்கிறான். ஆகையால் இவன் உம்முடைய வழியாகத் தான் ஆஸ்திக்காரனாய் இருக்கிறதற்கு ஆசையாய் இருக்கிறான். ஆகையால் நீர் இவன்பேரில் இரக்கமாய் இருக்கவேணும். அதேனென்றால் இந்தமட்டும் பாவ வழியிலே நடந்து உமக்கு ஊழியஞ் செய்ததும் அல்லாமல் இனிமேல் நீர் சொன்னபடி கேட்க மனதாய் இருக்கிறானென்று சொன்னான். அதற்குப் பசாசு அவர்களைப் பார்த்துச் சொன்னதாவது: நீங்கள் கிறீஸ்துவர்கள், நமக்கு மோசஞ் செய்வீர்கள். அதெப்படியென்றால் நீங்கள் ஒரு மன்றாட்டு கேட்கவேணுமானால் அநேகங் காரியஞ் செய்கிறோமென்று வார்த்தைப்பாடு கொடுக்கிறீர்கள். காரியம் அநுகூலமான பிற்பாடு செலுத்தாமற் போகிறீர்களென்று பசாசு சொல்லிற்று. பிற்பாடு பசாசு அந்த இரண்டு பேருக்குள்ளே பணத்தின்பேரிலே ஆசை உள்ளவனைப் பார்த்துச் சொன்னதாவது:

நீ இப்போதே தேவமாதாவையும் அவள்பேரிலே வைத்த பத்தியையும் விட்டுவிடவேணுமென்று சொல்லிற்று. அதற்குப் பணத்தின்பேரிலே ஆசையுள்ளவன் எப்போதும் பாவ வழியிலே நடந்திருந்தாலுந் தேவமாதாவின்பேரிலே பத்தியாய் இருந்ததினால் தேவமாதாவை விடுகிறதற்குச் சம்மதி இல்லாமல் தேவமாதாவின் பத்தியை விடுகிறதைப் பார்க்கப் பிச்சைக்காரனாய் இருந்தாலும் பாரமல்லவென்று நினைந்து அங்கேதானே முழங்காலிலே இருந்து கெட்டியாய்ச் சொன்னதாவது: தேவமாதாவே, அர்ச். கன்னிமரியாயே, தயையுள்ள தாயாரே இந்தச் சத்துருவினிடத்தில் நின்று என்னை இரட்சித்துக்கொள்ளுமென்று வேண்டிக்கொண்டான்.

பசாசு இந்த வார்த்தையைக் கேட்டு மெத்தக் கோபமுங் கஸ்தியுமாய் இருந்தது. ஆயினும் இந்த வாலன்பேரிலே தேவமாதா கிருபையாய் இருக்கிறபடியினாலே இவனுக்குப் பொல்லாப்பு செய்யக் கூடாதென்று இவனைக் கூட்டிவந்த பழைய சிஷன் பேரிலே விழுந்து அவனைக் கொன்றுபோட்டது. அந்த வாலன் சரீரத்தைப் பசாசு எடுத்துக்கொண்டு காணமல் மறைந்து போயிற்று. பிற்பாடு தேவமாதாவை விடமாட்டாதவன் தன் சிநேகிதனுடைய ஆகாத சாவைக் கண்டு மெத்தப் பயந்து காட்டை விட்டுப் பட்டணத்துக்குப் போய் அங்கே ஒரு கோவிலுக்குள்ளே தேவமாதாவின் சுரூபத்து முன்பாக முழங்காலிலே இருந்து தனக்குப் பாவப் பொறுத்தல் வேணுமென்று அழுகையோடே வேண்டிக்கொண்டான். இப்படி வேண்டிக்கொள்ளுகிறபோது தேவமாதா சுரூபஞ் சந்தோஷத்தோடே புதுமையாகத் தலை குனிந்தது. அவன் இதுகண்டு மிகவுஞ் சந்தோஷப்பட்டுத் தேவமாதாவின்பேரிலே மிகுந்த

பத்தியாயிருந்து நல்ல கருத்தோடே தன் வீட்டுக்குப் போய்ப் பாவத்தை விட்டுப் புண்ணிய வழியிலே நடந்தான். கொஞ்ச நாளைக்குப் பிற்பாடு தேவமாதா இவனுக்கு வேறே சகாயம் பண்ணினாள். அதாவது: இவன் முந்திக் காட்டுக்குள்ளே தேவமாதாவை விடாதபடிக்குப் பசாசினாலே தனக்கு வரத்தக்க ஆஸ்தியைச் சட்டை பண்ணாமல் இருந்தானே. அந்த நல்ல புண்ணியத்தைக் குறித்துத் தேவமாதாவின் கிருபையினாலே கொஞ்ச நாளைக்குப் பிற்பாடு இவனுக்கு ஆஸ்தி மெத்தவந்தது. ஆகையால் தேவமாதாவின் வழியாக இந்த வாலன் ஆத்துமத்துக்குஞ் சரீரத்துக்கும் அநேக நன்மை வந்தது.

கிறீஸ்துவர்களே நாம் இப்போது சொன்ன புதுமையினாலே உங்கள் ஆத்துமத்துக்கு இரண்டு ஞான நன்மைகள் வரவேணும். முந்த முந்த இந்த இரண்டு வாலருக்குள்ளே ஒருத்தன் வேறே ஒருத்தனுக்குப் பசாசைக் கும்பிடவும் பசாசு சொன்னபடி கேட்கவுந் துர்ப்புத்தி சொன்னதினாலே அவனைப் பசாசு கொன்றுபோடத்தக்கதாகச் சர்வேசுரனுக்குச் சித்தமாயிற்று. அதேதென்றால் துர்ப்புத்தி சொல்லுகிறது கனமான பாவம். சிலபேர்கள் இப்படிக்கொத்த பாவத்தைச் சட்டை பண்ணாமல் இருக்கிறார்கள். அதெப்படியென்றால் யாதொரு குழந்தை வியாதியாய் இருக்கிறபோது அந்தக் குழந்தைக்கு ஆரோக்கியம் வரத்தக்கதாகக் கோணங்கி சாஸ்திரங் கேட்கவும் பசாசின் காரியஞ் செய்யவுங் குழந்தையினுடைய தாய் தகப்பனுக்குச் சிலபேர் துர்ப்புத்தி சொல்லுகிறார்கள். இன்னமும் வெவ்வேறே துர்ப்புத்தி சொல்லுகிறார்கள். பகைக்காரர் இடத்திலே பழிவாங்கத் துர்ப்புத்தி சொல்லுகிறார்கள். இப்படிக்கொத்தவர்கள் கட்டிக்கொள்ளுகிற கனமான பாவ

நிமித்தமாகச் சர்வேசுரன் கனமான ஆக்கினை இடு வார். அதேனென்றால் அப்படிக்கொத்த மனுஷர் வழியாக அநேகம் ஆத்துமங்கள் கெட்டுப்போகும். ஆகையால் நீங்கள் துர்ப்புத்தி சொல்லுகிற பாவத் தின்பேரிலே அருவருப்பாய் இருக்கவேணும்.

இரண்டாவது. நாம் இப்போது சொன்ன புது மையிலே அந்த இரண்டு பேருக்குள்ளே ஒருத்தன் தேவமாதாவின்பேரிலே பத்தியாய் இருந்ததை வி டாததினாலே தேவமாதாவினுடைய கிருபையினாலே அவனுடைய ஆத்தும சரீரத்துக்கு நன்மை வந்த து. ஆனபடியினாலே கிறீஸ்துவர்களே நீங்கள் தேவ மாதாவின்பேரிலே எப்போதும் விசுவாசமாய் இரு க்கவேணும். அதேனென்றால் தேவமாதாவின் உத வியை விட்டால் உடனே உங்களுக்கு நிர்ப்பாக்கி யம் வர இடமாமே. தம்பி ஒரு பெரிய வாய்க்காலி லே வருகிற தண்ணீரை அடைத்தால் பயிர்கள் கா ய்ந்துபோம். அந்தப் பிரகாரமாய் உன்னுடைய ஆத் துமத்துக்கு உண்டான தேவமாதாவின் பத்தியை விட்டுவிட்டால் உன் ஆத்துமம் கெட்டுப்போம். வாய்க்காலிலே தண்ணீர் வந்தால் பயிருக்கு நன்மை வருகிறாப்போலே தேவமாதாவின் பேரிலே வைத்த பத்தியினாலே ஆத்துமத்துக்கு ஞான உயிர் வரும்.

ஆகையால் பசாசு சிலபேர்களை மோசஞ் செய்ய த்தக்கதாகத் தேவமாதாவின் பேரில் உண்டான பத் தியை மெள்ள மெள்ள விடப்பண்ணும். அதெப்ப டியென்றால் இரண்டு மூன்று நாள் ஐம்பத்துமூன் றுமணிச் செபம் பண்ணமலும் இரண்டொரு சனிக் கிழமை ஒருசந்தி இராமலும் வெவ்வேறே புண்ணி யங்களைச் செய்யாமலும் இப்படியாய் அந்தப் பத்தி யை விடப்பண்ணும். கடைசியாய் அவர்கள் பசா சின் தந்திரத்தினாலே எளிதாய்ப் பாவத்தில் விழுவா

ர்கள். பின்னும் அவர்களுக்குச் சந்தேகம் இல்லாமல் அநேக மோசங்கள் வரும். தேவமாதாவின் பேரிலே உண்டான பத்தி உன் ஆத்துமத்துக்கு ஒரு கேடயம்போலே இருக்கிறது. ஆகையால் உன் ஆத்துமத்துக்கு மோசம் வராதபடிக்கு இப்படிப்பட்ட கேடயமாகிற தேவமாதாவின் பேரிலுள்ள பத்தியை விடாதே. ஆனபடியினாலே எந்தக் கஸ்தி வந்தாலுந் தேவமாதாவைக் குறித்து நீ எப்போதுஞ் செய்கிற புண்ணியத்தை விடாமலிருந்தால் உனக்கு வந்த கஸ்தி தேவமாதாவின் கிருபையினாலே நீங்கிப்போவதும் அல்லாமல் உனக்குப் பாக்கியமும் வர வழியாமென்று அறியக்கடவாயாக.

---

## எ-ம் சனிக்கிழமைப்

### புதுமையாவது.

---

தேவமாதாவின் சபை ஒழுங்கு
அநுசரிக்காமல் விட்டுப் பாவங்களைச்
செய்ததினாலே வந்த பெரும்
ஆபத்து.

ஸியாவென்கிற இராச்சியத்து[illegible] ஒரு கிறீஸ்துவன் தேவமாதாவின்பேரிலே மெத்தப் பத்தியாயிருந்து அவளுக்கு அடிமையாக அவள் சபையிலே உட்பட்டான். அந்தச் சபையில் உண்டான கட்டளைப்படியே அந்த வாலனானவன் எட்டு நாளைக்கு ஒருவிசை முஷ்டு தப்பாமல் எந்த

வெயிலானாலும் மழை முதலான வேறே விக்கினம் வந்தாலும் அந்தச் சபையின் கோயிலுக்குப் போவான். சிலபேர்கள் அவனுடைய பத்தியைப் பார்த்து அவனுக்கு அடிக்கடி துர்ப்புத்தி சொன்னதாவது: உம்முடைய சரீரத்திலே ஆரோக்கியங் கொஞ்சமாய் இருக்கிறதினாலே தேவமாதாவின் சபையின் கோயிலுக்கு எட்டு நாளைக்கு ஒருவிசை மழை காற்றுகளைச் சட்டை பண்ணுமற் போனால் கொஞ்ச நாளைக்குள்ளாக உமக்குக் கனமான வியாதி வருமென்று சொல்லிக்கொண்டு வருவார்கள். அவன் அந்தத் துர்ப்புத்தியைக் கேட்டதினாலே துவக்கத்திலே சிலவிசை அந்தக் கோயிலுக்குப் போகாதிருந்ததும் அல்லாமல் கடைசியிலே அந்தக் கோயிலுக்குப் போகிறதை முழுதும் விட்டுவிட்டான்.

இந்தப் பிரகாரமாய் அவன் தேவமாதாவின் பேரில் உண்டான பத்தியை விட்டுக் கொஞ்ச நாளைக்குப் பிற்பாடு சர்வேசுரனுக்குப் பயமில்லாதிருந்து தன் மனதின்படியே சாவான பாவங்களைக் கட்டிக்கொண்டான். ஒருவிசை இராத்திரி அவன் நித்திரை போகிறபோது பயங்கரமுள்ள ஒரு கனவைக் கண்டு பயத்தினாலே விழித்துக்கொண்டு விளக்குக் கொளுத்தி அந்தப் பயத்தைத் தள்ளிச் சந்தோஷம் வரத்தக்கதாக மோக பாவத்தின் பேரிலே எழுதியிருக்கிற ஒரு புத்தகத்தை வாசித்தான். அதை வாசிக்கத் துவக்குகிறபோது உடனே அறைக் கதவு திறந்து ஒரு பசாசு பயங்கரமுள்ள ரூபமாகக் காண்பித்தது. அவன் அந்த அவலக்ஷணமுள்ள முகத்தைக் கண்டு சரீரமெல்லாஞ் சிலீரிட்டுப்போய்த் தன் அறையின் மூலையிலே ஒதுங்கின பிற்பாடு அந்தச் சமயத்திலே தேவமாதா தனக்குச் சகாயம் பண்ண மெள்ள மெள்ளச் சிலுவை மந்திர முதலிய

மந்திரங்களைச் சொன்னான். இதைப் பசாசு அறிந்து அவனைப் பார்த்துச் சொன்னதாவது:

தேவமாதாவின் சகாயம் உனக்கு வேணுமென்று நீ வியர்த்தமாய் அவளைக் கூப்பிடுகிறாய், நீ அவளுடைய பத்தியை விட்டதினாலே அவள் உன்னைக் கைவிட்டாள். உன்னுடைய பாவத்தினாலே சர்வேசுரன் என்னை உன்கிட்ட அனுப்ப வந்தேன், அவர் உன்னை எனக்கு ஒப்புக்கொடுத்தார், என்னோடே கூட நரகத்திலே வரவேணுமென்று சொன்ன பிற்பாடு பசாசானது தன்னுடைய நகங்களைக் கூர்மையாக்கிக் கோழிக்குஞ்சுமேலே இராசாளி பாய்கிறாப் போலே அவனைக் கொல்ல ஆயத்தமாய் இருந்தது. அவன் இதைக் கண்டு சரீரமெல்லாம் வேர்த்துக் குளுந்துபோய் முழங்காலிலே இருந்து தேவமாதா தனக்குச் சகாயமாய் இருக்கத்தக்கதாகத் தேவமாதாவின் சபையில் உட்பட்டவர்கள் சொல்லுகிற மந்திரத்தைச் சொல்லி வேண்டிக்கொண்டான். அந்த மந்திரம் முடிந்தவுடனே தேவமாதா அவனுக்குக் காண்பித்துக் கோபத்தோடே பசாசைப் பார்த்த உடனே பசாசு ஓடிப்போச்சுது.

பிற்பாடு பூலோகத்துக்கு ஆண்டவள் அவனைப் பார்த்துச் சொன்னதாவது: நீ நம்முடைய பேரில் உண்டான பத்தியை விட்டதினாலேயும் அநேக பாவங்களைக் கட்டிக்கொண்டதினாலேயும் நாம் உனக்குச் சகாயமாய் இங்கே வர நீ பாத்திரமல்ல; ஆனால் நம்முடைய தயையினாலே இப்போது உனக்குச் சனுவாய் இருந்தோம்; இனிமேல் நீ பாவத்தை விட்டு நம்முடைய சபையின் கற்பனைப்படி நட; வாந்தி பண்ணினதைத் திரும்பத் தின்னுததுபோலே இப்போது விட்ட பாவத்தை இனிமேல் திரும்பச் செய்யாதே. செய்தால் இனிமேல் என்னுடைய

சகாயம் உனக்கு வராதென்று சொல்லிக் காணுமல் மறைந்துபோனுள்.

அவன் இதுவெல்லாங் கேட்டுப் பிரமித்து ஆச்சரியப்பட்டுச் சூரியன் உதயம் பண்ணுகிறபோது தான் உட்பட்ட தேவமாதாவின் சபை விசாரிக்கிற குருசுவாமி கிட்டப்போய் நடந்த சேதியெல்லாஞ் சொன்னுன். இது சேதிகளைக் குருசுவாமி கேட்டுச் சந்தேகமாய் இருக்கிறதை அவன் கண்டு சுவாமீ இன்று இராத்திரி பசாசு என் அறையிலே வந்ததினுலே அங்கே இரண்டு அடையாளம் இருக்கின்றது. அதேதென்றுல் கொஞ்ச நேரம் பசாசு அந்த அறையிலே நின்றதினுலே அங்கே பொறுக்கக்கூடாத நாற்றம் இருக்கின்றது. இதுவும் அல்லாமல் தேவமாதாவைக் கண்டவுடனே பசாசு பயந்து தாமதம் இல்லாமற் போகிறதற்கு அறைச் சுவரிலே ஒரு துவாரம் பண்ணி அந்த வழியாய்ப் போயிற்று; இன்னம் அந்தத் துவாரம் இருக்கின்றதென்று சொன்ன பிற்பாடு அவனுேடே குருசுவாமியும் அந்த அறைக்குப் போய் அந்தத் துவாரத்தையுங் கண்டு, அந்த அறையிலே வீசுகிற நாற்றத்தினுலேயும் வருத்தப்பட்டு அங்கே நில்லாமல் உடனே அப்புறம் போனுர். அவனும் அழுதுகொண்டு நல்ல பாவசங்கீர்த்தனம் பண்ணிப் பாவத்தை முழுதும் விட்டுத் தேவமாதாவின் சபைக் கற்பனைப்படி சாகுமட்டும் நடந்தான்.

கிறீஸ்துவர்களே இப்போது நீங்கள் கேட்ட ஆச்சரியமான புதுமையினுலே உங்களுடைய ஆத்துமங்களுக்கு அநேகம் பிரயோசனம் வரவேணும். முந்த முந்த நாம் இப்போது சொன்ன வாலனைவன் தேவமாதாவின் சபையில் உட்பட்டதினுலே, தேவமாதாவின் அடிமையாய் இருந்த பிற்பாடு பர்வத்தி

ஞலே பசாசின் அடிமையாஞன். இப்படியே சில கிறீஸ்துவர்களுக்கு ஆகின்றது. அதெப்படி என்ருல் சில கிறீஸ்துவர்கள் தேவமாதாவின் நூற்றைம்பதுமணிச் செபம் பண்ணுகிற வழக்கத்துக்காஞலுந் தேவமாதாவின் உத்தரீயச் சபையில் என்கிலும் உட்பட்டதிஞலே தேவமாதாவின் அடிமைகளாய் இருந்தார்கள். இந்த அடிமைத்தனங் கனமான மகிமையாய் இருக்கிறது. பிற்பாடு இவர்கள் ஒரு சாவான பாவத்திலே விழுந்ததிஞலே பசாசின் அடிமைகளாய் இருந்தார்கள். இந்த அடிமைத்தனம் மகிமைக்கு மெத்தக் குறைவாய் இருக்கிறதும் அல்லாமல் கனமான அவமானமாமே. ஆகையால் நீ எப்போதுந் தேவமாதாவின் அடிமையாய் இருக்கவேணுமாஞல் சாவான பாவஞ் செய்யாதே.

இரண்டாவது. நாம் இப்போது சொன்ன வாலஞனவன் சபைக் கற்பனைப்படி நடவாததிஞலே அவனுக்குக் கனமான மோசம் வந்தது. தேவமாதாவின் சபையில் உட்பட்டவர்களே உங்களுக்கு இப்படிக்கொத்த மோசம் வாராதபடிக்குச் சபையின் கட்டளைப்படி நடக்கவேணும். நூற்றைம்பதுமணிச் சபையிலே வழங்கிய ஒரு கட்டளை கிழமையிலே மூன்று விசையாகிலும் ஐம்பத்துமூன்றுமணிச் செபம் பண்ணவேணும். உத்தரீயச் சபையிலே ஒரு கட்டளை இராவும் பகலும் உத்தரீயந் தரித்திருக்கவேணும். இந்தச் சபையில் உட்பட்ட சிலபேர்கள் இந்தச் சபையின் கட்டளைப்படி நடவாமல் இருக்கிருர்கள் இது ஆகாது. அதேனென்ருல் அந்தக் கட்டளை மீறுகிறது பாவம் இல்லாதிருந்தாலும் அந்தக் கட்டளைப்படி நடக்கிறவர்களுக்குத் தேவமாதா பண்ணுகிற சகாயம் அப்படி நடவாதவர்களுக்கு வராது. ஆகையால் தேவமாதாவின் ஆதார சகாயம்

உங்களுக்கு வரத்தக்கதாக அந்தச் சபையின் கட்டளைப்படியே நடக்கவேணும்.

மூன்றாவது. நாம் இப்போது சொன்ன புதுமையிலே ஒரு பசாசு மாத்திரம் அந்த அறையிலே கொஞ்ச நேரம் இருந்த படியினாலே பொறுக்கக்கூடாத நாற்றம் இருந்தது. நீ நரகத்திலே விழுந்தால் அங்கே எண்ணப்படாத பசாசுகள் எப்போதும் இருக்கிறதினாலே அத்தனைக் கனமான நாற்றத்தை எப்படிப் பொறுப்பாய். ஆகையால் நரகத்திலே போகாதபடிக்குச் சாவான பாவத்தை விட்டுவிடக் கடவாய்.

நாலாவது. நாம் இப்போது சொன்ன வாலனைப் பசாசு நரகத்திலே கொண்டுபோக ஆயத்தம் பண்ணுகிறபோது தேவமாதா அவனுடைய பாவங்களைப் பாராமல் தம்முடைய தயையினாலே அவனுக்குக் கனமான சகாயம் பண்ணினாள். ஆகையால் தேவமாதாவுக்கு இந்த நல்ல குணம் இருக்கிறபடியினாலே நீ உன்னைத் தேவமாதாவுக்குச் சந்தோஷமாய் ஒப்புக்கொடுக்கிறதும் அல்லாமல் பசாசு பாவ தந்திரத்தினாலே உன் ஆத்துமத்தைப் பிடிக்காதபடிக்கு எச்சரிக்கையாயிருந்து தேவமாதாவைப் பத்தி விசுவாசத்தோடே வேண்டிக்கொள்ள வேணும். நீ பாவத்தை வெறுத்துவிட்டால் அதின் தந்திரத்தினாலே வருகிற தின்மைகளினின்று அவள் உன்னை இரட்சிப்பாளென்று அறியக்கடவாயாக.



## அ-ம் சனிக்கிழமைப்

### புதுமையாவது.



ஐம்பத்துமூன்றுமணிச் செபத்தின் வழியாக அநேக பெண்பிள்ளைகள் மனந்திரும்பின

வகை.

இத்தாலியாவென்கிற இராச்சியத்திலே அநேகம் பெண்பிள்ளைகள் கிறீஸ்துவர்களாய் இருந்தாலும் அவர்களுக்குக் கிறீஸ்துவர்களென்கிற பெயர் மாத்திரமே அல்லாமல் வேறே புண்ணியமில்லை. அதெப்படியென்றால் தங்களை நன்றாய்ச் சிங்காரித்துக்கொள்ளுகிறதும் விளையாடுகிறதும் மோக பாவத்தின் பேரிலே ஆகாத பிரசங்கம் பண்ணுகிறதும் இப்படிக்கொத்த ஆகாத தொழிலிலே அவர்களுடைய பெரியோர்கள் நடந்தாப்போலே கொஞ்ச வயதுள்ள இவர்களும் நடந்தார்கள். இதல்லாமல் குருசுவாமி சொன்ன புத்தியைச் சட்டை பண்ணுமல் இருந்தார்கள்.

இப்படி இருச்சையிலே அருளாயி என்கிற ஒரு பெண்பிள்ளை அந்த ஊரிலே குடிவந்து மற்றவர்கள் பாவ வழியிலே நடந்தாப்போலே இவளும் பாவ வழியிலே நடக்கத் துவக்கினுள். குருசுவாமி புதுசாய் வந்த இந்த அருளாயி என்கிறவளும் பாவியாய் இருக்கிறதை அறிந்து இவளுடைய குணஞ் சற்று நல்ல குணமாய் இருக்கிறதினுலே இவளுடைய மனது திரும்புமென்று நம்பிக்கையாகி இவளை வரவழைப்பித்து இவளுக்குச் சொன்னதாவது: அருளாயி என்கிறவளே நீ தினம் என்ன செய்கிருய், என்ன புண்ணியம் பண்ணுகிருயென்றுந் தேவமாதா

ஸ்வக் குறித்து ஐம்பத்துமூன்றும்மணிச் செபம் ப
ண்ணுகிருயோவென்றுங் கேட்டார். இதற்கு அவள்
சொன்னதாவது: சுவாமீ இந்த ஐம்பத்துமூன்று ம
ணிச் செபம் பண்ணும் வகை எனக்கு ஒன்றுந் தெ
ரியாது. இந்த ஊரிலே இருக்கிற பெண்பிள்ளைகள்
தங்கள் சரீரத்தைச் சிங்காரித்துக்கொண்டு விளையா
டுகிறுப்போலே நானும் என் சரீரத்தைச் சிங்காரித்
துக்கொண்டு விளையாடுகிறேனென்று கபடில்லா
மல் சொன்னாள். குருசுவாமி இந்த வார்த்தையைக்
கேட்டுத் தேவமாதாவின் ஐம்பத்துமூன்றுமணிச்
செபத்தின்பேரில் தோத்திரமான வார்த்தையையும்
அவளுக்குச் சொல்லி ஒரு நல்ல செபமாலையையும்
அவளுக்குக் கொடுத்துத் தினந் தேவமாதாவைக் கு
றித்து ஐம்பத்துமூன்று மணிச் செபம் பண்ணச்
சொல்லி அவளுக்குப் புத்திமதி சொன்னார்.

அருளாயி என்கிறவளுக்கு நல்ல குணம் இருந்த
திலுலே குருசுவாமியார் சொன்ன புத்தியைக் கேட்
டு அந்தப் பிரகாரத்துக்குத் தினம் ஐம்பத்துமூன்று
மணிச் செபம் பண்ணினாள். இப்படிக்கொத்த பத்தி
வழியாக அவளுக்குப் பாவத்தின்பேரிலே முன்னே
இருந்த விருப்பமெல்லாம் மெள்ளமெள்ளப் போன
தும் அல்லாமல் பாவத்தின்பேரிலே அரோசிகமும்
புண்ணியத்தின் பேரிலே சந்தோஷமும் வந்தது.
கொஞ்ச நாளைக்குள்ளாகத் தன்னைச் சிங்காரிக்கிற
தையும் விளையாடுகிற தொழிலையும் விட்டுத் தான்
செய்த பாவங்களுக்குத் தபசு பண்ணுகிறதிலே கா
லம் போக்கினாள்.

அந்த ஊரிலே இருந்த மற்றப் பெண்பிள்ளைகள்
இப்போது சொல்லப்பட்ட அருளாயி இடத்திலே
சம்பவித்த இந்த ஞானப் புதுமையைக் கண்டு தாங்
கள் பாவ வழியிலே நடக்கிறுப்போலே அவள் நட

வாமல் இருக்கிறதினலே அவளை அடிக்கடி கோபி த்துக்கொண்டு வருவார்கள். ஆனால் அருளாயி என் கிறவள் மற்றப் பெண்பிள்ளைகளுடைய கோபத் தைச் சட்டைபண்ணமல் தினந் தேவமாதாவைக் குறித்து ஐம்பத்து மூன்றுமணிச் செபம் பண்ணிக் கொண்டு புண்ணிய வழியிலே நடந்தாள். இந்த அருளாயியுடைய விசுவாசப் பத்தியைக் குறித்து இவளுக்குத் தேவமாதாவானவள் தம்முடைய பட் சத்தின் அடையாளங்களை அநேகம்விசை காண் பித்தாள்.

இப்படி இருக்கையிலே குருவானவர் இவளு டைய நடக்கையைக் கண்டு சந்தோஷப்பட்டதும் அல்லாமல் ஒரு இராத்திரி நடுச் சாமத்துக்குப் பிற்பாடு அவர் தியானத்தில் இருக்கிறபோது ஒரு தரிசனத்தைக் கண்டதாவது: அருளாயி அந்தச் ச மயத்திலே ஐம்பத்து மூன்றுமணிச் செபம் பண்ணு கிறபோது அநேகம் பசாசுகள் அவள் வீட்டில்வர ஆ யத்தமாயிருந்தது. அச்சமயத்திலே தேவமாதா மிகு ந்த பிரகாசத்தோடேயும் அநேகங் கன்னியாஸ்திரி களோடேயும் அங்கே காண்பித்து அந்தப் பசாசு களைத் தள்ளினதினலே அந்தப் பசாசுகள் பாம்புகள் ரூபமாகத் தூர்ப்புத்தியுள்ள அந்த ஊர்ப் பெண்பிள் ளைகள் வாயிலே புகுகிறதைத் தரிசனத்திலே அந் தக் குருவானவர் கண்டார்.

மறுநாள் குருவானவர் அந்த அருளாயியை அழைப்பித்து நீ இராத்திரி நடுச்சாமத்துக்குப் பிற் பாடு உன்னுடைய வீட்டிலே என்ன செய்தாயெ ன்று கேட்டதற்கு அவள் சொன்னதாவது: சுவாமீ அந்த நேரத்திலே நான் தேவமாதாவைக் குறித்து ஐம்பத்து மூன்றுமணிச்செபம் பண்ணினேன் என் று சொன்னள். அதற்குக் குருவானவர் இராத்திரி

தார்கண்ட தரிசனத்தைக் கபடில்லாமல் அவளுக்குச் சொன்ன பிற்பாடு மற்றப் பெண்பிள்ளைகள் திரும்புகிறதற்கு அவள் தேவமாதாவை வேண்டிக் கொள்ளத்தக்கதாக அவளுக்குப் புத்திசொன்னார். பிற்பாடு குருவானவருக்கு வந்த விசாரமாவது: அருளாயி மனது ஐம்பத்து மூன்றுமணிச் செபத்தின் வழியாகத் திரும்பினதுபோலே மற்றப் பெண்பிள்ளைகளுடைய மனதுகளும் அந்தப் புண்ணியத்தின் வழியாகத்தானே திரும்புமென்று யோசனைவந்து, அந்தப் பெண்பிள்ளைகள் எல்லாரையும் அழைத்து, அவர்களுக்கு நேத்தியான செபமாலையைக் காண்பித்து உங்களுக்கு இந்தச் செபமாலை வேண்டுமோ வேண்டாமோவென்று கேட்டார். அவர்கள் உடைமையின் பேரில் மெத்த விருப்பமாயிருந்ததினாலே உடைமையாகித் தரித்துக் கொள்ளலாமென்று பத்தியில்லாமல் உடனே வேணுமென்று சம்மதித்தார்கள். அதற்குக் குருசுவாமி சொன்னது:

நீங்கள் தேவமாதாவைக் குறித்துத் தினம் ஐம்பத்து மூன்றுமணிச் செபம்பண்ண வார்த்தைப்பாடு கொடுத்தால் நாம் உங்களுக்கு ஒவ்வொரு செபமாலை கொடுப்போமென்று சொன்னார். இதற்கு அவர்கள் தேவமாதாவின்பேரிலே பத்தி இல்லாதிருந்தாலும் அந்த நல்ல செபமாலையின் பேரிலே ஆசையினாலே மாத்திரந் தினந் தேவமாதாவைக் குறித்து ஐம்பத்து மூன்றுமணிச் செபம் பண்ணுவோமென்று வார்த்தைப்பாடு கொடுத்தார்கள். ஆனபடியினாலே குருசுவாமி சந்தோஷமாய் அவர்களுக்கு ஒவ்வொரு செபமாலை கட்டளையிட்டார். அவர்களுக்கு ரோசமிருந்ததினாலே பத்தி இல்லாதிருந்தாலும் வார்த்தைப்பாடு செலுத்தத் தக்கதாகத் தினம் ஐம்பத்து மூன்றுமணிச் செபங் கட்டாயம் போலே

பண்ணினார்கள். கொஞ்ச நாள் சென்ற பிற்பாடு அந்த ஐம்பத்து மூன்றுமணிச் செபத்தின் வழியாக மெள்ள மெள்ள அந்தப் பெண்பிள்ளைகளுக்குப் பத்திவந்தது. பிற்பாடு பாவங்களை முழுதும் விட்டு முன் சொல்லப்பட்ட அருளாயியைப் போலே புண்ணியவழியிலே நடந்தார்கள்.

பிற்பாடு குருவானவர் அங்கே போனவுடனே அவர்களெல்லோரும் ஒருமிக்கக் குருவானவர் பாதத்திலே சாஷ்டாங்கமாக விழுந்து நமஸ்காரம்பண்ணி அவரோடே சொன்னதாவது: சுவாமீ நாங்களெல்லோருங் கண் தெரியாதவர்கள் போல் பாவ வழியில் அநேக வருஷமாய் நடந்ததினாலே தேவரீருக்குச் சொல்லக் கூடாத கஸ்தி வருத்துவித்தோம். ஆனால் இப்போது தேவமாதாவின் ஐம்பத்து மூன்று மணிச் செபத்தின் பத்திவழியாக எங்களுக்கு ஞானப்பிரயோசனம் வந்ததினாலே தேவமாதா உதவியைக்கொண்டு எங்கள் புண்ணியத்தின் வழியாகத் தேவரீருக்குச் சந்தோஷம் வரும். எங்கள் மனது தேவமாதாவின் புதுமையினாலே முழுதுந் திரும்பிற்றென்று ஒருமிக்கக் கூப்பிட்டுச் சொன்னார்கள். குருவானவர் இந்தச் சேதி அறிந்து மெத்தச் சந்தோஷப்பட்டு அவர்கள் மரண பரியந்தந் தினம் ஐம்பத்து மூன்றுமணிச் செபம் பண்ணப் புத்திசொன்னார்." இந்தப் பிரகாரமாய் அவர்கள் குரு கட்டளையிட்ட பிரகாரஞ் சாகுமட்டுந் தினம் ஐம்பத்து மூன்றுமணிச் செபம் பண்ணினதினாலே மரண பரியந்தந் தேவமாதாவின் உதவியினாலே புண்ணிய வழியிலே நடந்தார்கள்.

கிறீஸ்துவர்களே நாம் இப்போது சொன்ன புதுமையினாலே உங்களுடைய ஆத்துமங்களுக்கு வரத்தக்க ஞான நன்மையாவது: நாம் இப்போது செர

ஸ்னா அருளாயி என்கிறவள் மற்றப் பெண்பிள்ளைகள் பாவவழியிலே நடக்கிறதைக் கண்டு தானும் பாவங்களைக் கட்டிக்கொண்டாளென்று சொன்னோமே. ஆனபடியினாலே அருளாயி கெட்டுப்போனதற்கு மற்றப் பெண்பிள்ளைகள் காரணமாயிருந்தார்கள். அதினாலே அவர்களுக்குக் கனமான பாவம். சில கிறீஸ்துவர்கள் சிறு பிள்ளைகள் முன்பாக வாக்கினாலேயுங் கிரியையினாலேயும் பாவங்களைக் கட்டிக்கொள்ளுகிறார்கள் என்கிறதினாலே அந்த வழியாகச் சிறு பிள்ளைகளுங் கெட்டுப்போகிறார்கள். அதினாலே மிகுந்த ஆக்கினை வரும். இப்படிக்கொத்த மோசம் உங்களுக்கு வராதபடிக்கு முந்த முந்தச் சிறு பிள்ளைகளுக்கு வாக்கினாலேயுங் கிரியையினாலேயும் புண்ணியங்களைக் காண்பிக்கவேணும்.

இரண்டாவது. நாம இப்போது சொன்ன ஊரிலே இருந்த சில பெண்பிள்ளைகளுக்குக் குருசுவாமி புத்தி கற்பித்துப் பாவத்தை விடச் சொல்லி இருந்தாலும் அடிக்கடி சொன்ன புத்தியை அவர்கள் கேட்கவில்லை. அதேனென்றால் அவர்களுக்குக் காம பாவத்திலே பழக்கமிருந்தது. காம பாவத்துக்கு ஒரு ஆகாத குணம் இருக்கின்றது. அதாவது: யாதாமொருத்தருக்கு மோக பாவத்தைச் செய்யப் பழக்கம உண்டானால் அவர்கள் அந்தப் பாவத்தை விடுகிறதுக்கு மெத்தக் கடினமாயிருக்கும். குருக்களும உபதேசிகள் தாய் தகப்பன்மார் உறவின் முறையாரும் அந்தப் பாவத்தைவிட அவர்களுக்கு அடிக்கடி புத்தி சொன்னாலும் அவர்கள் கேட்கமாட்டார்கள். அதேனென்றால் அந்த மோக பாவத்தின் பழக்கத்தினாலே அவர்கள் மனது ஒரு கருங்கல்லுக்குச் சமானமாய் இருக்கின்றது. அவர்கள் அந்தப் பாவத்தை விடத்தக்க [illegible]மாதவின்

ஞானப் புதுமை வேணும். ஆனபடியினாலே உங்க
ளுக்கு இந்த மோசம் வாராதபடிக்கு மோக பாவத்
தின்பேரிலே அரோசிகமாய் இருங்கள். மீளவுந் தே
வமாதாவை அடிக்கடி வேண்டிக்கொள்ளுங்கள்.

மூன்றாவது. நாம் முன் சொன்ன ஊரிலே இரு
ந்த சில பெண்பிள்ளைகளுடைய மனது ஒரு கருங்
கல்லுப்போலே இருந்தாலும் பிறகு தேவமாதாவின்
கிருபையினாலே பஞ்சுபோல் மெதுவாயிற்று. அவர்
கள் தேவமாதாவைக் குறித்து ஐம்பத்துமூன்று ம
ணிச் செபம் பண்ணினதினாலே தேவமாதாவின் பு
துமையாக அவர்கள் பாவத்தை முழுதும் விட்டுப்
புண்ணிய வழியிலே நடந்தார்கள். ஆகையால் தம்
பிமாரே, தங்கைமாரே, உங்களுக்குள்ளே பாவிகள்
உண்டானால் அவர்கள் மனது மோக பாவத்தினாலே
இரும்புபோலே இருந்தாலும் அவர்கள் தினந் தேவ
மாதாவைக் குறித்து ஐம்பத்துமூன்று மணிச் செ
பம் பண்ணிக்கொண்டு வந்தால் சந்தேகம் இல்லா
மல் தேவமாதாவின் புதுமையினாலே அவர்களுக்கு
மெள்ள மெள்ளப் பத்தி வருவதும் அல்லாமல் சில
நாளைக்குப் பிற்பாடு அவர்கள் முழுதும் பாவத்தை
விடுவார்களென்று நாம் வார்த்தைப்பாடாகச் சொ
ல்லுகிறோம்.

சில கிறீஸ்துவர்கள் ஒருநாள் தேவமாதாவைக்
குறித்து ஐம்பத்துமூன்று மணிச் செபம் பண்ணின
பிற்பாடு மூன்று நாள் செபம் பண்ணாமல் இருப்பா
ர்கள். கோயிலுக்கு வந்தால் செபம் பண்ணுவார்கள்.
வீட்டிலே போனால் செபம் பண்ணுகிறதில்லை. இப்
படியாகாது. நாம் முன் சொன்ன நன்மை உங்களு
க்கு வரவேணுமானால் தினந் தப்பாமல் தேவமாதா
வைக் குறித்து ஐம்பத்துமூன்று மணிச் செபம் ப
ண்ணவேணும். இப்படி நடந்தால் தேவமாதா உங்க

ளை மிகவும் புகழ்ந்து பட்சமாய் இருப்பாளென்று அறியக்கடவீர்களாக.



## ௩௨-ம் சனிக்கிழமைப்

புதுமையாவது.



தேவமாதாவின் கிருபையினாலே

கிடைத்த நல்ல மரணம்.

நோர்மாந்தி என்கிற நாட்டிலுள்ள ஒரு ஊரிலே ஒரு துரை மகன் கிறீஸ்துவனாய் இருந்தான். அவன் தன்னுடைய அரண்மனையை விட்டுப் பாளையத்துக்குப் போகிறபோது வழியிலே ஒரு ஊரின்கிட்ட அலங்காரம் உள்ளவளுமாய் வால வயதுள்ளவளுமாய் இருக்கிற ஒரு பெண்பிள்ளையைக் கண்டு தன்னுடைய ஊழியக்காரருக்குள்ளே நம்பிக்கை மனுஷனாகிய ஒருவனை அழைத்து அவனோடே சொன்னதாவது: இந்தப் பெண்பிள்ளையுடைய தாய் தகப்பன் கிட்டப் போய் அவர்கள் இந்தப் பெண்பிள்ளையை எனக்குக் கொடுக்கவேணுமென்று அவர்கள் சம்மதிக்கத்தக்கதாக நல்ல வார்த்தை சொல்லென்று சில பணங்களைக் கொடுத்துப் போகச் சொன்னான். அந்த ஊழியக்காரன் எசமான் சொன்னபடிக்கு அங்கே போய் அந்தப் பெண்பிள்ளையின் தாய் தகப்பனோடே நடந்த சேதி எல்லாஞ் சொன்னபிற்பாடு துரை கொடுத்த பொன்னையுங் காண்பித்தான். அவர்களுக்குப் பணத்தின்பேரிலே மெத்த ஆசை இருந்தபடியினா

லே பாவத்தைச் சட்டை பண்ணுமல் மகளைக் கொடுக்கச் சம்மதித்தார்கள்.

ஆகையால் தாய் தகப்பன் தங்கள மகளை ஊழியக்காரனோடே கூடத் துரை இருக்கிற வீடுதிக்குப் போவென்று சொன்னார்கள். அவள் நல்ல புண்ணியவதியாய் இருந்தபடியினாலே அந்தச் சேதியைக் கேட்டு அங்கே போகமாட்டேனென்று சொன்னாள். ஆனால் தாய் தகப்பன் கிறீஸ்துவர்களென்கிற பெயர் அல்லாமல் வேறே புண்ணியங்கள் இல்லாததினாலே மகளை அங்கே போகச் சொல்லிக் கக்கிஷம பண்ணினார்கள். ஆகையால் ஊழியக்காரன் பிறகே கட்டாயமாய்ப் போனாள். இவள் போகிற வழியிலே ஒரு அரண்மனை இருந்தது. அதிலே துரை மகன் இவள் வருமட்டும இருந்தான். அந்தப் புண்ணியவதியும் ஊழியக்காரனுஞ் சனிக்கிழமை இராத்திரி அங்கே சேர்ந்தார்கள். இவர்கள் வந்த சேதி துரை மகன் அறிந்து மெத்தச் சந்தோஷப்பட்டு அவளுக்கு நல்ல விருந்தும உடுப்புங் கொடுக்கக் கட்டளையிட்டான்.

இந்தப் புண்ணியவதி ஒரு அறையிலே தனியே இருக்கிறபோது இராத்திரி சாப்பாடு முடிந்த பிற்பாடு துரை மகன் அந்தப் புண்ணியவதி இருக்கிற அறைக்குப் போனான். அவள் இவனைக் கண்டவுடனே மெத்தவும் அழுதாள். துரை மகன் அந்தப் பெண்பிள்ளை அழுகிறதைப் பார்த்து இவ்வளவுக்கு இரக்கம் வந்ததினாலே பட்சத்தோடே அவளைப் பார்த்துச் சொன்னதாவது: நீ ஏன் அழுகிறாய், நான் உனக்குச் சத்துருவல்ல, நான் உன்னுடைய சிநேகிதன், உன் பேர் என்னவென்று கேட்டான். அதற்கு அவள் சொன்னதாவது: சுவாமீ அடியாளுடைய பேர் மரியாயி. நான் அழுகிறதற்கு ஞாயம்

உண்டு, அதேதென்றால் இன்றையத்தினஞ் சனிக்கிழமை, இந்த நாள் தேவமாதாவுக்குக் குறித்திருக்கிறது, இதல்லாமல் அடியாளுக்குத் தேவமாதாவின் பெயரிட்டிருக்கிறது, ஆனபடியினாலே மரியாயி என்கிற நான் சனிக்கிழமையிலே இந்தக் கனமான பாவத்தைச் செய்வேனோ? இந்தப் பொல்லாப்பு என் ஆத்துமத்துக்கு வாராதபடிக்குத் தேவரீர் என்னைக் குத்திக் கொன்று போட்டாலுந் தாவிளையென்று மெத்தவும் அழுதுகொண்டு தாழ்ச்சியோடே சொன்னாள்.

துரைமகன் இவளிடமாகப் பாவஞ்செய்ய மிகுந்த ஆசையாய் இருந்தாலுந் தேவமாதாவின் புதுமையாக அவனுடைய பொல்லாத ஆசை போனதுமல்லாமல் அந்தப் புண்ணியவதி பேரிலே அவனுக்கு மெத்த இரக்கம் வந்தது. பின்னும் அவளைப்பார்த்துச் சொன்னதாவது: தங்கையே, சனிக்கிழமை தேவமாதாவுக்குக் குறித்திருக்கிறதென்று நான் அறிந்திருக்கிறேன். ஆகையால் இன்றைக்குச் சனிக்கிழமையாய் இருக்கிறபடியினாலேயும் உனக்குத் தேவமாதாவின் பேரிட்டிருக்கிறதினாலேயும் நான் உன் ஆத்துமத்துக்குப் பாவத்தினாலே மோசம் பண்ணுகிறதில்லை, நீ இங்கே கன்னியாஸ்திரீயாய் வந்தாப்போலே திரும்ப உன்னுடைய வீட்டுக்குக் கன்னியாஸ்திரீயாய்ப் போவென்று சொன்ன பிற்பாடு அவளுக்குச் சில பொன்களைக் கொடுத்தான். அவள் அந்த இராத்திரி அங்கேதானே பாவமில்லாமல் இருந்தாள். மறுநாள் ஞாயிற்றுக்கிழமை சூரியன் உதயத்துக்கு முந்தி அவள் தன் வீட்டுக்குப் போனாள்.

பிற்பாடு துரைமகன் பாளையத்துக்குப் போய்த் திங்கட்கிழமை சண்டையிலே சத்துருக்கள் அவனை.

வெட்டின காயத்தினாலே அவன் செத்தான். அவ னுடைய ஊழியக்காரன் அவன் சரீரத்தைக் கல்ல றையிலே வைத்தான். கொஞ்சநாளைக்குப் பிற்பாடு நாமிப்போது சொன்ன புண்ணியவதியாகிற மரியா யியென்றவள் துரைமகன் செத்த சேதி அறிந்து மெத்தக் கஸ்தியாய் இருந்து தேவமாதாவின் சுரூ பத்துக்கு முன்பாகப் போய்ச் சாஷ்டாங்கமாக விழு ந்து அழுகையோடே வேண்டிக்கொண்டதாவது: தேவமாதாவே அந்தத் துரைமகன் ஆத்துமம் எங் கே இருக்கிறது, நரகத்திலே இருக்கிறதோ இல்லை யோ சந்தேகம், ஆனபடியினாலே எனக்குச் சொல் லக் கூடாத கஸ்தியாயிருக்கிறது. தேவரீர் கஸ்திப் படுகிறவர்களுக்கு ஆறுதலாய் இருக்கிறபடியினா லே தேவரீராலே என்னுடைய கஸ்தி நீங்கவேணு மென்று அழுகையோடே வேண்டிக்கொண்டாள்.

தேவமாதா இவள் பேரிலே மெத்தப் பட்சமா யிருந்ததினாலே இந்தப் புண்ணியவதிக்குக் காண்பித் துத் திருவுளம் பற்றினதாவது: நீ அழவேண்டாம், அந்தத் துரைமகன் தன்னுடைய பாவத்தினாலே நரகத்துக்குப் போகப் பாத்திரமாயிருந்தான். ஆ னால் அவன் போன சனிக்கிழமையிலே நம்மைக் குறித்து உன் ஆத்துமத்துக்கு மோசம் பண்ணாமல் இருந்தபடியினாலே அவன் சண்டையிலே பட்ட காயத்தினால் சாகிற சமயத்திலே அவனுக்குத் த யைச் சகாயமாயிருந்தோம். ஆகையினாலே அவன் தான் செய்த பாவத்துக்கு மனஸ்தாபமாயிருந்து நல்ல ஆயத்தத்தோடே செத்தான். ஆகையால் நம் முடைய கிருபையினாலே அவன் ஆத்துமம் நரகத் துக்குத் தப்பி இப்போது உத்தரிக்கிற ஸ்தலத்திலே இருக்கின்றது. இன்னங் கொஞ்ச நாளைக்குள்ளாக நம்முடைய உதவியினாலே மோட்சத்துக்குப் போ

குமென்று வெளிப்படுத்தி மறைந்துபோனுள். மரி யாயி என்கிறவள் இந்தச் சேதி அறிந்து மிகவுஞ் சந்தோஷப்பட்டு அந்த ஆத்துமஞ் சீக்கிரமாய் மோட்சத்துக்குப் போகத்தக்கதாகப் பிச்சை ஒருச ந்தி இது முதலான தர்மங்களினுலே சகாயமாய் இ ருந்தாள்.

கிறீஸ்துவர்களே நீங்கள் இப்போது இந்த நல்ல புதுமையைக் கேட்ட பிற்பாடு ஒரு குடியானவன் தன் தோட்டத்தில் ஒரு மரத்திலே நல்ல கனிக ளைப் பறிக்கிறப்போலே நீங்கள் இந்தப் புதுமையி லே ஞானக் கனிகளைப் பறிக்கவேணும்.

முந்த முந்த நாம் இப்போது சொன்ன மரியாயி என்கிறவளுக்குப் பாவம் வருகிறதற்குக் கிட்டின தருவாயாயிற்று. எதினுலே என்றுல் அவளுடைய தாய் தகப்பன் அவளை அந்த அரண்மனைக்கு அனுப் பினதினுலே அவளுக்கு அந்த ஆகாத சமயம் வந் தது. இந்தப் பிரகாரமாய்க் கிறீஸ்துவர்களுக்குள் ளே சில தாய் தகப்பன்மார் இருக்கிறுர்கள். அவர் கள் பணத்தின் பேரிலே ஆசையினுல் தங்களுடைய பிள்ளைகள் ஆத்துமத்துக்குப் பாவத்தினுலே மோ சம் வந்தாலும் பாரமல்லவென்று கிரியையினுலே காண்பிப்பார்கள். சிலர் அக்கியானிகள் வீட்டிலே பிள்ளைகளை விற்றுப்போடுவார்கள். இந்த வழியாக அந்தப் பிள்ளைகள் பசாசுக்கு அடிமையாய் இருப் பார்கள். சிலபேர் தங்கள் பிள்ளையை உலோகத் தான் சொந்தக்காரனென்று அவனுக்குக் கலியா ணம் பண்ணிக் கொடுக்கிறுர்கள். பின்னும் அந்தப் பிள்ளை தன் புருஷனைப்போலே பசாசைக் கும்பி டும். இந்தக் கனமான மோசம் பிள்ளைகளுடைய ஆத்துமத்துக்குத் தாய் தகப்பன் நிமித்தமாக வந் தது. உங்கள் பிள்ளைகளுடைய ஆத்துமம் சேசுநா

தருக்குச் சொந்தமாய் இருக்கிறதல்லவோ? ஆகையால் சேசுநாதர் கட்டளையிட்ட பிரகாரத்துக்குக் கலியாணம் பண்ணவேணும். தாய் தகப்பன் முகாந்தரமாகப் பிள்ளைகளுக்குப் பாவத்தினாலே மோசம் வந்தால் அந்தத் தாய் தகப்பனைச் சர்வேசுரன் நன்றாய்த் தெண்டிப்பார்.

இரண்டாவது. நம்மாலே சொல்லப்பட்ட மரியாயி என்கிறவளுக்கு அந்தப் பெரும் பாவஞ் செய்யாதபடிக்கு மெய்யான மனது இருந்தபடியினாலே மிகவும் அழுததும் அல்லாமல் துரை மகனுக்குத் தாழ்ச்சியோடே நல்ல ஞானங்களைச் சொல்லிக் காட்டினாள். இந்தப் பிரகாரமாய் யாதொருவன் பாவத்துக்குச் சம்மதிக்கச் சொன்னால் அந்த மரியாயி செய்தாப்போலே நீங்களுஞ் செய்யவேணும். அதேதென்றால் நீங்கள் பாவஞ் செய்யாதபடிக்கு உங்களுக்கு மெய்யான மனது உண்டானால் அவனவன் பாவஞ் செய்ய உங்களை அலட்டினாலும் பாவத்துக்குச் சம்மதியாதபடிக்கு இடம் விட்டு விலக வேணும். காயமாகிலுஞ் சாவென்கிலும் எந்தெந்தக் கஸ்தியாகிலும் வந்தாலும் பாவஞ் செய்யாமல் அதுகளை அநுபவித்தாலும் பாரமல்லவென்று பாவத்தினாலே ஆத்துமத்துக்கு வருகிற கஸ்தியைப்பார்க்கச் சாவினாலே வருகிற கஸ்தி கொஞ்சமாய் இருக்குமென்று நினைத்து உறுதியாய் இருங்கள்.

மூன்றாவது. நாம் இப்போ சொன்ன மரியாயி என்கிறவளுக்குத் தேவமாதாவின்பேரில் மெய்யான பத்தி இருந்ததினாலே சனிக்கிழமை பாவஞ் செய்ய மாட்டேனென்றாள். இந்தப் பிரகாரமாய்க் கிறீஸ்துவர்கள் எல்லோரும் நடந்தால் மெத்த நல்லது. மேலும் பாவமானது எந்த நாளிலுஞ் சர்வேசுரனுக்கு ஏற்காத படியினாலே எந்த நாளிலும் அதைச் செய்

யலாகாது. சில கிறீஸ்துவர்கள் தேவமாதாவைக் குறித்துச் சனிக்கிழமைதோறும் ஒருசந்தியாய் இருக்கிறபோது புறணி வார்த்தை சொல்லிச் சண்டை கொடுத்துப் புறத்தியாரிடமாய் மோக பாவத்தைச் செய்து இப்படியே மனதின்படி நடப்பார்கள். இப்படிக்கொத்த மனுஷர் ஒருசந்தியாய் இருக்கிறபோது பசாசுக்குத் தங்கள் பாவத்தினாலே விருந்து கொடுக்கிறார்கள். இப்படிச் செய்யலாகாது. நீ தேவமாதாவைக் குறித்துச் சனிக்கிழமை ஒருசந்தியாய் இருந்தால் அன்றைக்கு உன்னுடைய கிரியையினாலே தேவமாதாவுக்குச் சந்தோஷம வரத்தக்கதாகச் சண்டை போடாமலும் புறணி பொல்லாத வார்த்தை சொல்லாமலும இப்படியே எந்தப் பாவங்களையுஞ் செய்யாமல் இருக்கவேணும.

நான்காவது. நாம் இப்போது சொன்ன துரைமகன் சனிக்கிழமை ஒருசந்தியாய் இருந்தால் புண்ணியம். இதல்லாமல் அந்தப் பெண்பிள்ளையினிடத்திலே பாவங் கட்டிக்கொண்டால் அவனுக்குக் கனமான மோசம் வருமே. அதேதென்றால் அவனுக்கு இரண்டு நாளைக்குப் பிற்பாடு திங்கட்கிழமை அதுப்பிலே சாவு வந்தது. ஆகையால் தம்பி தங்கைமாரே உங்களுக்குச் சாவு எப்போ வருமென்று தெரியாததினாலே நீங்கள் சாவான பாவம் இல்லாமல் எப்போதுஞ் சர்வேசுரனுடைய இஷ்டப்பிரசாதத்தோடே இருக்கவேணும.

ஐந்தாவது. நாம இப்போது சொன்ன துரைமகன் தேவமாதாவைக் குறித்துச் சனிக்கிழமை பாவஞ் செய்யாததினாலே அவனுக்குத் தேவமாதாவின் வழியாகக் கனமான நன்மையாகிற மோட்ச பாக்கியம வந்தது. ஆகையால் நீங்கள் தேவமாதாவைக் குறித்துத் தினந் தினம் ஏதாகிலுந் தோத்திரஞ் செய்

தால் தேவமாதாவின் உதவியினுலே உங்களுக்கு மோட்ச பாக்கியம் வருகிறதற்கு உதவுமென்று அறியக்கடவீர்களாக.



## ௰-ம் சனிக்கிழமைப்

புதுமையாவது.

### சனிக்கிழமையில் ஒருசந்தியாய் இருந்ததினுலே வந்த புதுமை.

உத்திராதி இராச்சியத்திலே கிறீஸ்துவனுன ஒரு பெரியவன் வீட்டிலே சில ஊழியக்காரர், இருந்தார்கள். அவர்களுக்குள்ளே ஒரு ஊழியக்காரன் ஊமையுமாய்ச் செவிடனுமாய் இருந்தான். அவன் வேலை செய்கிறதிலே கெட்டிக்காரனுய் இருந்ததினுலே ஏசமான் இவன் பேரிலே மெத்தப் பட்சமாய் இருந்தான். இந்த ஊழியக்காரனுக்குக் கனமான வியாதி வந்ததினுலே அவஸ்தையாய் இருக்கையிலே அவன் தனியே இருக்கிறபோது தேவமாதாவாகிய அர்ச். கன்னிமரியாயி அவனுக்குக் காண்பித்து அவன் காது கேட்கவும் வாய் பேசவுங் கட்டளையிட்டு நீ நல்ல பாவசங்கீர்த்தனம் பண்ணித் தேவநற்கருணை வாங்கி நீ செய்த பாவத்துக்குத் தபசு பண்ணு. கடைசியிலே நாம்தாமே உன்னை மோட்சத்துக்குக் கூட்டிக்கொண்டு போவோமென்று மகா பட்சத்தோடே திருவுளம் பற்றின பிற்பாடு காணுமல் மறைந்து போனுள்.

இப்படிக்கொத்த கனமான சகாயத்தினாலே இந்த ஊழியக்காரனுக்குத் தேவமாதாவின் பேரிலே எம்மாத்திரம் பத்தியும் எம்மாத்திரஞ் சந்தோஷமும் வந்ததென்று வாக்கினாலே சொல்லக்கூடாது. அப்படியே அந்த ஊழியக்காரன் தேவமாதா கற்பித்த பிரகாரத்துக்குச் செய்தான். அவனுடைய எசமானும் மற்ற ஊழியக்காரரும் இந்தக் கனமான புதுமையைக் கண்டு அவனை அழைப்பித்து ஆச்சரியப்பட்டு இது எப்படி உனக்குச் சம்பவித்ததென்று அவனைக் கேட்டார்கள். அதற்கு அவன் தேவமாதா தனக்குக் காண்பித்துத் திருவுளம் பற்றின சேதியெல்லாம் வகை விபரமாய்ப் பிரித்துச் சொன்ன பிற்பாடு அவர்கள் கேட்டதாவது: நீ எந்தப் புண்ணியஞ் செய்தாய், எதினாலே தேவமாதா உனக்கு இந்தக் கனமான சகாயம் பண்ணினாளென்று கேட்டார்கள். அதற்கு அவன் சொன்னதாவது:

நான் தேவமாதாவை அறியேன். ஆனால் என்னுடைய எசமான் தினந் தினம் நன்றாய்ச் சாப்பாட்டானாலுஞ் சனிக்கிழமைதோறும் ஒருசந்தியாய் இருக்கிறதை நான் கண்டு எனக்கு இந்தப் புண்ணியம் ஆகவேணுமென்று நினைத்து எசமான் இந்தக் கிழமை ஒருசந்தி ஆரைக் குறித்து இருக்கிறானோ அவரைக் குறித்து நானும் ஒருசந்தி இருப்பேனென்று சனிக்கிழமைதோறும் ஒருசந்தியாய் இருந்தேன். இந்தக் கொஞ்சப் புண்ணியத்தைக் குறித்துத் தேவமாதா தம்முடைய தயையினாலே அடியேனுக்கு இந்தக் கனமான சகாயம் பண்ணினாளென்று சொன்னான். எசமானும் அந்த ஊழியக்காரரும் இதுகேட்டுத் தேவமாதாவை மிகவுந் தோத்திரஞ் செய்ததும் அல்லாமல் தேவமாதாவுக்கு ஊழியம் பண்ணுகிறதற்கு அதிக ஆசையாய் இருந்தார்கள்.

கிறீஸ்துவர்களே நந்தவனத்திலே அதை விசாரிக்கிறவன் நல்ல புஷ்பங்களைப் பறிக்கிறாப்போலே இந்த ஆச்சரியமான புதுமையிலே நீங்கள் ஞான புஷ்பங்களைப் பறிக்கவேணும். முந்த முந்தப் பிள்ளைகளுடைய தாய் தகப்பன்மாரே, எசமான்களே, உங்களுடைய பிள்ளைகளுக்கும் ஊழியக்காரருக்கும் புத்திவரத்தக்கதாக நீங்கள் நல்ல மாதிரிகையைக் காண்பிக்கவேணும். நீங்கள் சனிக்கிழமை ஒருசந்தியாய் இருந்தாலுந் தினஞ் செபம் பண்ணினாலும் பிச்சை கொடுத்தாலும் உங்கள் பிள்ளைகள் இதைக் கண்டு பிச்சை கொடுத்துச் செபம் பண்ணி ஒருசந்தியாய் இருப்பார்கள். அதேதென்றால் சிறியோர்கள் வழக்கமாய்ப் பெரியோர்களுடைய மாதிரிகையைக் கண்டுபாவிப்பார்கள். அப்படி நாம் இப்போது சொன்ன புதுமையிலே இந்த எசமான் சனிக்கிழமை ஒருசந்தியாயிருந்ததை அவனுடைய ஊழியக்காரன் கண்டு அவனுக்குத் தேவமாதா ஆறொன்று தெரியாதிருந்தாலும் எசமான் செய்கிறாப்போலே அந்த ஊழியக்காரன் செய்தான். இந்தப் பிரகாரமாய் உன்னுடைய பிள்ளைகளுக்கும் உன் நல்ல மாதிரிகையினாலே நல்ல புத்தி வரும்.

இரண்டாவது. நம்மாலே இப்போது சொல்லப்பட்ட ஊழியக்காரன் அந்தச் சின்ன புண்ணியத்தைச் செய்ததினாலே தேவமாதா அவனுக்குக் கனமான சகாயம் பண்ணினாள். ஆகையால் தேவமாதாவுக்கு இப்படிக்கொத்த நல்ல குணம் இருக்கிறபடியினாலே நீ சாகிறமட்டுஞ் சந்தோஷமாய் அந்த மாதாவுக்கு ஊழியஞ் செய்யவேணும். இந்த வழியாக உனக்கு எண்ணப்படாத நன்மைகள் வரும்.

மூன்றாவது. சனிக்கிழமைதோறும் பூலோகத்துக்கு ஆண்டவளைக் குறித்து ஒருசந்தியாய் இருக்கிற

புண்ணியத்தின்பேரிலே தேவமாதா மெத்தப் பிரியமாய் இருக்கிறதினாலே நீ அவளைக் குறித்துச் சனிக்கிழமை ஒருசந்தியாய் இருந்தால் தேவமாதா உன்பேரிலே பட்சமாய் இருப்பாள். இது தவிரப் பூலோகத்துக்கு ஆண்டவனுடைய மற்ற மகிமைகளைப் பார்க்க அவள் சென்மப்பாவம் இல்லாமல் உற்பவித்த மகிமையின்பேரிலே பத்தியாய் இருக்கிறது அவளுக்கு மிகவும் பிரியமாயிருக்கும். இதினாலே சிந்து தேசத்துக்கு அப்போஸ்தலரான அர்ச். சவேரியார் அப்படிக்கொத்த மகிமையின்பேரிலே மகா பத்தியாய் இருந்ததும் அல்லாமல் எல்லாருக்கும் இந்தப் பத்தி வருவிக்கத்தக்கதாகப் பிரயாசப்படுவார். அவர் இடத்திலுள்ள இந்தப் பத்தி முகாந்தரமாகத் தேவமாதா சென்மப்பாவம் இல்லாமல் உற்பவித்த திருநாள் முன்னாக வருகிற ஒன்பது நாளைக்குள்ளே அர்ச். சவேரியாருக்கு நல்ல மரணத்தைக் கொடுத்து அந்த மகாத்துமாவை மோட்சத்துக்கு அழைப்பித்தாள். இதினாலே நீங்கள் அர்ச். சவேரியாரைப்போலே தேவமாதா சென்மப்பாவம் இல்லாமல் உற்பவித்த இந்த மகிமையின்பேரிலே பத்தியாய் இருக்கிறதும் அல்லாமல் சென்மப்பாவம் இல்லாமல் உற்பவித்த மாதாவின் உத்தரீயம் பெற்றுத் தரித்திருக்கிறது நல்ல புண்ணியமென்றும் இந்த உத்தரீயந் தரிக்கிறவர்களுக்கு எண்ணிக்கை இல்லாத பலன்கள் இருக்கிறதென்றும் அறியக்கடவீர்களாக.



## ௰க-ம் சனிக்கிழமைப்

புதுமையாவது.



எரோணிமென்பவன் தேவமாதாவின் படங்களை
நேத்தியாய் எழுதினதைப்பற்றிப் பசாசு
அவனுக்குச் செய்த மோசத்தை
மோக்ஷராக்கினி பரிகரித்த
புதுமை.

உத்திராதி ராச்சியத்திலே ஒரு பட்டணத்தில் அர்ச். பெர்நர்து சபையில் உட்பட்ட கன்னியாஸ்திரிகளின் மடமும் சந்நியாசிகளின் மடமுமாக இரண்டு மடம் இருந்தது. சந்நியாசிகள் மடத்திலே அவர்களுக்கு ஊழியம் பண்ணத்தக்கதாக எரோணிம் என்னும் ஒருத்தன் இருந்தான். கன்னியாஸ்திரிகள் மடத்திலே அவர்களுக்கு ஊழியம் பண்ணத்தக்கதாக ஒரு பெண்பிள்ளை இருந்தாள். இப்படி இருக்கையிலே சந்நியாசிகள் மடத்திலே திருநாள் முகாந்தரமாக ஊழியஞ் செய்கிற எரோணிம் என்கிறவன் திருநாளுக்கு வேண்டிய சில தட்டு முட்டுகளைக் கன்னியாஸ்திரிகள் மடத்துக்குப் போய் வாங்கி வந்து திருநாள் முடிந்தவுடனே திரும்பக் கன்னியாஸ்திரிகள் மடத்துக்குக் கொண்டுபோய்க் கொடுப்பான். இந்தப் பிரகாரமாகக் கன்னியாஸ்திரிகள் மடத்திலே திருநாள் கொண்டாடுகிறபோது அதற்கு வேண்டிய தட்டு முட்டுகளை அங்கே ஊழியம் பண்ணுகிற பெண்பிள்ளை சந்நியாசிகள் மடத்துக்குப் போய் வாங்கி வந்து திருநாள் முடிந்த பிற்பாடு திரும்பச் சந்நியாசிகள் மடத்துக்குக் கொண்டுபோய்க் கொடுப்பாள்.

இதினாலே அந்த எரோணிம என்கிறவனுக்கும அந்தப் பெண்பிள்ளைக்கும் பழக்கமாய் இருந்தது. இந்தப் பழக்கத்தைக்கொண்டு பசாசானது எரோணிம் என்கிறவனுக்குக் கனமான மோசம வரத்தக்கதாக ஒரு உபாயம பண்ணிற்று. அது எப்படி என்றால் நமமாலே இப்போது சொல்லப்பட்ட எரோணிம என்கிறவனுக்குச் சித்திரம எழுதுகிற தொழில் தெரிந்ததினாலே அவன் தேவமாதாவின பேரிலே மெத்தப் பத்தியாய் இருந்து அநேகம விசை தேவமாதாவின் நல்ல சுரூபங்களை மெத்தச் சவுந்தரியமாக எழுதித் தேவமாதா சுரூபத்தின காலின் கீழே பசாசினுடைய உருவத்தை மகா அவலட்சணமுள்ள ரூபமாய் எழுதிப் பசாசின உருவத்தைப் பார்த்துக் காறித் துப்புவான். அதினாலே பசாசுக்குக் காய்மகாரமும் வன்மமும் உண்டாயிற்று. அது தன்னை அவலட்சணரூபமாயுந் தேவமாதாவைச் சவுந்தரியமாயும எழுதினதைக் கண்டு எரோணிம என்கிறவன் பேரிலே மெத்தக் கோபமாயிருந்து அவனுக்குக் காணப்பித்துச் சொன்னதாவது:

நீ நம்மைப் பரியாசம பண்ணுகிறதை விட்டுவிடுவாய். நீ முந்தமுந்த நம்மை அவலட்சணமாய் எழுதினது ஒரு குற்றம. ஆனால் இந்தக் குற்றம பொறுத்துக் கொள்ளலாம. பிற்பாடு நம்முடைய ரூபத்தைப் பார்த்துத் துப்பினது இரண்டாவது குற்றமாம். அதுவும பொறுத்துக்கொள்ளலாம. ஆனால் நம்முடைய சத்துராளியாகிற தேவமாதாவின் காலின்கீழே நம்மை எழுதின கனமான குற்றத்தைப் பொறுக்கமாட்டேன். ஆகையால் இந்த மூன்றாவது குற்றஞ் செய்ததினாலே நம்மாலே உனக்கு எம்மாத்திரம் மோசம வருமென்று இனிமேல் அறியப்போகிறாயென்று சொல்லிற்று. இதற்கு எரோணிம

என்கிறவன் நீ என்ன செய்தாலும் உனக்கு நான் பயப்படுகிறதில்லை. உன்னைச் சட்டை பண்ணுகிறதுமில்லை. உன்னாலே எனக்கு மோசம வராதபடிக்குத் தேவமாதா எனக்குச் சகாயமாய் இருப்பாளென்று சொன்ன பிற்பாடு பசாசு காணாமல் மறைந்து போயிற்று.

எரோணிம் என்கிறவன் பசாசு சொன்ன சேதியை நினைத்துப் பசாசினாலே தனக்கு மோசம் வாராதபடிக்குச் சில நாள் எச்சரிக்கையாய் நடந்து பிற்பாடு மறந்துபோனபடியினாலே பசாசு அவனைக் கெடுக்கத்தக்கதாக ஒரு உபாயம பண்ணிற்று. அதேதென்றால் கன்னியாஸ்திரிகள் மடத்து ஊழியக்காரிச் சொரூபமாகப் பசாசானது ஒரு நாள் இராத்திரியிலே எரோணிம என்கிறவனுடைய அறைக்கதவைக் கையினாலே தட்டிற்று. அப்போது நித்திரைபோகிற எரோணிம அந்தச் சத்தங்கேட்டு விழித்து ஆரங்கே என்று கேட்டான். அதற்குப் பசாசு சொன்னதாவது: நான் இன்னாள், உன்னுடனே ஒரு சேதி சொல்லுகிறதற்கு எனக்கு அவசரம் மெத்த. ஆகையால் கதவைத் திறவென்று சொல்லிற்று. இந்நேரத்திலே இங்கே எதுக்கு வந்தாயென்று கேட்டான். அதற்குப் பெண்பிள்ளை ரூபமாய் இருக்கிற பசாசு சொன்னதாவது:

நான் அந்தக் கன்னியாஸ்திரிகள் மடத்திலே அதிக ஊழியஞ் செய்கிறதற்குச் சலிப்பாய் இருக்கிறேன், நான் உன்பேரிலே பட்சமாய் இருக்கிறதினாலே உன்னிடத்தில் ஓடிவந்தேன், நீ என்பேரிற் பட்சமாய் இருந்தால் நான் செய்தாப்போலே நீயுஞ் செய்யவேணும், அதேதென்றால் இந்தச் சின்ன சுமையைப் பார், இந்தச் சுமைக்குள்ளே கன்னியாஸ்

திரிகள் மடத்திலே உண்டான வெள்ளியினலே செய்த சிலுவையும் மெழுகுதிரிப் பாதமுந் தூண்டா விளக்குஞ் சில தட்டுமுட்டுகளும் இருக்கிறது. சின்ன சுமையாய் இருக்கத்தக்கதாக அந்தத் தட்டுமுட்டுகளெல்லாம் உடைத்து இதற்குள்ளே வைத்திருக்கிறேன். எதிலே நான் இப்படி செய்தேனென்று கேட்டால் நானும் நீயும் வேறே இராச்சியத்திலே போய் அங்கே நன்ருய் இருக்கத்தக்கதாக இந்த வெள்ளித் தட்டுமுட்டுகளை நான் கொண்டுவந்தேன். ஆகையால் நீயும் உன்னுடைய சந்நியாசிகள் கோயிலுக்குள்ளே போய் அங்கே இருக்கிற வெள்ளித் தட்டுமுட்டுகளை எல்லாம் ஒரு பைக்குள்ளே வைத்து இங்கே கொண்டுவாவென்று பசாசு சொல்லிற்று.

எரோணிமென்கிறவன் நல்ல புண்ணியவானுய் இருந்தாலும் பெண்பிள்ளை ரூபமாக வந்த பசாசுக்கு நல்ல ரூபமுங் கழுத்திலே நல்ல உடைமையும் இருந்ததினலே இதை அவன் கண்டு பசாசு வலையில் அகப்படச் சம்மதித்தான். அப்போதுதானே சந்நியாசிகள் நித்திரை செய்கிறபோது எரோணிமென்கிறவன் கோவிலுக்குள்ளே போய் அங்கே உண்டான வெள்ளித் தட்டுமுட்டுகளெல்லாம் எடுத்து உடைத்து ஒருபையிலே வைத்து அந்தப் பெண்பிள்ளையோடே கூடமடத்தைவிட்டு ஓடிப்போனுன். இவர்கள் மடத்தின் வாசலெல்லாங்கடந்து கடைசித்தலை வாசலிலே போகிறபோது பெண்பிள்ளை ரூபமான அந்தப் பசாசு எரோணிமென்கிறவனைப்பார்த்துச் சொன்னதாவது: ஐயையோ விலையேறப்பெற்ற ஒரு நல்ல வஸ்து எடுத்துவர மறந்துபோனேனென்று சொல்லிப் பசாசு உடனே சந்நியாசிகள் மடத்துக்குள்ளே போய்க் கெட்டியாய்க் கூப்பிட்டுச் சொன்னதாவது:

சந்நியாசிகளே சீக்கிரமாய் எழுந்திருங்கள். அதே தென்றால் உங்களுடைய ஊழியக்காரனை எரோணிமென்கிறவன் உங்கள் கோயிலில் உண்டான வெள்ளித் தட்டுமுட்டுகளெல்லாங் களவாண்டுகொண்டு ஓடிப்போனான். இப்போது கடைசித் தலைவாசலிலே இருக்கிறான். நீங்கள் சீக்கிரமாய்ப் போனால் உடனே பிடிக்கலாம். அவன் கையிலே ஒரு பைக்குள்ளே அந்த வெள்ளித் தட்டுமுட்டுகளெல்லாம் இருக்கிறதென்று சொன்ன பிற்பாடு பெண்பிள்ளை ரூபமாயிருந்த அந்தப் பசாசு காணாமல் மறைந்து போயிற்று. பசாசு கூப்பிட்ட சத்தங் கேட்டுச் சந்நியாசிகள் எல்லோரும் விழித்துக்கொண்டு எல்லாரும் கோயிலிலே போய்ப் பார்க்கிறபோது அங்கே வெள்ளித் தட்டுமுட்டுகளெல்லாங் காணாதபடியினாலே சிரேஷ்டர் முதலான சந்நியாசிகள் எல்லாருந் தலைவாசலிலே போய்ச் சேர்ந்த பிற்பாடு எரோணிமென்கிறவன் கையிலே களவாண்ட தட்டுமுட்டுகளைக் கண்டதினாலே வேறே சாட்சித் தேவையில்லையென்று நினைத்து அவனைப் பிடித்து விலங்கு போட்டு ஒரு அறையிலே காவலிலே வைத்த பிற்பாடு சந்நியாசிகள் எல்லோரும் நித்திரை செய்யப் போனார்கள்.

அவர்கள் நித்திரை போகிறபோது எரோணிமென்கிறவன் காவற்கூடத்திலே இருந்து தனக்கு இந்த அவமானம் வந்ததினாலேயும் தான் இந்தக் கனமான பாவத்திலே விழுந்ததினாலேயும் அந்த இராத்திரி முழுதுங் கஸ்தியினாலே அழுதான். இப்படி அவன் அழுகிறபோது அநேகம் விசை சர்வேசுரனைப் பார்த்து அறியாமல் செய்தேனென்று சொன்னதும் அல்லாமல் தேவமாதாவைப் பார்த்துச் சொன்னதாவது: நான் இந்தமட்டுந் தேவரீர் பேரிலே நம்பி

க்கையாய் இருக்கிறேன். தேவரீர் இந்தச் சமயத்திலே எனக்குச் சகாயமாய் இருக்கவேணுமென்று வேண்டிக்கொண்டான். இப்படி அவன் வேண்டிக்கொள்ளுகிறபோது பசாசு ஒரு மனுஷ ரூபமாக வந்து அவனுக்குக் காண்பித்து அவனைப் பரியாசம் பண்ணத்தக்கதாக அவனைப் பார்த்துச் சற்றுநேரஞ் சிரித்துக்கொண்டிருந்து அவனைப் பழித்துச் சொன்னதாவது:

சித்திரவேலையிலே மெத்தக் கெட்டிக்காரனாயிருந்தவனே இப்போது என்ன சொல்லுகிறாய், நம்மாலே உனக்கு மோசம வந்ததில்லையோ? நாம முந்தி உன்னோடே சொல்லி இருந்தோம், நம்முடைய வார்த்தையை நீ விசுவசிக்கவில்லை நீ முந்தி நமக்குச் செய்த அவமானத்தினாலே இப்போது உனக்கு வந்த இந்தக் கஸ்தியாகிற கலியைச் சாப்பட வேணும, கடைசியிலே இதோ நமமுடைய வலையிலே விழுந்தாய், நீ முந்தி உன்னுடைய ஆண்டவள் சுரூபத்தை நல்ல ரூபமாய் எழுதினாய், அந்த ஆண்டவள் இப்போது இந்தத் தின்மையில் நின்று உன்னை இரட்சிக்கவில்லையே என்று பரியாசமாய்ப் பசாசு சொல்லிற்று.

இதற்கு எரோணிமென்கிறவன் ஆண்டவளாகிற அர்ச். கன்னிமரியாயி இங்கே வந்து என்னை இரட்சிப்பாளென்று நான் நம்பிக்கையாய் இருக்கிறேன். அவள் இங்கே வந்தால் பசாசே நீ வெட்கப்படுவாயென்று சொன்ன பிற்பாடு அந்த க்ஷணத்திலேதானே பூலோகத்துக்கு ஆண்டவள் எண்ணப்படாத சம்மனசுகளோடேகூட அந்தக் காவற்கூடத்திலே வந்து காண்பித்து எரோணிம் என்கிறவனுக்கு ஆறுதலான வார்த்தையைச் சொன்னதும அல்லாமல்

சம்மனசுகளைக்கொண்டு அவனுடைய விலங்கை வி டுவித்தாள்.

பிற்பாடு தேவமாதா பசாசைப் பார்த்துப் பசா சே நீ எரோணிமென்பவன் ரூபமாக இருவென்று கட்டளையிட்டுச் சம்மனசுகளைப் பார்த்து நீங்கள் எ ரோணிமு வேஷமாக இருக்கிற இந்தப் பசாசை வி லங்கிலே போடுங்களென்று கட்டளையிட்ட பிரகார த்துக்குச் சம்மனசுகள் பசாசை விலங்கிலே போட் டார்கள். பிற்பாடு தேவமாதா எரோணிம் என்கிற வனைப் பார்த்து நீ எப்போதும்போலே சந்நியாசிக ளை எழுப்புகிற பெரிய மணியை விடியற்காலத்தில் அடி, இனிமேல் பசாசினாலே உனக்கு மோசம் வ ராதபடிக்கு எச்சரிக்கையாய் நடவென்று அருளிச் செய்து காணாமல் மறைந்துபோனாள்.

சந்நியாசிகள் செபம் பண்ணுகிற நேரம வந்ததி னாலே உடனே எரோணிமென்கிறவன் பெரிய மணி யை அடித்தான். இந்த மணியை அடிக்கிறதற்கு அந்தச் சமயத்திலே குறிக்கப்பட்ட வேறே ஒருவன் மணி அடித்தது ஆரென்று விசாரிக்கத்தக்கதாக அ ங்கே போய் எரோணிம் என்கிறவன்தான் மணி அ டிக்கிறதைக் கண்டு சிரேஷ்ட சுவாமியிடத்திற் போய்த் தான் கண்ட சேதியைச் சொன்னான். சிரே ஷ்டரும் மற்றச் சந்நியாசிகளும் இதை நன்றாய் விசாரிக்கத்தக்கதாகக் காவற்கூடத்திலே போய் வி சாரிக்கிறபோது எரோணிம் என்கிறவன் விலங்கி லே கிடக்கக் கண்டார்கள். பிற்பாடு கோயிலுக்குள் ளே போய்ப் பார்க்கிறபோது அங்கே வேறே எரோ ணிமு ஊழியஞ் செய்கிறதைக் கண்டார்கள்.

சிரேஷ்ட சுவாமியும் மற்றச் சந்நியாசிகளும் மோ சம் போனோமென்று நினைத்துக் காவற்கூடத்திலே இருக்கிற எரோணிம் என்பவனுங் கோயிலிலே இரு

க்கிற எரோணிமுமாகிய இந்த இரண்டு பேருக்குள்ளே ஆர் மெய்யான எரோணிமென்று சந்தேகப்பட்டுச் சிரேஷ்ட 'சுவாமி கோயிலிலே இருக்கிற எரோணிமு மெய்யான மனுஷனோ பசாசோவென்று சோதிக்கத்தக்கதாக அவனுடைய தலையிலே கோயில் தீர்த்தத்தைத் தெளித்தார். உடனே அவன் தலை குனிந்து பத்தியோடே நமஸ்காரம் பண்ணினான். சிரேஷ்ட சுவாமி இதுகண்டு காவலிலே இருக்கிற எரோணிமு மெய்யான மனுஷனோ பசாசோவென்று சோதிக்கத்தக்கதாகக் காவற்கூடத்திலே போய் அங்கே விலங்கிலே கிடக்கிற எரோணிமுத் தலைமேலே தீர்த்தத்தைத் தெளித்தார். அந்தப் பொய்யான எரோணிமு இருந்தாப்போலே ஒரு புகைபோலே காணாமல் மறைந்துபோனான். அந்தக் காவற்கூடத்தை விட்டுப் பசாசு போகிறபோது அந்த அறையிலே நரக நாற்றம் வீசிற்று.

சிரேஷ்டரும் மற்றச் சந்நியாசிகளும் இதைக் கண்டு வெள்ளித் தட்டுமுட்டுகளெல்லாந் துண்டு துண்டாய் இருக்குதோ முன்னையைப்போலே முழுசாய் இருக்குதோவென்று அறியக் கோயிலுக்குள்ளே போய்ப் பார்க்கிறபோது அது தேவமாதாவின் புதுமையினாலே எப்போதும்போலே முழுசாய் இருக்கிறதைக் கண்டார்கள். அப்போ சிரேஷ்டரும் மற்றச் சந்நியாசிகளும் பசாசு எரோணிமு வேஷமாகத் தங்களை மோசம் பண்ணிற்றென்று நினைத்ததும் அல்லாமல் மெய்யான எரோணிம் என்கிறவன் களவாணியல்ல, நம்பிக்கையுள்ள மனுஷனென்று முன்னையைப்போலே நினைத்தார்கள்.

எரோணிமென்கிறவன் கன்னியாஸ்திரிகள் மடத்துக்கு ஆள் அனுப்பித் தட்டுமுட்டுகள் களவு போச்சுதோவென்றும் அந்தக் கன்னியாஸ்திரிகள் மட

த்து ஊழியக்காரி இருக்கிருளோவென்றும் விசாரி க்கிறபோது அங்கே களவுமில்லை, அந்தப் பெண்பி ள்ளையும் இருக்கிருளென்று அறிந்து இந்தக் காரி யங்கள் எல்லாம பசாசிஞலே வந்ததென்று எண் ணிஞன். ஆகையால் எரோணிமென்கிறவன் தேவ மாதா இந்த நல்ல வகையாய்த் தனக்குச் செய்த சகாயத்துக்கு நன்றியறிந்த தோத்திரம் பண்ணின தும அல்லாமல் பரிசுத்த மாதாவின்பேரிலே முன் னையைப் பார்க்க அதிக பத்தியாய் இருந்தான். இந் த அதிசயமான சேதியெல்லாக தான் சாகிற சமய த்திலே தேவமாதாவுக்குத் தோத்திரம் உண்டாக வெளிப்படுத்திஞன். இந்த வழியாக நாம் அறிந் தோம்.

கிறீஸ்துவர்களே ஒரு சிறு குழந்தை தன்னுடை ய தாயிடத்தில் பால் குடிக்கிறுபபோலே நீங்கள் ஞானத் தாயாராகிற தேவமாதாவின் இடத்திலே இப்போது கேட்ட இந்த ஆச்சரியமான புதுமையி ஞலே ஞானப் பால் குடிக்கவேணும். முந்தமுந்த நம்மாலே இப்போது சொல்லப்பட்ட எரோணிம் என்கிறவனுக்கு ஒரு பெண்பிள்ளையுடைய மாசி ல்லாத சிநேகத்தைக்கொண்டு மோசம வந்தது. இ ப்படிக்கொத்த மோசங்கள் வாாதபடிக்கு ஆண்பிள் ளை பெண்பிள்ளைகளுக்குள்ளே சிநேகம் வேண்டாம். இந்த மாசில்லாத சிநேகங் குற்றம் இல்லையென்று சிலர் சொல்லுவார்கள். மெய்தான். துவக்கத்திலே அந்தச் சிநேகம் மாசில்லாத சிநேகமென்று நாமுஞ் சொல்லுகிறேம். ஆனுல் அந்தச் சிநேகத்தைக்கொ ண்டு பசாசு இனிமேல் உனக்கு மோசம் பண்ணும். அந்தச் சிநேகத்திஞலே துவக்கத்திலே குற்றம் இ ல்லாதிருந்தாலுங் கடைசியிலே உன் ஆத்துமத்துக் குக் கேடாயிருக்கும்.

நாம் இப்போது சொன்ன புத்தியை நீங்கள் நன்றாய்க் கண்டுபிடிக்கத்தக்கதாக ஒரு உவமையினாலே வெளிப்படுத்துவோம். அதெப்படி என்றால் ஒரு செம்பிலே நல்ல தண்ணீரிருக்க உன்னுடைய வீட்டிலே நல்ல மண்ணும் இருந்தால் அந்தத் தண்ணீரை அந்த மண்மேல் ஊற்றின உடனே சேறாகும். இந்த அசுத்தமான சேறு எது முகாந்தரமாய் வந்தது, அதுக்கு எது காரணம்? தண்ணீரோ? நல்ல தண்ணீர்தான். மண்ணோ? நல்ல மண்ணுதான். ஆகையால் அந்த அசுத்தமான சேறு தண்ணீரால் வந்ததோ மண்ணினால் வந்ததோவென்று விசாரிக்கும்போது நாம் மறுவுத்தாரமாகச் சொல்லுவது தண்ணீரால் மாத்திரம் வரவில்லை, மண் முகாந்திரமாகவும் வரவில்லை, தண்ணீரும் மண்ணுங் கூடக் கலந்ததினாலே அந்த அசுத்தமான சேறு வந்ததென்று சொல்லுகிறோம்.

இந்தப் பிரகாரமாய் அவன் நல்ல மண்போலிருக்கிறான். இவள் நல்ல தண்ணீர்போல் இருக்கிறாள். இவளுக்கும் அவனுக்குஞ் சிநேக பழக்கம் இல்லாதிருக்கிறமட்டும் அவர்களாலே பொல்லாத சேறாகிற பாவமுண்டாகவில்லை. அவனும் இவளுஞ் சிநேகமாய் இருந்தால் அந்தச் சிநேகத்தைக் கொண்டு பொல்லாத சேறாகிற பாவம் வருகிறதற்கு இடமாயிருக்கும். ஆகையால் எரோணிம் என்கிறவனுக்குச் சிநேகத்தின் வழியாக வந்த மோசம் உங்களுக்கு வராதபடிக்கு அந்தவகைச் சிநேகத்தின் பேரிலே அரோசிகமாய் இருக்கவேணும்.

பின்னேயும் பெண்பிள்ளை ரூபமாகப் பசாசு எரோணிம் என்பவனுக்குக் காண்பித்து நல்ல ரூபத்தைக் கொண்டு சோதனைப் பண்ணுகிறபோது அந்தச் சமயத்திலே எரோணிம் என்கிறவன் தேவமாதா

வின் பேரைக் கூப்பிட்டிருந்தால் அவன் பசாசின் வலையில் அகப்படமாட்டான். அதேனென்றால் பசாசுகள் அர்ச். கன்னிமரியாயி பேரைக்கேட்டவுடனே ஆத்துமத்துக்குப் பண்ணுகிற சோதனையை விட்டுவிடுமென்று அர்ச். பொனவெந்தூரென்கிறவர் அருளிச்செய்தார். ஆகையால் உனக்குப் பசாசு யாதொரு ரூபமாயானாலும் வேறே வழியாகவென்கிலுஞ் சோதனை பண்ணினால் நீ அர்ச். மரியாயி என்கிற பேரைக் கூப்பிட்டால் பசாசு உனக்குப் பண்ணுகிற சோதனையை விட்டுவிடும்.

பின்னையும் நம்மாலே சொல்லப்பட்ட எரோணிம் என்கிறவன் பசாசின் வலையிலே விழுந்தபிற்பாடு கஸ்தி வந்த சமயத்திலே தேவமாதாவின் பேரிலே நம்பிக்கை விடாமல் அந்த வேளையிலே தாழ்ச்சியோடே தேவமாதாவை வேண்டிக்கொண்டதினால் அந்த வழியாகத் தேவமாதா அவனுக்குக் கனமான சகாயம் பண்ணினாள். இந்தப்பிரகாரமாய்க் கிறீஸ்துவர்களே உங்களுக்குக் கஸ்திவந்த சமயத்திலே தேவமாதாவின் பேரிலே நம்பிக்கையாய் இருக்க வேணும். சிலர் சந்தோஷமாய் இருக்கிறபோது தேவமாதாவின் பேரில் பத்தியாய் இருக்கிறார்கள். கஸ்தி வந்த பிற்பாடு உடனே தேவமாதாவின் பேரில் உண்டான நம்பிக்கையையும் பத்தியையும் விடுகிறதும் அல்லாமல் தேவமாதாவின் பேரிலே பத்தியுள்ளவர்களுக்குக் கஸ்தி வரலாமோவென்று முறையிடுவார்கள். இப்படிச் சொல்லுகிறவர்களுக்குப் பாவமாச்சுது. இப்படிக்கொத்த பாவம் உங்களுக்கு வராதபடிக்கு நீங்கள் ஒரு சேதி அறிய வேணும்.

பூலோகத்திலே சீவனோடே இருக்கிறவர்கள் எல்லாருக்குங் கஸ்திவரும். உயிரோடே இருக்கிறவர்

களுக்குள்ளே ஒருத்தனுகிலுங் கஸ்தி இல்லாதிருக்க வில்லை. கிறீஸ்துவர்களுக்கும் அக்கியானிகளுக்கும் இராசாக்களுக்குஞ் சகல பேர்களுக்குங் கஸ்தி வரும். ஆனுல் தேவமாதாவின் பேரிலே பத்தி நம்பிக்கையாய் இருக்கிறவர்களுக்கு வந்த கஸ்தி தேவமாதாவின் கிருபையினுலே கொஞ்ச நேரத்துக்குப் பிற்பாடு நீங்கிப்போம. அல்லது பொறுமையினுலே நன்மையாக மாறும். ஆனபடியினுலே உங்களுக்குக் கஸ்தி வந்த சமயத்திலே பத்தி நம்பிக்கையாய் இருந்து ஆண்டவளே வேண்டிக்கொண்டால் அந்தக் கஸ்தி நீங்கிப் போகிறதும் அல்லாமல் நாம் இப்போது சொன்ன எரோணிம் என்கிறவனுக்குத் தேவமாதாவின் கிருபையினுலே சந்தோஷம் வந்தது போலே உங்களுக்குஞ் சந்தோஷம் வருமென்று அறியக்கடவீர்களாக.



## ௰உ-ம் சனிக்கிழமைப்

புதுமையாவது.



### தேவமாதாவின் திருமுகத்தைக் காண ஆசையாய் இருந்த சந்நியாசியாருக்கு நடந்த புதுமை.

காஸிய இராச்சியத்திலே ஒரு சந்நியாசியார் தேவமாதாவின் பேரிலே மகா பத்தியாய் இருந்தினுலே தேவமாதாவின் திரு முகத்தைக் காண்கிறதற்கு ஆசையாய் இருந்தார். இந்த ஆசையினுலே அவர்.

தேவமாதா தமக்குக் காண்பிக்கத் தக்கதாக அடிக் கடி மன்றாடினார். இப்படி இருக்கையிலே அவர் ஒருநாள் தியானத்தில் இருக்கிறபோது அவருக்குக் காவலான சம்மனசு காண்பித்துச் சொன்னதாவது: நீ தேவமாதாவின் திருமுகத்தைக் காண்கிறதற்கு வெகு ஆசையாய் இருக்கிறாயே, ஆனால் தேவமாதா-வினுடைய முகத்தைக் கண்டாயானால் பிறகு ஒரு கண் தெரியாதவனாய் இருக்கவேணும். இதற்கு நீ சம்மதித்தால் தேவமாதாவினுடைய முகத்தைக் காணலாமென்று சம்மனசானவர் சொன்னார். அத ற்குச் சந்நியாசியார் சந்தோஷமாய்ச் சம்மதிக்கிறே னென்று சொன்ன பிற்பாடு அவர் ஒருநாள் தியா னத்திலே இருக்கிறபோது தேவமாதாவாகிய அர்ச். கன்னிமரியாயி மகா மகிமையோடே அவருக்குக் காண்பித்தாள். தேவமாதாவினுடைய சவுந்தரிய முள்ள திரு முகத்தைப் பார்த்தபடியினாலே அவரு க்கு எம்மாத்திரஞ் சந்தோஷம் வந்ததென்று வாக்கி னால் சொல்லக் கூடாது. தேவமாதா காணாமல் மறைந்துபோன பிற்பாடு அவர் ஒரு கண் தெரியா தவராய் இருந்தார்.

இப்படியிருக்கையிலே அவர் அடிக்கடி சொன்ன தாவது: எனக்கு ஒரு கண் தெரியாமல் இருக்கிறது கஸ்திதானே. ஆனால் நான் தேவமாதாவின் திரு மு கத்தை ஒருவிசை காண்கிறபோது அப்போ நான் அநுபவித்த சந்தோஷத்தை நினைத்து அந்தத் திரு முகத்தை இரண்டாம் விசையுங் காணத்தக்கதாக நான் இரண்டு கண்ணுந் தெரியாதவனாய் இருக்கிற தற்குச் சந்தோஷமாய்ச் சம்மதிக்கிறேனென்று சொல்லி அழுதுகொண்டு தேவமாதாவைப் பத்தி யோடே மன்றாடினார். தேவமாதா அவருடைய மகா பத்தியையும் ஆசையையும் அறிந்து அவர் ஒருநாள்

தியானத்தில் இருக்கிறபோது மறுபடி தம்முடைய திரு முகத்தை அவருக்குக் காண்பித்தாள்.

பூலோகத்துக்கு ஆண்டவளுடைய முகத்தை வெகு சந்தோஷமாய்ப் பார்த்த பிற்பாடு இந்தச் சந்நியாசியார் தமக்கு இரண்டு கண்ணுந் தெரியாமல் போகிறதற்கு ஆயத்தமாயிருக்கிற சமயத்திலே தேவமாதாவின் தயையினாலே இப்படிக்கொத்த கஸ்தி அவருக்கு வராதிருந்ததும் அல்லாமல் முன் தெரியாமல் இருந்த கண்ணுக்குப் பிரகாசம் வந்தது. ஆனால் இந்தச் சந்நியாசியாருக்கு எம்மாத்திரஞ் சந்தோஷம் வந்ததென்று வாக்கினாலே சொல்லக்கூடாது. பிற்பாடு அவர் தன்னுடைய இரண்டு கண்களைக்கொண்டு பற்பல முகங்களைப் பாராமல் தேவமாதாவினுடைய சுரூபத்தின் முகத்தைப் பத்தியோடே பார்த்துக்கொண்டு வருவார்.

கிறீஸ்துவர்களே சமுத்திரத்திலே முத்துக் குளிக்கிறாப்போலே நீங்கள் இப்போது கேட்ட புதுமையிலே ஞான முத்துகளைக் குளிக்கவேணும். முந்த முந்த நம்மாலே இப்போது சொல்லப்பட்ட சந்நியாசியார் இரண்டு விசை மாத்திரம் தேவமாதாவினுடைய திரு முகத்தைக் காண்கிறதற்குத் தன்னுடைய சரீரத்துக்கு என்ன கஸ்தி வந்தாலுந் தாம் இரண்டு கண் தெரியாதவராய் இருந்தாலும் பாரமல்லவென்று நினைத்து அதற்குச் சம்மதித்தார். ஆகையால் பூலோகத்துக்கு ஆண்டவளுடைய திரு முகத்தை ஒருவிசை மாத்திரங் காண்கிறது சொல்லக்கூடாத சந்தோஷம். இப்படி இருக்கையிலே நீங்கள் மோட்சத்திலே போனீர்களானால் அங்கே இரண்டுவிசை மாத்திரம் அல்ல, ஊழியுள்ள காலந் தேவமாதாவினுடைய திரு முகத்தைக் கண்டுகொண்டிருப்பீர்கள். ஆகையால் உங்களுக்கு அங்கே எம்மா

த்திரஞ் சந்தோஷம் வருமென்று சொல்லவுங் கருத வுங் கூடாது. இப்படி இருக்கையிலே மோட்சத்தி லே எப்போதுமெப்போதுந் தேவமாதாவைக் காண த்தக்கதாக உயிரோடே இருக்கிறபோதுதானே சரீ ரத்துக்கு எந்தக் கஸ்தி வந்தாலும் பாரமல்லவென் று நீங்கள் நினைத்திருக்கவேணும்.

இரண்டாவது. புத்தி இல்லாத சிலபேர்கள் அ வன் அவளுடைய நல்ல முகத்துக்காகப் பாவங்க ளைக் கட்டிக்கொள்ளுவார்கள். ஆகையால் அப்படிக் கொத்த மனுஷர் அழிவுள்ள முகத்துக்காக நரகத்தி லே போகிறதினாலே மோட்சத்திலே தேவமாதாவி னுடைய நல்ல முகத்தை ஒருகாலுங் காணமாட் டார்கள். இது புத்தியோ? அதேதென்றால் அவன வள் செத்த பிற்பாடு அவர்களுடைய முகமெல்லாம் பூச் சியாய் இருக்கும். ஆகையால் புத்தி இல்லாதவனே நீ அற்ப முகாந்தரமாக மோட்சத்திலே தேவமாதா வினுடைய திரு முகத்தை எப்போதுங் காணுமலி ருக்கத் திரிகிறாயே.

மூன்றாவது. பூலோகத்திலே இருக்கிறபோது ஒரு நல்ல முகத்தைக் கண்டால் அந்த முகத்தை வேணு மென்று பார்க்கிறபோது உனக்கு ஆசை வருமே. பாராமலிருந்தால் கஸ்தி வருமே. ஆனால் அந்த முக த்தின் வழியாக உன்னுடைய ஆத்துமத்துக்கு மோ சம் வாராதபடிக்கு அந்த முகத்தைப் பாராமலிருந் து கண்ணிலே கஸ்தி அநுபவித்தால் தாவிளே. இப் போ கண்ணினாலே அநுபவித்த கஸ்தியைக் குறி த்து உன்னுடைய கண்தானே மோட்சத்திலே தே வமாதாவினுடைய நல்ல முகத்தைக் கண்டு எப் போதும் மகா சந்தோஷத்திலே இருக்கும்.

நாலாவது. நம்மாலே இப்போது சொல்லப்பட்ட சந்நியாசியார் தேவமாதாவின் முகத்தைக் கண்டதி

ஞலே சரீரத்தில் ஒரு கண் தெரியாதவராய் இருந் தாரென்று சொன்னோமே. சிலபேர்கள் ஒரு பெண் பிள்ளையுடைய அழகிய முகத்தைக் கண்டதினாலே ஆத்துமத்திலே கண் தெரியாதவர்களாய் இருக்கிறா ர்கள். இதற்கு அர்த்தம் ஏதென்றால் ஒரு குருடன் நல்ல பாதையை விட்டு அசுத்தமுள்ள பாதையிலே நடந்தாப்போலே இப்படிக்கொத்த மனுஷர் ஒரு பெண்பிள்ளையுடைய அழகுள்ள முகத்தைக் கண்டு புண்ணியத்தின் நல்ல பாதையை விட்டு மோக பா வமென்கிற அசுத்த பாதையிலே நடக்கிறார்கள். ஆனால் பாவிகளே நாம் சொன்ன சந்நியாசியாரு டைய தெரியாத கண்ணுக்குப் பிரகாசந் திரும்பி வ ந்ததுபோலே நீங்கள் தேவமாதாவின்பேரிலே பத்தி யாயிருந்தால் தேவமாதாவினுடைய கிருபையினா லே உங்களுடைய ஆத்துமங்களுக்கு ஞானப் பிரகா சம் வருமென்று அறியக்கடவீர்களாக.



## ௰௩-ம் சனிக்கிழமைப்

புதுமையாவது.

தேவமாதா தம்மைத் தூஷணித்த யூதனை வெட்டின துரை மகனைக் காப்பாற்றின

புதுமை.

பரீஸ் என்கிற பட்டணத்திலே ஒரு துரைமகன் தேவமாதாவின் பேரிலே வெகு பத்தியாய் இருந் தான். இந்தப் பத்தியின் முகாந்தரமாக அவன் அடி க்கடி தேவமாதாவின் கோயிலுக்குப் போய் அங்கே

செபம் பண்ணிக்கொண்டு வருவான். ஒருவிசை தேவமாதாவின் திருநாள் முகாந்தரமாக அந்தக் கோயிலுக்கு அநேகம் பேர் போனார்கள். இந்தத் துரைமகனும் அவர்களோடேகூடப் போனான். அந்தக் கோயிலிலே குருசுவாமியார் பூசை பண்ணுகிறபோது சிலபேர்கள் தேவமாதாவுக்குத் தோத்திரமாகப் பாடுகிற சமயத்திலே அநேகம்விசை மரியே என்கிற பெயர் சொல்லிப் பாடினார்கள். அப்போது அந்தத் துரைமகன் தேவமாதாவின் பேரிலே பத்தியாய் இருந்ததினாலே அந்தப் பாட்டுகளைச் சந்தோஷமாகக் கேட்டதும் அல்லாமல் அவர்கள் எத்தனைவிசை மரியே என்கிற பெயர் சொன்னார்களோ அத்தனை விசையுந் துரைமகன் தலை குனிந்து வணங்கினான்.

அப்போது இந்தத் துரைமகன் கிட்ட இரண்டு யூதர் இருந்தார்கள். இவர்கள் சேசுநாதர்பேரிலே பகையாய் இருக்கிறபடியினாலே இவருடைய திருத்தாயாராகிய அர்ச். கன்னிமரியாயி பேரிலேயும் பகையாய் இருப்பார்கள். ஆகையால் துரைமகன் மரியே என்கிற பேர் கேட்டுத் தலை குனிகிறதை இந்த இரண்டு யூதர்கள் கண்டு தங்களுக்குள்ளே சிரித்துக்கொண்டு துரைமகனைப் பரியாசம் பண்ணினார்கள். துரைமகன் இந்தப் பரியாசத்தைக் கண்டு அவர்களைப் பார்த்துக் கேட்டதாவது: நீங்கள் நம்மை ஏதுக்குப் பரியாசம் பண்ணுகிறீர்களென்று கேட்டான். அதற்கு அந்த இரண்டு யூதர்கள் சொன்னது: நீர் உயர்ந்த சாதியிலே துரைமகனாய் இருந்து கொஞ்சக்காரியான ஒரு பெண்பிள்ளையாகிய மரிய என்பவள் பேர் கேட்டுத் தலை குனிந்ததினாலே நாங்கள் உம்மைப் பரியாசம் பண்ணினோமென்று சொன்னார்கள்.

துரைமகன் இந்தச் சேதி கேட்டு இந்த இரண்டு பேரும் பூலோகத்துக்கு ஆண்டவள்பேரிலே தூஷணஞ் சொன்னதினாலே அவர்கள்பேரிலே மெத்தக் கோபமாய் இருந்தான். ஆனாற் கோயிலிலே இருந்ததினாலே அப்போது அந்தக் கோபத்தை அமர்த்திப் பூசை முடிந்த பிற்பாடு அந்த இரண்டு யூதர் கோயிலை விட்டு வெளியிலே போகிறதைத் துரைமகன் கண்டு கோபத்தோடே வெளியிலே போனான். வெளியிலே போன பிற்பாடு துரைமகன் தன்னுடைய இடையிலே இருந்த கத்தியை உருவிக்கொண்டு அவர்களைப் பார்த்து மகா கோபத்தோடே சொன்னதாவது:

பொல்லாதவர்களே நீங்கள் பூலோகத்துக்கு ஆண்டவளாகிய அர்ச். கன்னிமரியாயி பேரிலே தூஷணஞ் சொன்னீர்களே, என்று சொல்லி அவர்களுக்குள்ளே ஒருத்தனை வெட்டினதினாலே அவன் கீழே விழுந்து செத்தான். வேறே ஒருத்தனை முகத்திலே குத்தினதினாலே அந்தக் குத்தோடே அவன் மற்ற யூதரிருக்கிற இடத்திற் போய் நடந்த சேதியை அவர்களோடே சொன்னான். அவர்கள் அந்தக் காயத்தையும் இரத்தத்தையுங் கண்டு வேறே யூதன் செத்த சேதியையும் அறிந்து மகா கோபத்தோடே அரண்மனை வாசலிலே போய் துரை மதனுடைய கனமான குற்றத்தைச் சொன்னார்கள். அரண்மனை வாசலிலே இருந்த பிரதானி அந்த யூதனுடைய காயத்தைப் பார்த்து நடந்த சேதி என்னவென்று கேட்டான். காயக்காரன் சம்பவித்த சேதி சொன்ன பிற்பாடு, பிரதானி குத்தின துரைமகன் பேர் என்னவென்று கேட்டான். இதற்கு அந்தக் காயம் பட்டவன் சொன்னது:

குத்தினவன்பேர் எனக்குத் தெரியாது, ஆனால்

குத்தினவன் ஒரு கண் தெரியாதவன் ஆனபடியினாலே இந்த அடையாளத்தின் வழியாக உடனே அறியலாம் என்று சொன்ன பிற்பாடு பிரதானி ஒரு சேர்வைக்காரனையுஞ் சில ஊழியக்காரரையும் அழைப்பித்து அந்தத் துரைமகன் ஆரென்று விசாரித்து அவனை அரண்மனைக்குள்ளே கூட்டிவாக் கட்டளையிட்டான். அந்தச் சேர்வைக்காரரும் மற்ற ஊழியக்காரரும் இந்தக் காரியத்தின் பேரிலே மோசம் போகாதபடிக்கு அவர்களோடே கூடக் காயம் பட்டவனையும் போகப் பிரதானி சொன்னான்.

ஆகையால் யூதரெல்லாருஞ் சுற்றித் தேடுகிறதற்காகச் சந்தோஷத்தோடே போனார்கள். இவர்கள் பட்டணத்துக்குள்ளே சுற்றித் தேடுகிறபோது நாம் முந்திச் சொன்ன துரைமகனுக்குக் கோபம் அமர்ந்த பிற்பாடு அரண்மனையாருக்குப் பயந்து தான் செய்த குற்றத்தினாலே தனக்கு மோசமுங் கஸ்தியும் வராதபடிக்குத் தேவமாதாவின் கோயிலுக்குள்ளே போய் அவளுடைய சுரூபத்தின் முன்பாக முழங்காலிலே இருந்து தேவமாதாவைப் பார்த்து மன்றாடினதாவது: பூலோகத்துக்கு ஆண்டவளே என்னாலே ஒருத்தன் செத்துப்போனான், வேறே யூதனுக்குங் காயமாச்சுது. ஆகையால் நான் கனமான பாவஞ் செய்தேன், அறியாமல் செய்தேன், என் கோபத்தினாலே குத்தினேன், அதேதெனென்றால் அவர்கள் உம்முடைய பேரிலே தூஷணஞ் சொன்னதினாலே நான் அவர்களைக் குத்தினேன். ஆகையால் அரண்மனையாராலே எனக்குப் பொல்லாப்பு வராதபடிக்கு நான் தேவரீரை மன்றாடுகிறேனென்று வேண்டிக்கொண்டு தன்னுடைய வீட்டுக்குப் போனான்.

அவன் போகிறபோது சேர்வைக்காரனும் ஊழியக்காரரும் முந்திக் காயம்பட்ட யூதனும் எதிராக வந்

தார்கள். இந்தக் காயக்காரன் துரைமகனைக் கண்ட உடனே சேர்வைக்காரனைப் பார்த்துச் சொன்ன தாவது: இதோ என்னைக் குத்தின துரைமகன் நமக்கு எதிராக வருகிறான், ஒரு கண் தெரியாதவன் என்று சொன்ன பிற்பாடு சேர்வைக்காரன் துரை மகனைப் பிடித்து அரண்மனைக்குக் கொண்டுபோ ஞன். இந்தத் துரைமகன் அரண்மனையிலே போ கிறபோது மெள்ள மெள்ள அடிக்கடி வேண்டிக் கொண்டதாவது: தேவமாதாவே உம்முடைய பேரி லே நம்பிக்கையாய் இருக்கிறேன், என்னைக் கை விடாதேயுமென்று வேண்டிக்கொண்டு போனுன். இந்தத் துரைமகனுடைய நம்பிக்கையினுலே தேவ மாதா இவனுக்குக் கனமான சகாயம் பண்ணினுள். அதாவது:

துரைமகனுஞ் சேர்வைக்காரனும் ஊழியக்கார ரும் அரண்மனை வாசலிலே சேர்ந்த பிற்பாடு பிர தானி துரைமகனை நன்றுய்ப் பார்த்து யூதர் எல்லா ரையுங் கேட்டதாவது: இந்தத் துரைமகன்தானே குத்தினவனென்று கேட்டான். அதற்கு அவர்கள் இவன்தானென்று சொன்ன பிற்பாடு பிரதானி அவ ர்களைப் பார்த்துச் சொன்னதாவது: உன்னைக் குத்தி னவன் ஒரு கண் குருடனுய் இருக்கிறுனென்று நம் மோடே சொன்னுயே, இவனுக்கு இரண்டு கண் ணும் நல்ல பிரகாசமாய் இருக்குதே, இதற்கு எப் படியென்று கோபத்தோடே கேட்டான். யூதரெல் லோரும் முந்த முந்தக் காயம் பட்ட யூதனும் இந்த வார்த்தைகளைக் கேட்டுப் பிரதானி சொன்ன சேதி யைச் சோதிக்கத்தக்கதாகத் துரைமகன் முகத்து க்கு முன்னே வந்து அவன் முகத்தை நன்றுய்ப் பார்த்தார்கள். பார்த்த பிற்பாடு துரைமகனுக்கு இ ரண்டு கண்ணும் பிரகாசமாய் இருக்கிறதைக் கண்டு

ஆச்சரியப்பட்டு இது எப்படி ஆச்சுதென்று அவர் களுக்குத் தெரியாததினாலே வெட்கப்பட்டுப் பேசாமல் இருந்தார்கள்.

அப்போது பிரதானி யூதர் எல்லாரையும் பார்த்துச் சொன்னதாவது: பொல்லாதவர்களே இப்படி நீங்கள் நமக்கும் இந்தத் துரைமகனுக்கும் மோசம் பண்ணினீர்கள். ஆகையால் இந்தக் கனமான குற்றஞ் செய்ததினாலே அதற்கு அபராதமாக வருஷந் தோறும் இந்த மாதத்திலே உங்களுக்குள்ளே ஒருத்தன் அரண்மனை வாசலுக்குள்ளாக வந்து நிற்கிறது, அப்போது ஒரு கிறீஸ்துவன் தன் கையினாலே அந்த யூதன் முகத்திலே அடிக்கவேணுமென்று திருவுளம் பற்றின பிற்பாடு பிரதானி துரைமகனைப் பார்த்துச் சொன்னதாவது: நாம் உன்னைப் பிடிக்கவேணுமென்று கட்டளை இட்டது மெய்தான். ஆனால் நமக்கு யூதர் மோசம பண்ணினதினாலே நாம இப்படி சொன்னோம். உம்முடைய பேரிலே குற்றம் இல்லையென்று சொன்ன பிற்பாடு அவனுக்கு வெகுமானம் பண்ணி வீட்டுக்குப் போகச் சொன்னான். ஆகையால் தேவமாதாவின் கிருபையினாலே துரைமகனுக்குக் கஸ்தி வராமல் இருந்ததும் அல்லாமல் அசுப்பிலே புதுமையாக அவன் கண்ணுக்குப் பிரகாசம் வந்தது. அதினாலே துரைமகன் மோட்சத்துக்கு இராக்கினியானவள் பேரிலே மகா தோத்திரம் பண்ணினான்.

கிறீஸ்துவர்களே யாதொருத்தன் தன் தோட்டத்தின் மரங்களிலே இருக்கிற நல்ல பழங்களைப் பறிக்கிறதுப்போலே நீங்கள் இப்போது கேட்ட புதுமையிலிருக்கிற ஞானக் கனிகளைப் பறிக்கவேணும். முந்த முந்த நாம் இப்போது சொன்ன துரைமகன் தேவமாதாவின்பேரிலே மகா பத்தியாய் இருந்தி

ளுலே அவளுடைய திரு நாமமாகிற மரியாவென்கிற வார்த்தையை எத்தனை முறை கேட்டானோ அத்தனை முறையுந் தலை குனிந்து வணங்கினான். இந்தப் பிரகாரமாய் மோட்சத்துக்கு இராக்கினியானவள் பேரிலே உங்களுக்கு அதிக பத்தி உண்டானால் அவளுடைய திருப் பேராகிற வார்த்தையை எத்தனைவிசை கேட்பீர்களோ அத்தனை விசையும் உங்கள் தலையைக் குனிந்து வணங்கவேணும்.

இரண்டாவது. யாதாமொருத்தர் வணக்கம் இல்லாமல் தேவமாதாவின் திரு நாமத்தைப் பரியாசம் பண்ணி ஒரு கொஞ்சகாரி பேரொன்று சொல்லுகிறாப்போலே சொன்னால் அது கேட்டவுடனே அவர்களைக் கோபித்துக்கொள்ளுகிறது நியாயந்தான். ஆயினும் அவர்களை வெட்டலாகாது. இதுவும் அல்லாமல் தேவமாதாவின் சுரூபத்தையுஞ் செபமாலையையுங் கீழே போட்டாலும் ஆகாத வஸ்துவைப்போலே மகிமை இல்லாமல் வீட்டிலே போட்டு வைத்தாலும் இதை நீ கண்டவுடனே சுரூப செபமாலைக்காரர்பேரிலே கோபித்துக்கொள்ளுவது நியாயமாம். சில தாய்மார்கள் புத்தி இல்லாமல் தங்களுடைய பிள்ளைகள் விளையாடுகிறதற்குச் செபமாலையையுஞ் சுரூபத்தையுங் கொடுப்பார்கள். ஆகையால் குழந்தைகள் விளையாட்டுப் பொருளைப் போலே அந்தச் சுரூப செபமாலைகளை வாய்க்குள்ளே வைப்பார்கள், தரையிலே போட்டு இழுப்பார்கள், சில விசை கஷ்டத்திலே போட்டிழுப்பார்கள். இது புத்தியோ? உங்களுக்கும் உங்கள் புத்திரருக்குஞ் செபமாலை சுரூபந் திருப்பொருள் என்று தெரியாததினாலே அதற்குக் குற்றமில்லை என்று நினைக்கிறது புத்திக் குறைச்சலல்லவோ? ஆகையால் இப்படிக்கொத்த வஸ்துக்கள் தேவமாதாவினுடைய சம்பந்த

மாய் இருக்கிறபடியினாலே பூச்சியமாய் வைத்திருக்கவேணும்.

மூன்றாவது. இப்போது சொல்லப்பட்ட துரைமகன் அரண்மனையாராலே கஸ்தி வாராதபடிக்குத் தேவமாதாவை வேண்டிக்கொண்டதும் அல்லாமல் அவளுடைய பேரிலே நம்பிக்கையாய் இருந்தான். தேவமாதாவின் கிருபையினாலே இவனுக்குக் கஸ்தி வாராமலிருந்ததுமன்றி நன்மையும் வெகுமானமும் வந்ததென்று சொன்னோமே. நீங்களும் இந்தப்பிரகாரமாய் நடக்கவேணும். சில பெண்பிள்ளைகள் தங்கள் குழந்தைகளுக்கு வியாதி வந்தபோதுந் தங்களுக்கு யாதொரு கஸ்தி வந்தபோதும் அந்தக் கஸ்தியும் வியாதியும் நீங்கிப் போகத்தக்கதாகப் பசாசைக் கும்பிடுவார்கள், கோணங்கி சாஸ்திரங் கேட்பார்கள், ஆனால் இப்படிச்செய்தவர்கள் கனமான மோசம் போகிறார்கள். அதேதென்றால் இந்த வழியாக அந்தக் கஸ்தி நீங்காமல் இருக்கிறதுந் தவிர முன்னையைப் பார்க்க அதிக கஸ்திவருமே. அந்தக் கஸ்தி நீங்கத்தக்கதாக நாம் இப்போது உங்களுக்கு நல்ல வழியைப் படிப்பிப்போம். அந்த வழி ஏதென்றால் பூலோகத்துக்கு ஆண்டவளாகிய அர்ச். கன்னிமரியாயி கஸ்திப் படுகிறவர்களுக்குத் தேற்றரவு பண்ணுகிறவளாய் இருக்கிறபடியினாலே கஸ்திப் படுகிறவர்கள் தேவமாதாவைப் பத்தியோடே வேண்டிக்கொண்டு அவள்பேரிலே தக்க நம்பிக்கையாய் இருந்தால் சந்தேகம் இல்லாமல் அவளுடைய தயையினாலே கஸ்தி நீங்கிப்போவதும் அல்லாமல் இப்போது சொன்ன துரைமகனுக்குச் சந்தோஷம் வந்தாப்போலே கஸ்திப் படுகிறவர்களுக்குஞ் சந்தோஷம் வருமென்று அறியக்கடவீர்களாக.

## ௰சு-ம் சனிக்கிழமைப்

### புதுமையாவது.

ஒரு பாவிக்குச் *சேசுநாதர் தீர்வையிடுஞ்
சமயத்தில் தேவமாதா அவனுக்கு
இரக்ஷணியம் பெறுவிக்கிருள்.

உத்திராதிராச்சியத்திலே ஒரு கிறீஸ்துவன் மகா பொல்லாதவனுய் இருந்தான். அவன் பாவவழியிலே நடந்தாலும் மோட்சத்துக்கு இராக்கினியாகிய அர்ச். கன்னிமரியாயியைக் குறித்துத் தினம் நூறு பிறிய தத்தமந்திரம் வேண்டிக்கொண்டுவந்தான். அவன் கனமான வியாதி நிமித்தமாக அவஸ்தையாய் இருக்கிற சமயத்திலே ஒரு இராத்திரி இவனுக்கு ஒரு விசாரம் வந்தது. அதேதென்றுல் நான் இந்தக் கனமான வியாதி முகாந்தரமாகச் சாகிறதல்லாமல் பிழைக்கமாட்டேன், ஆனுல் நான் செய்த பாவத்திஞலே நரகத்துக்குப் போவேனென்று கஸ்தியோடே யோசனை பண்ணுகிறபோது அவன் இருந்த வீட்டுக்குள்ளே அநேகம் பசாசுகள் பயங்கர ரூபத்தோடே வந்து வியாதிக்காரனைத் தூக்கி அப்பாலே கொண்டு போகிறபோது அவன் அழுதாலும் அவனுடைய அழுகையைச் சட்டைபண்ணுமல் அவனை ஒரு பெரிய சாவடியில் சுறுக்காய்க் கொண்டுபோச்சுது. அந்தச் சாவடியிலே சேசுநாதர் மகா மகிமையோடே காண்பிக்கவே சேசுநாதருடைய வலதுபாரிசத்திலே அவருடைய மாதாவாகிய அர்ச். கன்னிமரியாயி இருந்தாள். சேசுநாதருக்குச் சுற்றிலும் அவருடைய சீஷாக்கள் இருந்தார்கள். பசாசு அந்த வியா-

திக்காரனைச் சேசுநாதர் முன்பாக நிறுத்திச் சொன்னதாவது:

சுவாமீ தேவரீர் இவனுக்குத் தீர்வையிடும் படிக்கு நாங்கள் இவனைக் கொண்டுவந்தோமென்று சொல்லிற்று. தேவமாதாவானவள் இந்தச் சேதியைக் கேட்ட பிற்பாடு திருவுளம் பற்றினதாவது: இப்படி வேண்டாம், சேசுவே இவன் நம்மைக்குறித்துத் தினம் நூறு பிரியதத்தமந்திரம் வேண்டிக்கொண்டு வந்ததினாலே இவன் நரகத்திலே போகாதபடிக்குப் பண்ணவேணுமென்று அருளிச் செய்தாள். இதற்குப் பசாசுகள்: இப்படி அல்லவே, ஞாயத்தின்படியே செய்யவேணுமானால் இவன் செய்த நல்ல கிரியைகளெல்லாந் தராசின் ஒரு பக்கத்திலே வைத்துத் தராசின் வேறே பக்கத்திலே இவன் செய்த பாவங்களெல்லாம வைத்து எந்தப் பக்கத்திலே பாரம அதிகமென்று பார்த்துத் தேவரீர் கட்டளையிட வேணுமென்று சேசுநாதரைப் பார்த்துச் சொல்லிற்று. இதற்குச் சேசுநாதர் சம்மதித்த உடனே அர்ச். மிக்கயேல் கையில் வைத்திருந்த தராசின் ஒரு பக்கத்திலே அவஸ்தைக்காரன் செய்த புண்ணியங்களாகிய தினம் வேண்டிக்கொண்ட நூறு பிரியதத்த மந்திரத்தை எழுதின கடுதாசிகளைக் காவலான சமமனசு வைத்த பிற்பாடு, ஒரு பசாசு வியாதிக்காரன் செய்த பாவங்களை எல்லாந் தராசின் வேறே தட்டிலே வைத்தது. அப்போது பாவங்கள் இருக்கிற பக்கங் கீழே தாழ்ந்ததைப் பசாசுகள் கண்டு, மெத்தச் சந்தோஷப்பட்டு நாங்கள் செயங் கொண்டோம், செயங் கொண்டோம். அவஸ்தைக்காரன் எங்கள் சம்பந்தமென்று கூப்பிட்டது.

தேவமாதாவானவள் இதைக் கண்டு பசாசுகளைப் பார்த்துப் பொறுங்கள், இந்தமட்டுஞ் சேசுநாதர்

தீர்வையிடவில்லையென்று சொன்ன பிற்பாடு, தேவமாதா சேசுநாதரை மன்றாடினதாவது: என் குமாரனே தேவரீர் மனுஷர் பாவத்தினாலே சிலுவை மரத்தில் சிந்திப்போட்ட இரத்தமெல்லாம் என்னுடைய இரத்தம், தேவரீர் எனது வயிற்றில் உற்பவித்த போது என்னுடைய இரத்தத்தினாலே உற்பவித்தீர். இப்போது எனக்கு ஒரு துளி இரத்தந் தேவரீர் கொடுக்க நான் உம்மை மன்றாடுகிறேனென்று சொன்னாள். பிற்பாடு சேசுநாதர் தம்முடைய திரு விலாக் காயத்தின் இரத்தத்தில் ஒரு துளி இரத்தந் தம்முடைய தாயாருக்குக் கொடுத்தார். அப்போது தேவமாதா அந்த இரத்தத்தைப் பத்தியோடே வாங்கிப் புண்ணியமிருந்த தராசின் தட்டிலே வைத்த வுடனே, அந்தத் தராசின் பக்கங் கீழே தாழ்ந்து பாவங்களின் பக்கம் உயர்ந்து போச்சுது.

இதைப் பசாசுகள் கண்டு வெட்கப்பட்டுச் சேசுநாதரைப் பார்த்துச் சொன்னதாவது: சுவாமீ இவன் சிலவிசை பாவசங்கீர்த்தனத்திலே கனமான பாவங்களைச் சொல்லப் பயந்து வெட்கப்பட்டு ஒளித்தான். ஆகையால் அந்தப் பொல்லாதவன் அநேகம்விசை ஆகாத பாவசங்கீர்த்தனம் பண்ணிச் சாவான பாவத்தோடே தேவநற்கருணை வாங்கினான். இவன் உம்முடைய தாயார் முகாந்தரமாக இப்போது எங்கள் கையிலே அகப்படாதிருந்தாலும் இவன் ஆகாத பாவசங்கீர்த்தனம் பண்ணினதினாலே இவனை நன்றாய் அடிக்கிறதற்காகிலுந் தேவரீர் உத்தாரங் கொடுக்கவேணுமென்று சொல்லிற்று. இதற்குச் சேசுநாதர் சித்தமாயிருந்ததினாலே, பசாசு அந்த அவஸ்தைக்காரனை ஒருக்ஷணத்திலே அநேகம் அடிகள் அடித்ததினாலே அவனுடைய சரீரம் எல்லாங் காயமும் இரத்தமுமாய் இருந்தது தேவ

மாதா அவனை அதிகமாய் அடிக்கவேண்டாமென்று சொன்னதினலே பசாசுகள் மறுபடி அடிக்காமல் திரும்பி அவனுடைய வீட்டுக்குக் கொண்டுபோய்க் கட்டிலின்மேல் முன்னையைப்போல் கிடத்தின பிற்பாடு பசாசுகள் காணமல் மறைந்துபோயிற்று.

அந்த அவஸ்தைக்காரன் வீடு குருக்கள் மடத்துக்குக் கிட்ட இருந்தபடியினலே ஒரு சந்நியாசியார் அவனை விசாரிக்கத்தக்கதாக அவனுடைய வீட்டுக்குப் போய் அவன் பேசமாட்டாமல் காயத்தினலே வினமாய்க் கஸ்திப்படுகிறதைக் கண்டு ஆச்சரியப்பட்டுச் சிரேஷ்ட சுவாமி இடத்திற் போய்த் தான் கண்ட சேதியைச் சொன்னர். சிரேஷ்டரும் மற்றக் குருக்களும் அவஸ்தைக்காரன் வீட்டுக்குப் போய் அவன் அழுகிறதைக் கண்டு ஏப்படி இருக்கிறயென்று கெட்டியாய்க் கூப்பிட்டுக் கேட்டார். வியாதிக்காரன் வாய் பேசாமல் தன் மேல் மூடியிருக்கிற சேலையைத் திறந்து காயங்களைக் காண்பித்தான். சிரேஷ்ட சுவாமி அந்தக் காயங்களைக் கண்டு இது வியாதியினலே வந்ததல்ல, அடியினலே வரவேணுமென்று நினைத்து, உன்னை இப்படி அடித்தது ஆரென்று கேட்டார். அவஸ்தைக்காரன் கஸ்தியின் வினத்தினலே பேசமாட்டாமல் இருந்தாலும் மெள்ள மெள்ள மிகா கஸ்தியோடே நடந்த சேதி எல்லாஞ் சொன்னன். குருக்கள் இந்தச் சேதி எல்லாங் கேட்டதினலே எல்லாருக்குஞ் சர்வேசுரனுடைய தீர்வைக்குப் பயமுந் தேவமாதாவின் பேரிலே மகா பத்தியும் வந்தது. பிற்பாடு அவஸ்தைக்காரன் நல்ல பாவசங்கீர்த்தனம் பண்ணித் தேவநற்கருணை வாங்கி அவஸ்தைப் பூசுதலும் பெற்று நல்ல ஆயத்தத்தோடே அந்த அடியின் காயத்தினலே செத்தான்.

கிறீஸ்துவர்களே ஒரு தோட்டக்காரன் தன் தோப்பிலே இருக்கிற நல்ல புஷ்பத்தைப் பறிக்கிறது போலே நீங்கள் இப்போ கேட்ட புதுமையிலே நல்ல ஞான புஷ்பங்களைப் பறிக்கவேணும். முதலாவது. நம்மாலே இப்போது சொல்லப்பட்ட அவஸ்தைக்காரன் செய்த நல்ல கிரிகை எல்லாந் தராசின் ஒரு பக்கத்திலேயுஞ் செய்த பாவங்களை எல்லாம் வேறே பக்கத்திலேயும் வைத்த பிற்பாடு பாவங்கள் இருந்த பக்கத்திலே மெத்தப் பாரமானதினாலே அந்தப் பக்கங் கிழே தாழ்ந்தது. பசாசுகள் இதைக் கண்டு செயங்கொண்டோமென்று கூப்பிட்டது.

தம்பி தங்கைமாரே, நீங்கள் சாகிற சமயத்திலே உங்களுக்கு இந்தப் பிரகாரமாய்ச் சம்பவிக்குமோ இல்லையோவென்று யோசித்துக்கொள்ளுங்கள். சில பேர்களுக்குச் சம்பவிக்குமென்று கஸ்தியோடே நாம் சொல்லுகிறோம். அதேதென்றால் சிலபேர்கள் தினந் தினம் பாவங்களைக் கட்டிக்கொள்ளுகிறதே அல்லாமல் புண்ணியங்களைச் செய்கிறதில்லை. இப்படிக்கொத்த மோசஞ் சாகிற சமயத்திலே உங்களுக்கு வராதபடிக்கு உயிரோடே இருக்கிறபோது நீங்கள் பாவங்களை ஒழித்துப் பரிகாரஞ் செய்து அநேகம் புண்ணியங்களைச் செய்ய வேணும்.

இரண்டாவது. நாம் இப்போது சொன்ன அவஸ்தைக்காரனுடைய காரியஞ் சேசுநாதருடைய திருவிரத்தத்தின் ஒரு துளியினாலே அநுகூலமாச்சுது. ஆகையால் சேசுநாதருடைய திருவிரத்தத்தின் பேரிலே நீங்கள் பத்தியாய் இருந்தால் அப்படிக்கொத்த பத்திவழியாக உங்களுக்கு அநேக ஞான நன்மைகள் வருமே. சிலபேர்கள் சேசுநாதர் பாடுபட்ட திரு இரத்தத்தை மறந்துபோகிற படியினாலே பசாசுகள் அவர்கள் ஆத்துமத்துக்கு மனதின்படி

யே மோசம் வருத்துவிக்கும். சிலர் சேசுநாதரு டைய பாடுகளின் பேரிலேயும் அவர் திரு இரத்த த்தின் பேரிலேயும் மகா பத்தியாய் இருந்ததினாலே அநேகம் விசை பசாசுகளைச் செயங் கொண்டார் கள். அதேனென்றால் இப்படிக்கொத்த பத்திக்குப் பசாசுகள் மெத்தப் பயந்திருக்கிறதென்று அர்ச். பெரிய அந்தோனியார் திருவுளம்பற்றினார்.

மூன்றாவது, நமமாலே இப்போது சொல்லப் பட்ட அவஸ்தைக்காரனுக்குச் சேசுநாதருடைய திருவிரத்தத் துளியினாலே கனமான சகாயம வந்த தென்று சொன்னோமே. ஆனால் இந்தத் திவ்விய இரக்கத்தின் பிரசாதந் தேவமாதாவின் வழியாக வந்தது. சேசுநாதருடைய பாடுகளினாலே உன்னு டைய ஆத்துமத்துக்கு மகா பிரயோசனம் வரத்தக் கதாக நீ தேவமாதாவின் பேரிலேயும் விசேஷமாய் அவளுடைய திருவியாகுலத்தின் பேரிலேயும் மெத் தப் பத்தியாய் இருக்கவேணும். அதேனென்றால் சேசுநாதர் மரணத்தை அடைகிறபோது தமமு டைய தாயாராகிய அர்ச். கன்னிமரியாயி சிலுவை அடியிலே நிற்கிற சமயத்திலே சேசுநாதர் தாம் பாடுபட்ட பலன்களை எல்லாம் மனுஷர் அடையத் தக்கதாகத் தமது தாயாரைத் தமது பொக்கிஷக்காரி போலே ஏற்படுத்தி அதுகளை அவள் கையிலே ஒ ப்பித்தார். ஆகையால் தேவமாதா தமது பேரில் பத்தியாய் இருக்கிறவர்களுக்குத் தமது திருக்குமா ரன் பாடுபட்ட பலனெல்லாம் உதாரமாய்க் கொ டுப்பாள்.

நாலாவது. நாம் இப்போது சொன்ன அவஸ்தை க்காரன் பாவவழியிலே நடந்திருந்தாலும் மோட் சத்தினுடைய இராக்கினியைக் குறித்துத் தினஞ் செபம் பண்ணினதினாலே தேவமாதா அவனுக்குக்

கனமான சகாயம் பண்ணினாள். ஆகையால் தேவ மாதாவுக்கு இந்த நல்ல குணம் இருக்கிறபடியினாலே நீங்கள் அவளைக் குறித்துத் தினந்தினஞ் சந்தோஷமாகச் செபம் பண்ணவேணும். முந்தமுந்தத் தேவமாதாவைக் குறித்துப் பாவஞ் செய்யாமல் இருக்கவேணும். இது பிரதான காரியம். தேவமாதா எல்லாத்திலும் பிரியப்படுவதைப் பார்க்க இது காரியத்திலே பிரியமாய் இருக்கிறாள். ஆனால் நீ பசாசின் தந்திரத்தினாலே சாவான பாவத்திலே விழுந்தாலுந் தேவமாதாவின் பேரிலே பத்தி விடாமல் அவளைக் குறித்துச் செபம் பண்ணவேணும். இந்த வழியாக உன் ஆத்துமத்துக்கு ஞானப் பிரயோசனம் வரும். மனந் திரும்புவதற்கு அநுக்கிரகங் கேள்.

ஐந்தாவது. முன் சொல்லப்பட்ட வியாதிக்காரன் பாவசங்கீர்த்தனத்திலே சில பாவங்களைப் பயந்து சொல்லாததினாலே பசாசுகள் அவனை நிஷ்டூரமாய் அடித்தது. ஆகையால் நீங்கள் இந்தச் சேதி அறிந்து பாவசங்கீர்த்தனம் பண்ணுகிறபோது பயமும் வெட்கமும் வந்தாலும் அதைச் சட்டைபண்ணாமல் செய்த பாவங்களை ஒன்றும் ஒளியாமல் சொல்ல வேணுமென்று அறியக் கடவீர்களாக.

அடைக்கலமாகக் கட்டளை இட்டதினாலே பாவியாய் இருக்கிற எனக்காகத் தேவரீர் உம்முடைய திருக் குமாரனை மன்றாடவேணும் என்று சொன்னான். பிற்பாடு தேவமாதா தமது திருக்கையிலே இருக் கிற குழந்தையாகிய சேசுநாதரைப் பார்த்து வேண் டிக்கொண்டதாவது: என் திருக்குமாரனே தேவரீர் இவன் பேரிலே இரக்கமாய் இருக்கவேணுமென்று சொன்ன உடனே சேசுநாதர் திருவுளம பற்றின தாவது: நம்முடைய தாயாரே இவன் கனமான பாவியாய் இருக்கிறபடியினாலே நாம் இவன் பேரில் இரக்கமாய் இருக்க அவன் பாத்திரமல்ல. நம்மு டைய சரீரத்திலே இருக்கிற காயங்கள் எல்லாம இவன் தான் செய்த பாவஙகளினாலே நமக்கு வருத் துவித்தான். இவனுடைய நடக்கை இற்றைவரைக் கும் நமக்குப் பொருந்தாதென்று கோபத்தோடே சொன்னார்.

தேவமாதா இந்தச் சேதியைக் கேட்ட பிற்பாடு தமது திருக்கையிலே இருக்கிற குழந்தையாகிய சேசுநாதரைப் பீடத்தின் பேரிலே வைத்து அந்தப் பீடத்தின் முன்பாகச் சாஷ்டாங்கமாகக் கும்பிட்டு வணங்கி மன்றாடினதாவது: என்னுடைய குமார னே நான் உம்மை என் வயிற்றுக்குள்ளே ஒன்பது மாதமுஞ் சுமந்திருந்தேன். உம்மைப் பெற்ற பிற்பா டு நீர் குழந்தையாய் இருக்கிறபோது உமக்கு மு லைப்பால் கொடுத்தேன். நீர் சிலுவையில் அறையு ண்டு மரணத்தை அடைகிறபோது உம்முடைய க ஸ்தியைக் கண்டு மெத்த வியாகுலப்பட்டேன். ஆ கையால் நான் உமக்காக அநுபவித்த வியாகுலத் தைக் குறித்துத் தேவரீர் இந்தப் பாவியின்பேரிலே இரக்கமாய் இருக்கத்தக்கதாக நான் தேவரீரை மன் றாடுகிறேனென்று வேண்டிக்கொண்ட பிற்பாடு

சேசுநாதர் தமது தாயாரைப் பார்த்துச் சொன்ன தாவது:

உம்முடைய வியாகுலத்தைக் குறித்து இந்தப் பாவி செய்த குற்றங்களை நாம் பொறுக்கிறதுமல்லாமல் இவன்பேரிலே இரக்கமாய் இருக்கிறோம். ஆயினும் இவன் மெய்யான மனஸ்தாபப்பட்டுத் தான் செய்த பாவத்தினாலே நம்முடைய சரீரத்தில் வருத்துவித்த காயங்களை முத்தஞ் செய்வானாகவென்று சொன்ன பிற்பாடு அந்தப் பாவியான சேவகன் அழுது தான் செய்த பூவத்துக்காக உத்தம மனஸ்தாபப்பட்டுப் பீடத்தின் கிட்டப் போய்ச் சேசுநாதருடைய திருச் சரீரத்திலே உண்டான காயங்களை முத்தஞ் செய்தான். உடனே புதுமையாக அந்தக் காயங்களெல்லாம் மறைந்து போச்சுது.

அந்தச் சேவகன் இந்தக் கனமான நன்மை தேவமாதாவின் உதவியினாலே தனக்கு வந்ததென்று நினைத்துப் பாவத்தை முழுதும் விட்டதும் அல்லாமல் தேவமாதாவினுடைய திரு வியாகுலத்தின் பேரிலே மெத்தப் பத்தியாய் இருந்தான். அந்தச் சேவகனுடைய பெண்சாதி தன் புருஷன் மனது திரும்பின சேதி அறிந்து சந்தோஷப்பட்டுச் சேசுநாதருக்குந் தேவமாதாவுக்கும் நன்றியறிந்த தோத்திரம் பண்ணினாள்.

கிறீஸ்துவர்களே எசமான் தன் மரத்திலே இருக்கிற பழங்களைப் பறிக்கிறாப்போலே நீங்கள் இப்போ கேட்ட புதுமையில் இருக்கிற ஞானக் கனிகளைப் பறிக்கவேணும். முதலாவது. நம்மாலே இப்போது சொல்லப்பட்ட சேவகன் பாவ வழியிலே நடந்தாலுஞ் சனிக்கிழமைதோறுந் தேவமாதாவைக் குறித்து ஒருசந்தியாயிருக்கத் துவக்கினான். ஆகையால் பாவிகளே தேவமாதாவைக் குறித்து எப்போதும்

ஏதாகிலுந் தோத்திரஞ் செய்யவேணும். அந்த வழியாக அந்தச் சேவகனுக்கு மனது திரும்பினுப்போலே உங்களுடைய மனதுந் திரும்பவேணும்.

இரண்டாவது. நாம் இப்போது சொன்ன சேவகன் தான் செய்த பாவத்தினாலே நேசுநாதருடைய திருச் சரீரத்திலே காயங்களையும் அவருடைய தாயாராகிய தேவமாதாவுக்கு வியாகுலத்தையும் வருத்துவித்தானென்று சேசுநாதர்தானே சொன்னதாகக் கேட்டீர்களே. ஆகையால் பாவியே இனிமேல் நீ பாவங்களைக் கட்டிக்கொண்டால் அதினாலே சேசுநாதருக்குக் காயமுந் தேவமாதாவுக்கு வியாகுலமும் வருகிறதென்று நன்றாய் யோசித்துக்கொள். சில கிறீஸ்துவர்கள் நாங்கள் சேசுநாதர் பேரிலேயுந் தேவமாதாவின் பேரிலேயுந் தக்க பத்தியாய் இருக்கிறோமென்று அடிக்கடி சொல்லிப் பாவவழியிலே நடப்பார்கள். இப்படிச் சொல்வது மோசம். வாயினாலே பத்தியாய் இருக்கிறது போதாது. வாக்கினாலேயுங் கிரிகையினாலேயும் மனதினாலேயுஞ் சேசுநாதர் பேரிலேயுந் தேவமாதாவின் பேரிலேயும் பத்தியாய் இருக்கவேணும். இப்படிக்கொத்த பத்தி உனக்கு உண்டானால் சேசுநாதருக்குக் காயமுந் தேவமாதாவுக்கு வியாகுலமும் உன்னாலே வராது. பாவஞ்செய்ய மாட்டாய்.

மூன்றாவது. சேசுநாதர் தமது தாயாருடைய வியாகுலத்தைக் குறித்து நாம் இப்போது சொன்ன பாவியான சேவகன் பேரிலே இரக்கமாய் இருந்தார். ஆகையால் நீ தேவமாதாவினுடைய திரு வியாகுலத்தின் பேரிலே பத்தியாய் இருந்தால் அந்தப் பத்திவழியாக உனக்கு அநேகம் நன்மைகள் வரும். ஆனபடியினாலே தினந்தினம் முந்தமுந்த வெள்ளி சனிக்கிழமைதோறுந் தேவமாதாவினுடைய எழு

ஷியாகுலத்தைக் குறித்து ஏழு பரமண்டல ஏழு பிறியதத்த மந்திரம் வேண்டிக்கொள்ளவேணும்.

நாலாவது. நம்மாலே இப்போ சொல்லப்பட்ட சேவகன் சேசுநாதருடைய திருக்காயங்களை உத்தம மனஸ்தாபத்தோடே அழுதுகொண்டு முத்தஞ் செய்தபோது சேசுநாதருடைய திருக்காயங்கள் மறைந்துபோச்சுதென்று சொன்னோமே. அப்படி உத்தம மனஸ்தாபத்தோடே அதுகளை நீ முத்தஞ்செய்தால் உன்னாலே சேசுநாதருக்குச் சந்தோஷமும் உனக்கு நன்மையும் வருமென்று அறியக்கடவாயாக.

## ௰௬-ம் சனிக்கிழமைப்

புதுமையாவது.

ஒரு வாலன் சில சமயத்தில் தேவமாதாவுக்கு ஊழியம்.
பண்ணினதினால் அந்த ஆண்டவள் மூலமாக
நல்ல மரணத்தை அடைந்த
அற்புதம்.

கம்பிரா என்கிற பட்டணத்திலே அர்ச். தொமினிக்குச் சபையில் உட்பட்ட தோமையார் என்கிற ஒரு குருவானவர் இருந்தார். அவர் நாற்பது நாள் ஒருசந்தியின் வெள்ளிக்கிழமையிலே கோயிலிலே பாவசங்கீர்த்தனம் பண்ணுவிக்கிறபோது வீால வயதுள்ள ஒருத்தன் அவர்கிட்டச் சொன்னதாவது: சுவாமீ நான் இப்போ கோயிலிலே வருகிறதற்கு.

முன்னே காட்டுக்குள்ளே இருக்கிறபோது ஒரு மரத்தினுடைய இலைகள் எல்லாம் இரத்தமாய் இருக்கிறதைக் கண்டேன், அதைக் கண்டாப்போலே எனக்குக் கனமான கஸ்தி வருகிற அடையாளமென்று நினைத்து மெத்தப் பயந்திருக்கிறேனென்று சொன்ன பிற்பாடு தான் செய்த கனமான பாவங்களை எல்லாங் குருசுவாமியிடத்தில் சொன்னான். அதற்குக் குருசுவாமி சொன்னது: நீ பாவத்தை முழுதும் விட்டுவிடு, பாவசங்கீர்த்தனம் முடிந்தபிற்பாடு திரும்பப் பாவத்திலே விழுந்தால் உனக்குக் கனமான கஸ்தி வருமென்று சொன்னார். அந்த வாலிபன் பெரிய திருநாளிலே தேவநற்கருணை வாங்கினான்.

அதற்குப் பிற்பாடு போன பாவசங்கீர்த்தனத்திலே அவன் நல்ல பிரதிக்கினை பண்ணியிருந்தாலும் அவனுக்கு மோக பாவஞ் செய்கிற வழக்கம் இருந்ததினாலே கொஞ்ச நாளைக்குப் பிற்பாடு வேறே கனமான பாவத்தைக் கட்டிக்கொண்டான். அந்தப் பாவத்தினாலே கொஞ்ச நாளைக்குள்ளாக அவனுக்குக் கனமான காய்ச்சல் வந்ததினாலே மெத்தக் கக்கிஷமாய் இருந்தான். இப்படி இருக்கிறபோது அவன் மரத்தின் இலையிலே கண்ட இரத்தத்தையும் குருசுவாமி சொன்ன புத்தியையும் நினைத்து அவனுக்குக் கனமான பயம் வந்தது. இப்படியே மயங்கி இருக்கையிலே இரண்டு பசாசுகள் பயங்கர ரூபத்தோடே அவனுக்குக் காண்பித்து அவனைக் கட்டாயமாய் எடுத்துக் கிணற்றிலே போட்டது. அந்தக் கிணற்றிலே உண்டான நெருப்பினாலே அவன் உடம்பெல்லாஞ் சுடப்படவே அந்த வேதனையினாலே அவன் சத்தமாய்க் கூப்பிட்டு ஐயோவென்று அழுகிறபோது அந்தக் கிணற்றின்மேலே ஒரு கனமான சத்தங்

கேட்டதாவது: இவனுக்கு இந்தக் கஸ்தி வேண்டாம், சீக்கிரமாய் இவனை வெளியிலே கொண்டுபோருங்களென்று சர்வேசுரன் கட்டளையிட்டார் என்கிற சத்தம் வியாதிக்காரன் கேட்ட பிற்பாடு பசாசுகள் அவனை முன்னேயைப்போலே கட்டிலின்மேற் கொண்டுபோய் வைத்தது.

பிற்பாடு மோட்சத்துக்கு இராக்கினியானவள் மகா மகிமையோடேயுஞ் சவுந்தரியத்தோடேயும் அவனுக்குக் காண்பித்துச் சொன்னதாவது: நீ செய்த பாவத்தினாலே செத்தால் நேரத்துக்கு முன்னே நெருப்புக் கிணற்றிலே விழுந்து அதிலே எப்போதும் இருக்கிறதற்கு நீ பாத்திரமாயிருந்தாலும் நமக்குச் சிலவிசை பத்தியோடே ஊழியம் பண்ணினதினாலே அந்த நெருப்பாகிற பொல்லாப்பிலின்று நாம் உன்னை இரட்சிக்கிறோம். ஆனால் பசாசினுடைய வலையில் அகப்படாமல் எச்சரிக்கையாயிரு. அதெனென்றால் இன்றைக்கு மூன்றுநாள் செத்துப்போவாய், நீ நல்ல ஆயத்தத்தோடே சாகாதபடிக்குப் பசாசு ஒரு உபதேசி ரூபமாக வந்து உனக்குச் சொல்லுகிற வார்த்தையை நீ நம்பாமல் நீ முந்திப் பாவசங்கீர்த்தனம் பண்ணின தோமையாரென்கிற குருவை அழைப்பித்து அவரிடத்திலே நல்ல பாவசங்கீர்த்தனம் பண்ணென்று சொன்ன பிற்பாடு காணாமல் மறைந்துபோனாள்.

அந்த வாலனான வியாதிக்காரன் தனியே ஒரு கட்டிலின் மேலே ஒரு அறையிலே கிடக்கிறபோது அவனுடைய வீட்டிலே உபதேசி வந்தான். வியாதிக்காரனுடைய தாய் உபதேசியைக் கண்டாப்போலே சந்தோஷப்பட்டுத் தன் மகன் இருக்கிற அறைக்குள்ளே உபதேசியைப் போகச் சொன்னாள். உபதேசி உள்ளே போய் அந்த வியாதிக்காரனுடைய

கட்டிலின்கிட்ட இருந்து பின்னும் அவனோடே சொன்னதாவது: தம்பி, நீ வியாதியாயிருக்கிற சேதி நான் அறிந்தவுடனே தாமதமில்லாமல் வந்தேன், நீ நல்ல ஆயத்தத்தோடே சாகத்தக்கதாக நான் உன்கிட்ட இருப்பேன், நீ மோட்சத்துக்குப் போகத்தக்கதாக நான் பிரயாசப்படுகிறேனென்று சொன்னான்.

அந்த வியாதிக்காரனான வாலன் தேவமாதா தனக்குச் சொன்ன சேதியை நினைத்து உபதேசி ரூபமாயிருக்கிற பசாசோடே சொன்னதாவது: நீ வந்த வழியேதானே தாமதமில்லாமற் போ, நீ உபதேசி ரூபமாய் இருந்தாலும் நீ யாரென்று நான் அறிந்திருக்கிறேன், உன்னுடைய புத்தியும் வார்த்தையும் எனக்குத் தேவையில்லையென்று சொன்னான். உபதேசி ரூபமாக இருந்த பசாசு தன்னுடைய கபட்டை வியாதிக்காரன் கண்டுபிடித்தானென்று அறிந்தாலும் அப்பாலே போகாமல் அவனோடே சொன்னதாவது: நான் உபதேசியாய் இருக்கிறபடியினாலே நீ அவஸ்தையாய் இருக்கிற சமயத்திலே உன்னை விட்டுப்போனால் எனக்குப் பாவம், என்னுடைய தொழிலை நன்றாய்ச் செய்யத்தக்கதாக உன்கிட்ட நான் இருக்கவேணுமென்று சொல்லிற்று. அதற்கு வியாதிக்காரன் பசாசு அப்பாலே போகத்தக்கதாகத் தன்மேல் சிலுவை அடையாளத்தை வரைந்தான். அப்போது பசாசு அப்பாலே போய் அறைக்குள்ளேதானே இருந்தது. பசாசு முழுதும் அப்பாலே போகத்தக்கதாக அந்த வியாதிக்காரன் பத்தியோடே அர்ச். கன்னிமரியாயை மிகவுங் கூப்பிட்டான். அப்போது பொய்யான உபதேசியாகிய பசாசு மரியே என்கிற சத்தங் கேட்டவுடனே ஒரு இடிபோலே நரகத்திலே விழுந்தது.

அப்போது அந்த வியாதிக்காரன் தன் தாயாரை அழைத்துத் தோமையாரென்கிற குருவைக் கூட்டிவரச் சொன்னான். சீக்கிரமாய்க் குருசுவாமி வந்த பிற்பாடு வியாதிக்காரன் குருசுவாமியோடே பசாசு செய்த கபடும் நடந்த மற்றச் சேதி எல்லாமுஞ் சொல்லி அவரிடத்திலே நல்ல பாவசங்கீர்த்தனம் பண்ணினான். குருசுவாமி அவனுக்கு நல்ல புத்திகளைச் சொன்ன பிற்பாடு அவன் தேவமாதாவின் உதவியினாலே நல்ல ஆயத்தத்தோடே மூன்றுநாள் செத்தான்.

கிறீஸ்துவர்களே நந்தவனத்திலே நல்ல புஷ்பங்களைப் பறிக்கிறாப்போலே நீங்கள் இப்போது கேட்ட புதுமையிலே ஞான புஷ்பங்களைப் பறிக்கவேணும். முதலாவது. நம்மாலே இப்போது சொல்லப்பட்ட அந்த வாலனானவன் பாஸ்குத் திருநாளிலே நல்ல பாவசங்கீர்த்தனம் பண்ணினதினாலே அவன் ஆத்துமத்துக்கு மோசமுஞ் சரீரத்துக்கு வியாதியும் வராதபடிக்கு ஞான உயிராகிய சர்வேசுரனுடைய இஷ்டப்பிரசாதம் வந்தது. ஆனால் திருநாள் முடிந்த பிற்பாடு காமபாவத்திலே அவன் மறுபடி விழுந்ததினாலே அவன் ஆத்துமத்துக்கு மோசமுஞ் சரீரத்துக்கு வியாதியுந் துன்பமுஞ் சாவும் வந்தது. அப்படியே இக்காலத்திலே சில கிறீஸ்துவர்களுக்குச் சம்பவிக்கிறது. அதேதென்றால் பாஸ்குத் திருநாளிலே சில கிறீஸ்துவர்களுடைய ஆத்துமத்துக்கு நல்ல பாவசங்கீர்த்தனத்தின் வழியாக ஞான உயிராகிய தேவ இஷ்டப்பிரசாதம் வந்த பிற்பாடு வாந்திபண்ணின வஸ்துவைத் திரும்பத் தின்கிறாப்போலே பின்னேயும் பாவங்களைச் செய்கிறதினாலே ஆத்துமத்துக்குஞ் சரீரத்துக்கும் மோசம் வருகிறது. நாம் இப்போ சொன்ன வாலனானவன் பிறந்து

பதினைந்து வருஷமாத்திரம் இருந்தாலும் பாவத்தி
னாலே பதினைந்து வயதுக்கு அப்புறஞ் சீவனோடே
இருக்கவில்லை. இப்படிக்கொத்த மோசம உங்களு
க்கு வாராதபடிக்குப் பாவஞ் செய்யாதிருக்கவேணும.

இரண்டாவது. நாம் இப்போது சொன்ன வாலி
னானவன் அவஸ்தையாய் இருக்கிற சமயத்திலே
ஒரு பசாசு உபதேசிரூபமாக வந்து அவனுடைய
ஆத்துமத்தைப் பழிக்கத் தக்கதாக அவனுடைய
வீட்டிலே இருந்தது. அந்தப் பிரகாரமாய் ஒருவிசை
யாதாமொருத்தன உபதேசியோலே உன் வீட்டுக்கு
வந்து தன்னை நல்ல புண்ணியவானென்று நினைப்பி
க்கத்தக்கதாகவும அவன் பேரிலே உனக்குச் சந்தே
கம வாராதபடிக்குங் கழுத்திலே ஒரு செபமாலையைப்
போட்டுக்கொண்டு சில சுரூபங்களையும புஸ்தகங்க
ளையுங் காண்பித்து வேறே இராச்சியத்தில் இருந்து
கொண்டுவந்தது போலே அர்ச். பண்டங்களைக்
காட்டி முழங்காலிலே இருந்து செபம் பண்ணுகிற
துமாய்ச் சில புத்தி சொல்லுகிறதுமாயப புண்ணிய
வான்போல் காண்பிப்பான். நீ அதுகளை எல்லாங்
கண்டாப்போலே அவனை நல்ல புண்ணியவானென்
றும் அவனிடத்தில் யாதொரு சின்ன குறை முத
லாய்க் காணேனென்றுஞ் சொல்லுவாயானல் மோ
சத்துக்கு வழியாம். துவக்கத்தில் அவனிடத்தில்
ஆகாத அடையாளங் காணவில்லை மெய்தான், ஆகி
லுங் கடைசியிலே அவனாலேதானே இராத்திரியிலே
ஆனாலும் பகலிலென்கிலுஞ் சமயம் பார்த்து உன்
னுடைய வீட்டுக்காகிலும் உன் ஆத்துமத்துக்கெ
ன்கிலும் மோசம் வருமோவென்று எச்சரிக்கையா
யிரு.

ஓநாயானது ஆட்டுத்தோலை மேலே போர்த்திக்
கொண்டு ஆட்டுக் கிடையிலே போனால் ஆடுகளுக்

குக் கனமான மோசம் வரும். இந்தப்பிரகாரமாய்ப் பதிதரும் சில ஆகாத கிறீஸ்துவர்களும் மனதின் படியே விக்கினம் இல்லாமல் உனக்கும் உன் மக்கள் ஆத்துமத்துக்கும் மோசம் பண்ணத்தக்கதாக வருவார்கள். அவர்களை உடனே உன் கூடப் பிறந்தவர்களைப்போலே விசாரிக்க வேண்டாம். அவர்கள் புண்ணியவான்களென்று நினைத்தாப்போலே காட்டினாலும் மிகுந்த நேசம் வேண்டாம். அவர்களாலே உனக்கு மோசம் வராதபடிக்கு எச்சரிக்கையாயிரு.

மூன்றாவது. நம்மாலே சொல்லப்பட்ட வாலஞானவன் தேவமாதாவுக்குப் பத்தியோடே ஊழியம் பண்ணினதினாலே தேவமாதா நரக நெருப்பாகிற பொல்லாப்பில் நின்று அவனை இரட்சித்தாள். ஆகையால் நீ இப்போ ஒரு அடிமைபோலே தேவமாதாவுக்கு முழுமனதோடே நல்ல ஊழியம் பண்ணி அவள் பேரிலே உன்னுடைய பத்தியை வைத்தால் அந்த ஆண்டவள் வழியாக உனக்கு நன்மை வருவதுமல்லாமல் பசாசாலே வரத்தக்க எந்தெந்தக் கஸ்தி வந்தாலும் அந்தப் பொல்லாப்பில் நின்று உன்னை இரட்சிப்பாளென்று அறியக்கடவாயாக.



## ௰எ-ம் சலிக்கிழமை

புதுமையாவது.



தேவமாதா தமது
பேரிலே வெகு பத்தியாய் இருந்த ஒர் துரையின்
பெண்சாதியை உயிர்ப்பிக்கிறாள்.

உத்திராந்தி ராச்சியத்திலே ஒரு துரைமகன் தேவமாதாவின் பேரிலே மெத்தப் பத்தியாயிருந்ததினாலே தன்னுடைய அரண்மனையில் ஒரு பக்கத்திலே ஒரு சின்ன கோயில் கட்டி அதிலே தேவமாதாவின் சுரூபம் வைத்து அந்தச் சுரூபத்தின் முன்பாகத் தினந்தினஞ் செபம் பண்ணுவான். சிலசமயத்திலே இராத்திரியிலே விழித்தெழுந்து அந்தக் கோயிலுக்குள்ளே போய்த் தேவமாதாவைக் குறித்து ஐம்பத்து மூன்றுமணிச் செபம்பண்ணுவான். இப்படி இருக்கையிலே அவன் இராத்திரியில் போகிறதைப் பெண்சாதி கண்டு அவள் புண்ணியவதியாய் இருந்தாலும் பசாசின் தந்திரத்தினாலே புருஷன் பேரிலே சந்தேகமாயிருந்தாள்.

இந்தச் சந்தேகத்தினாலே ஒரு நாள் அவள் புருஷனோடேகூட அறையிலே இருக்கிற சமயத்திலே பெண்சாதி புருஷனைப் பார்த்துச் சொன்னதாவது: நீர் என்பேரிலே பட்சமாய் இருக்கிறீர், நல்லதுதான். ஆனால் என்னை அல்லாமல் வேறே பெண்பிள்ளையோடே சிநேகமாய் இருக்கிறீரோ இல்லையோவென்று நான் அறிய ஆசையாய் இருக்கிறேனென்று கேட்டாள். அந்தத் துரைமகனுக்குக் கபடில்லாததினால் சிரித்துக்கொண்டு பெண்சாதியைப் பார்த்துச் சொன்னதாவது: நான் ஒரு ஆண்

வளைச் சிநேகித்திருக்கிறேன், பூலோகத்திலே இருக்கிற பெண்பிள்ளைகளுக்குள்ளே அவளுக்குச் சரியானவர்கள் இல்லை, அந்த ஆண்டவளுக்கு என்னுடைய இருதயமெல்லாம் ஒப்புக்கொடுத்தேன், நான் சாகிறமட்டும் அவளை விடுகிறதில்லை, நீ என்னைப்போலே அவளை அறிந்தால் நான் அவள்பேரிலே அதிக சிநேகமாயிருக்க நீதானே புத்தி சொல்லுவாயென்று சொன்னான்.

அப்போது அவள் நினைத்தது ஏதென்றால் பூலோகத்திலே இருக்கிற பெண்பிள்ளைகளுக்குள்ளே ஒரு துரைமகள்பேரிலே தன் புருஷன் சிநேகமாய் இருக்கிறானென்று மோசமாய் நினைத்துப் புருஷன் பேரிலே அநியாயமாய் மெத்தப் பகையாய் இருந்தாள். கொஞ்ச நாளைக்குப் பிற்பாடு புருஷன் பெண்சாதி இருவரும் ஒரு அறையிலே நித்திரை செய்கிறபோது துரைமகன் எப்போதும்போலே கோயிலுக்குப் போய் ஜம்பதுமணிச் செபம் பண்ணச் சாமத்திலே எழுந்திருக்கிற சத்தம் பெண்சாதி கேட்டு விழித்துப் புருஷனைப் பார்த்துச் சொன்னதாவது: நீர் என்னை அல்லாமல் ஒரு ஆண்டவள்பேரிலே பட்சமாய் இருக்கிறேனென்று சொன்னீரோ, அவள் முகாந்தரமாக நீர் இப்போது எழுந்திருந்தீரோ. அவள் இருக்கிற ஸ்தலத்துக்கோ இப்போ போகிறீரென்று கேட்டாள். அதற்குப் புருஷன் ஆமென்று சொல்லிக் கோயிலிலே போனான்.

இந்த வார்த்தை கேட்டுப் பெண்சாதிக்கு எம்மாத்திரங் கோபம் வந்ததென்று வாக்கினாலே சொல்லக்கூடாது. அந்தக் கோபத்தினாலே புருஷன் போன பிற்பாடு அவன்பேரிலே பழியாக அறையில் இருந்த கத்தியை எடுத்துத் தன் கழுத்தை அறுத்துக்கொண்டாள். அந்தக் காயத்தின் வழியாக

அவள் இருந்த கட்டிலின்மேலே இரத்தம் மெத்த வுஞ் சிந்தினது. அவளும் உடனே கட்டிலின் மேலே செத்துப்போனாள்.

பிற்பாடு புருஷன் கோயிலிலே செபம் பண்ணி முடிந்த பிற்பாடு தன் அறைக்குள்ளே வந்து கட்டி லிலே கையை வைக்கிறபோது கட்டில் ஈரமாய் இ ருக்கிறதை அறிந்தான். அந்த ஈரம் எதினாலே வந் ததென்று தெரியாததினாலே பெண்சாதியைக் கூப் பிட்டான். அவள் மறு உத்தாரஞ் சொல்லாததினா லே உடனே அவன் அப்பரிலேபோய் வெளிச்சங் கொண்டு வந்து பார்க்கிறபோது தன் பெண்சாதி கையில் சூரிக்கத்தி பிடித்தாப்போல் செத்துக்கிடக் கிறதை அவன் கண்டு மகா பயமும் வியாகுலமும் பட்டு இவள் எதினாலே இப்படி செத்தாள், இந்தச் சாவுக்குக் காரணமென்னவென்று யோசனை பண் ணுகிறபோது அவள் தன்னை அல்லாமல் வேறே பெண்பிள்ளைபேரிலே பட்சமாய் இருக்கிறீரோவெ ன்று கேட்ட வார்த்தையை நினைத்து அந்த வசுகை யினாலே தன்னைத்தானே கொலை செய்தாளென்று மிகுந்த கஸ்தியோடே இருந்தான்.

ஆனால் அவன் தேவமாதாவின்பேரிலே தன்னு டைய நம்பிக்கை எல்லாம் வைத்ததினாலே அந்தப் பிரேதம் இருக்கிற அறைக்கு ஊழியக்காரரும் வே றே ஒருத்தரும் போகாதபடிக்குக் கதவை அடைத் துப் பூட்டித் திரும்பத் தம்முடைய அரண்மனையி லே இருக்கிற அந்தக் கோயிலுக்குத் தானே போ னான். அங்கே சேர்ந்தவுடனே தேவமாதாவின் சுரூ பத்துக்கு முன்பாக முழங்காலிலே இருந்து மகா கஸ்தியோடே அழுது வேண்டிக்கொண்டதாவது:

தயையுள்ள கன்னியாஸ்திரியே, நான் எத்தனை கஸ்தியாயிருக்கிறேனென்று தேவரீருக்கு நன்றாய்த்

தெரியும், இந்தச் சமயத்திலே உம்மால் எனக்குச் சகாயம் வராதிருந்தால் வேறே வழியாகச் சகாயம் வராது, நான் செய்த பாவத்தினாலே தேவரீர் எனக்குச் சகாயம் பண்ண நான் பாத்திரம் அல்லவென்கிறது மெய்தான். ஆனால் தேவரீர் கஸ்திப்படுகிறவர்களுக்குத் தேற்றரவு பண்ணுகிறவளாயிருக்கிறதும் அல்லாமல் நான் உம்மைக் குறித்து இந்தக் கோயிலிலே இராத்திரிதோறுஞ் செபம் பண்ணி வந்ததினாலே என் பெண்சாதி என்பேரிலே சந்தேகப்பட்டாள். இந்தச் சந்தேகத்தினாலே அவள் தன்னைக் கொலை செய்துகொண்டாள். இது முகாந்தரமாக என் பெண்சாதி ஆத்துமம் நரகத்துக்குப் போகிறதற்கும் நான் அரண்மனையார் கையிலே அகப்படுகிறதற்குந் தேவரீர் இடங் கொடுக்கவேண்டாம். தேவரீர் உம்முடைய திருக்குமாரனை மன்றாடுவதினால் என் பெண்சாதிக்கு உயிரும் எனக்குச் சந்தோஷமும் வருமென்று நினைத்திருக்கிறேனென்று மகா அழுகையோடே வேண்டிக்கொண்டான்.

தயையுள்ளவளாய் இருக்கிற தேவமாதா தமது பேரிலே பத்தி உள்ளவனாயிருக்கிற அந்தத் துன்மகன் கஸ்தியைக் கண்டவுடனே அவன் மன்றாடுகிற வார்த்தை முடியுமுன் அவனுக்குச் சகாயம் பண்ணினாள். அதேதென்றால் அவன் மன்றாடுகிறபோது அவன் பெண்சாதிக்குப் புதுமையாக உயிர்வரத்தக்கதாகத் தமது திருக்குமாரனாகிய சேசுநாதனை மன்றாடினாள். ஆகையால் தேவமாதாவின் புதுமையினாலே அவளுக்கு உயிர்வந்து எழுந்திருந்தாள். கழுத்திலே இருந்த காயமுமாறித் தழும்புமாத்திரம் இருந்தது.

அவள் சுறுசுறுப்போடே மேலே வஸ்திரம் போட்டுக்கொண்டு புருஷனிருக்கிற இடத்துக்குப்போக

மனதாயிருந்து கதவு பூட்டி இருக்கிறதினாலே கூப்பிட்டாள். அந்தச் சத்தத்தை அறைகிட்ட இருக்கிற ஊழியக்காரி கேட்டுக் கதவுகிட்டப்போய்க் கதவு நீம்பலாலே உமக்கென்னவேணும் என்று கேட்டாள். அதற்கவள் உன்னுடைய எசமான் இருக்கிற ஸ்தலத்துக்குப்போய் நானும அவரோடே கூடச் செபம் பண்ண அங்கே வருகிறதற்கு இந்தக் கதவு திறக்கிறதற்கு வரவேணுமென்று சொல்லென்றாள். ஊழியக்காரி உடனே அஙகே போய் நடந்த சேதியைச் சொன்னாள். இந்தச் சேதி துரைமகன் கேட்டுத் தான் மோசம போகாதபடிக்கு நீ இன்னம் நன்றாய்ப் பார், என் பெண்சாதிதானே என்னைக் கூப்பிட்டாளோவென்று கேட்டான். இரண்டாம விசையுமபோய் அவள் கதவு நீமபல் வழியாக நன்றாய்ப்பார்த்துத் திரும்பவும இரண்டாமுறை துரையிடத்திற்போய்ச் சந்தேகம இல்லாமல் உமமுடைய ஸ்திரீதானே உம்மைக் கூப்பிட்டாளென்று சொன்னாள்.

பிற்பாடு துரை அந்த அறைக்குப்போய்க் கதவு திறந்து முன் செத்துபபோன பெண்சாதி சீவனோடிருக்கிறதைக் கண்டவுடனே மகா சந்தோஷமாய் இருந்தான். அவள் உடனே துரை காலிலே விழுந்து தன்னைத்தான் கொலை செய்த குற்றம் பொறுக்க வேணும் என்று அழுகையோடே மன்றாடினாள். துரை அவளை எழுந்திருக்கச் சொன்ன பிற்பாடு அவளை நடந்த சேதி சொல்லக் கட்டளை இட்டார். உடனே அவள் சொன்னதாவது: நான் உம்முடைய பேரிலே அநியாயமாய்ச் சந்தேகப் பட்டதினாலே எனக்குக் கனமான துக்கம வந்தது. அந்தத் துக்கத்தினாலே நான் என்னைக் கொலை செய்துகொண்டேன். நான் சாவான பாவத்தோடே செத்ததினாலே

புசாசுகள் என்னுத்துமத்தை நரகத்திலே கொண்டு போக ஆயத்தப்படுகிறபோது அந்தச் சமயத்திலே நீர் எனக்காகத் தேவமாதாவை வேண்டிக்கொண்டதினாலே தேவமாதா நான் செய்த பாவங்களைப் பாராமல் உம்மைக் குறித்து நான் செய்த பாவத்துக்குப் பூலோகத்திலே தபசுபண்ணத்தக்கதாக என் சரீரத்திலே திரும்ப உயிர்வரக் கட்டளை இட்டாளென்று நடந்த சேதிகளைச் சொன்னாள். துரை இந்தச் சேதி எல்லாங் கேட்கிறபோது சந்தோஷத்தினாலே அழுதான். பிற்பாடு துரையும் அவனுடைய ஸ்திரீயும இரண்டுபேருங் கூடத் தேவமாதாவின் கோயிலுக்குப் போய்ச் சம்மனசுகளுடைய இராக்கினி தங்களுக்குச் செய்த உபகாரங்களுக்கு நன்றியறிந்த தோத்திரம் பண்ணினார்கள்.

மறுநாள் துரை தமமுடைய உறவின் முறையா அன்னியர் எல்லாரையும் அழைத்துப் பெரிய விரு ந்து கொடுத்தபிற்பாடு தன்னுடைய பெண்சாதியை எல்லார் முன்பாக நடந்தசேதி சொல்லக் கட்டளை இட்டார். அவள் எல்லாச் சேதியுஞ் சொன்னபிற்பா டுகழுத்திலே இருக்கிற காயத்தின் தழும்பைக் காண் பித்தாள். அவர்கள் தேவமாதாவுக்கு இந்த நல்ல குணமும் இம்மாத்திரம் இரக்கமுமிருக்கிற சேதிய றிந்து மிகவும் ஆச்சரியப்பட்டதும் அல்லாமல் எல் லாருக்கும் இப்படிப்பட்ட ஆண்டவளுக்கு ஊழியப் பண்ண ஆசையும் வந்தது.

சகோதரரே, நம்மாலே இப்போது சொல்லப் பட்ட புதுமையிலே சமுத்திரத்திலே முத்துக் குளிக்கிறாப்போலே நீங்கள் இப்போது ஞான முத்துகளை எடுக்கவேணும். முந்தமுந்த நாம் இப்போது சொன்ன புதுமையிலே துரை பெண்சாதி புருஷன்பேரிலே அநியாயமாய்ச் சந்தேகப்பட்டுக் கோபத்தினாலே

தன்னுடைய ஆத்துமத்துக்குஞ் சரீரத்துக்குஞ் சா வுவரப்பண்ணினுள். ஆகையால் சமுசாரிகளே உங்க ளுக்கு இப்படிக்கொத்த மோசம் வராதபடிக்கு இது காரியத்திலே எச்சரிக்கையாய் இருக்கவேணும். சில விசை புருஷன் பெண்சாதிபேரிலாகிலும் பெண் சாதி புருஷன்பேரிலென்கிலும் அநியாயமாய்ச் சந் தேகப்படுவார்கள், இது ஆகாது.

இரண்டாவது. நீங்கள் இப்போ கேட்ட புதுமை யிலே துரை பெண்சாதி தன்னுடைய புருஷன் பேரிலே அநியாயமாய்க் கோபம் வைத்ததினுல் தன்னைத்தானே பழிவாங்கிக்கொண்டாள். அந்தப் பழியினுலே அவளுக்குத்தானே கனமான மோசம் வந்ததல்லாதே புருஷனுக்கு ஒன்றுமில்லை. இது புத்தியோ? ஆனுல் அவளைப்போலே சில பெண்பிள் ளைகள் செய்கிருர்கள். அதேதென்றுல் சில பெண் பிள்ளைகள் புருஷன் பேரிலேயும் மாமியார் பேரிலே யுஞ் சண்டை மனஸ்தாபத்தினுலே பழியாக நஞ்சைத் தின்று நாக்கைப் பிடுங்கி, நான்றுகொண்டு சாவா ர்கள், இப்படிக்கொத்த பெண்பிள்ளைகள் புத்தி இல் லாத்வர்களைப்போலே செய்து நரகத்திலே விழுகி ருர்கள். அப்படி சாவுவழியாக அவர்களுக்குக் கன மான மோசம் வருமல்லாதே புருஷனுக்கும் மாமி யாருக்கும் மோசம் வரவில்லை.

இதல்லாமல் சிலவிசை பெண்சாதி செத்ததினு லே புருஷனுக்கும் மாமியாருக்குஞ் சந்தோஷம் வரும். அதேதென்றுல் சிலவிசை புருஷன் பொல் லாதவனுய் இருந்து பெண்சாதிபேரிலே அரோசிக மாயிருந்தால் வேறே கலியாணம் பண்ண மனதா யிருப்பானுக்கும். முந்தின பெண்சாதி இப்படி கோபத்தினுலே செத்தால் அவன் இரண்டாங் கலி யாணம் பண்ண விக்கினமில்லை. ஆனபடியினுலே

லாமல் தேவமாதா அவன்பேரிலே இரக்கமாய் இருந்தாள். ஆனபடியினாலே கஸ்திப் படுகிறவர்கள் பேரிலே தேவமாதா இம்மாத்திரம இரக்கமாய் இருக்கிறபோது நீங்கள் நல்ல ஆண்டவருக்கு உங்கள் இருதய முழுதும் ஒப்புக்கொடுத்து அவருக்குத் தினந் தினஞ் சந்தோஷத்தோடே ஊழியம பண்ணவேணும்.

ஐந்தாவது. தமபி தங்கையே, உனக்கு வந்த கஸ்தி தேவமாதாவின் கிருபையினாலே நீங்கிப்போன பிற்பாடு அந்தத் தாயார் செய்தாப்போலே உன் பேர் கோயிலுக்குப் போய்த் தேவமாதா உனக்குச் செய்த உபகாரங்களுக்கு நன்றியறிந்த மனதோடே அவளைத் தோத்திரம பண்ணவேணும். சிலபேர்கள இக்கட்டு கஸ்தி வந்த சமயத்திலே அது தீரத்தக்கதாகத் தேவமாதாவைக் குறித்து அநேகம் காரியம் செய்கிறதற்கு வார்த்தைப்பாடு கொடுப்பார்கள். காரியம அநுகூலமான பிற்பாடு கொடுத்த வார்த்தைப்பாட்டைச் செலுத்தாமல் தேவமாதாவை மறந்துவிடுவார்கள். இந்தக் குறை உனக்கு வேண்டாம. நீ வார்த்தைப்பாடு கொடுத்தவுடனே செலுத்தினால் உனக்கு வேறே கஸ்தி வந்த சமயத்திலே உனக்கு தேவமாதா உதவியாயிருப்பாள். வார்த்தைப்பாடு செலுத்துகிறதிலே எம்மாத்திரந் தாமதமாய் இருப்பாயோ அம்மாத்திரந் தேவமாதா உனக்குச் சகாயம் பண்ணுகிறதிலே தாமதமாய் இருப்பாளென்று அறியக்கடவாயாக.

# ௰௩-ம் சனிக்கிழமைப்

## புதுமையாவது.

---

*தேவமாதா கிறீஸ்துவர்களுடைய மன்றாட்டுக்கிரங்கி வேதத் துரோகியாகிய யூலியான் இராயனைக் கொல்லுவிக்கிறாள்.*

உரோமையென்கிற இராச்சியத்திலே வேதத்துரோகியாகிய யூலியானென்கிற இராயன் இருந்தான். அவனுக்கு இராயபட்டம் வருகிறதற்கு முன்னே புறத்தியிலே கிறீஸ்துவனைப்போலே காண்பித்து இரகசியமாய்ப் பொய்யான தேவர்களைக் கும்பிட்டான். அவனை எல்லாருங் கிறீஸ்துவனென்று எண்ணினபடியினாலே அவனுக்கு இராயபட்டம் வந்தது. அதற்குப் பிற்பாடு திருச்சபையின் சத்துருக்களுக்குள்ளே தான் பெரிய சத்துருவாய் இருந்தான். அதெப்படியென்றால் அவன் எத்தனை மேற்றிராணியார்களையுஞ் சந்நியாசிகளையுங் கொன்றுபோடவும் எத்தனை கோயில்களைச் சுட்டுப்போடவும் எத்தனை கிறீஸ்துவர்களை இரத்தம் ஓட வெட்டவுங் கட்டளையிட்டானென்று கணக்கில்லை. இதுதவிர யூலியானென்கிற இராயன் பேற்சிய இராச்சியத்தானோடே தன்னுடைய படையைக்கொண்டு செயங் கொள்ளத்தக்கதாகத் தன் தேவர்களைப் பார்த்து வேண்டிக்கொண்டதாவது: என் தேவர்களே உங்களாலே எனக்குச் செயம் வந்தால் சண்டை முடிந்த பிற்பாடு உங்களுக்குத் தோத்திரமாக என்னுடைய இராச்சியத்திலே இருக்கிற கிறீஸ்துவர்கள் எல்லாரையும் நிர்மூலமாக்குவேனென்று வேண்டிக்கொண்டு எழுப

த்தையாயிரஞ் சனங்களோடே பேர்சிய இராச்சிய
த்துக்குப் பாளையம் கூட்டிப்போனான். அந்த இரா
யன் இப்படி நினைத்ததைக் கிறீஸ்துவர்கள் எல்லா
ரும் அறிந்து மெத்தப் பயப்பட்டார்கள்.

இதைப் பார்க்கச் செசராயென்கிற பட்டணத்
துக் கிறீஸ்துவர்களுக்கு அதிக பயமிருந்தது. அத
னாலே அவர்கள் தங்களுடைய மேற்றிராணியரா
கிய அர்ச். பசிலியார் என்கிறவர் கிட்டப்போய்
அழுதுகொண்டு தங்கள் பயமெல்லாம் அவரோடே
சொன்னார்கள். மேற்றிராணியார் அவர்கள் அழுகை
யைக் கண்டு அவர்கள் பேரிலே இரக்கமாயிருந்து
இராயன் நினைத்த பொல்லாப்புக்கு அவர்கள் தப்
பித்துக்கொள்ளும்படியாய் எல்லாரையும் மூன்று
நாளைக்கு ஒருசந்தியாய் இருக்கக் கட்டளையிட்டார்.
அந்தப் பிரகாரத்துக்கு அவர்கள் எல்லாரும் ஒருச
ந்தியாய் இருந்தார்கள். அவர்கள் இருந்த பட்டண
த்துக்குப் புறத்தியிலே ஒரு மலையின்பேரிலே தேவ
மாதாவின் கோயிலிருந்தது. அங்கேதானே மேற்றி
ராணியாருங் குருமார்களும் மற்றப் பிரசைகளும்
போன பின்பு தேவமாதா சுரூபத்தின் முன்பாக
மேற்றிராணியாரானவர் முழங்காலிலே இருந்து தே
வமாதாவைப் பார்த்து அழுகையோடே வேண்டிக்
கொண்டதாவது:

தயையுள்ள கன்னியாஸ்திரியே, தேவரீர் கஸ்திப்
படுகிறவர்களுக்குத் தேற்றரவாய் இருக்கிறபடியி
னாலே இந்தப் பட்டணத்துக் கிறீஸ்துவர்கள் படு
கிற கஸ்தியைப் பார்த்து இவர்கள்பேரிலே இரக்க
மாய் இருக்கவேணும். நாங்கள் எல்லாரும் உமது
திருக் குமாரனை விசுவசிக்கிறதிலே தயிரியமாய் இ
ருந்ததினாலேயும் இராயனிட்ட கட்டளைப்படி நாங்
கள் கேளாததினாலேயும் எத்தனைப் பொல்லாப்பு

ஷ்ஸ்தி அநுபவித்தோமென்று தேவரீர் அறிந்திருக்கி றீர். நீர் சத்தியுள்ளவளாயிருக்கிற படியினாலே அவ னுடைய ஆங்காரத்தைப் பாளயத்திலே தணிக்க வேணும். அவன் ஒரு புலியைப்போலேயும் நாங்கள் ஆடுகளைப் போலேயும் இருக்கிறோம். அப்படி நாங் கள் சேசுநாதருடைய மந்தை ஆடுகளாய் இருக்கிற படியினாலே தேவரீர் அந்தப் பெரிய புலியின் கையி லே நாங்கள் அகப்பட விடாமல் எங்களை இரட்சிக்க வேணுமென்று அழுதுகொண்டு மகா பத்திச் சுறு சுறுப்போடே மன்றாடினார்.

அந்தக் கோயிலுக்குள்ளே தானே தேவமாதா வின் சுரூபமல்லாமல் வேதசாட்சியான அர்ச். மெற் குறொன்கிறவர் சுரூபங் கையிலே ஈட்டி பிடித்துக் கொண்டிருந்தது. மேற்றிராணியாரானவர் தேவமா தாவை வேண்டிக்கொண்ட பிற்பாடு தேவமாதா வின் சுரூபம் புதுமையாக வாய்திறந்து அர்ச். மெற் குறொன்கிறவரைப் பார்த்துச் சொன்னதாவது: மெ ற்குறொன்கிறவரே நீர் போய் உம்முடைய கையிலி ருக்கிற ஈட்டியினாலே யூலியானிராயன் செய்கிற பொல்லாப்பில் நின்று கிறீஸ்துவர்களை இரட்சித்துக் கொள்ளென்று தேவமாதா கட்டளையிட்டாள். இப் படி தேவமாதா திருவுளம் பற்றின வார்த்தை மேற் றிராணியாருக்கு மாத்திரங் கேட்கப்பட்டது.

.இதுவுமல்லாமல் தேவமாதா அர்ச். மெற்குறொ ன்கிறவருக்கு அதைச் சொன்ன பிற்பாடு அந்தச் சுரூபங் காணமற் போனதை மேற்றிராணியார் மற் றக் கிறீஸ்துவர்களுக்கு அறியப் பண்ணினதுமன்றி இதுகாரியத்துக்காகத் தேவமாதாவுக்குத் தோத்தி ரம்பண்ண அவர்களுக்குக் கட்டளையிட்டார். கொ ஞ்சநேரத்துக்குப் பிற்பாடு மேற்றிராணியார் அந்

தக் கோயிலுக்குள்ளேதானே இருந்து மறைந்து போன அர்ச். மெற்குறென்கிறவர் சுரூபத்தை மறுபடி கண்டு அந்தச் சுரூபத்தின் கையிலேயிருந்த ஈட்டி முழுமையும் இரத்தத்தினாலே நனைந்து ஈரமாய் இருக்கிறதை மேற்றிராணியாரானவர் கண்ட உடனே இந்த இரத்தமேது என்ன காரியமாச்சுதென்று நினைத்துச் சந்தோஷத்தினாலே அழுதும அல்லாமல் தேவமாதா கிறீஸ்துவர்களுக்குச் செய்த உபகாரத்துக்கு நன்றியறிந்த தோத்திரம் பண்ணினார்.

அன்றைக்கு ஏழாநாள் இராயன் பாளயத்திலே இருந்து சில பேர்கள் பட்டணத்துக்கு வந்து சொன்னதாவது: யூலியானென்கிற இராயனுடைய பாளயம் திகென்கிற ஆற்றின் கிட்ட இறங்கி இருக்கிறபோது இதற்கு ஏழாம் நாளைக்கு முன்னே யூலியானென்கிற இராயன் கூடாரத்திலே இருக்கிற சமயத்திலே இராவில் ஒருத்தரும் அறியாத ஒரு துரை இராயன் கூடாரத்திலே வந்து தன் கையிலிருந்த ஈட்டியினாலே யூலியானென்கிற இராயனை நன்றாய்க் குத்தினான். குத்தினவுடனே அந்தக் காயத்திலே இராயன் தன்னுடைய கையைப் போக விட்டு இரத்தத்தை வாரிப் பரமண்டலத்தை அண்ணாந்துபார்த்து அந்த இரத்தத்தை இறைத்துச் சேசுநாதரைக் கலிலே நாட்டானே என்று தேவ தூஷணமாகக் கூப்பிட்டு யூலியானிராயனைச் செயங் கொண்டாயே செயங் கொண்டாயேயென்று சொல்லித் தேவ துரோகியாக நிர்ப்பாக்கியவானாய்ச் செத்தானென்று வந்தவர்கள் அங்கே நடந்த சேதியைச் சொன்னார்கள். கிறீஸ்துவர்கள் இதுவறிந்து எம்மாத்திரஞ் சந்தோஷப் பட்டார்களென்றுந் தேவமாதா தங்களுக்குச் செய்த உபகாரத்துக்கு நன்றியறிந்த

மனதோடே எத்தனை தோத்திரஞ் செய்தார்களென்றும் வாக்கினாலே சொல்லக்கூடாது.

கிறீஸ்துவர்களே எசமான் தன் நந்தவனத்திலே புஷ்பங்களை எடுக்கிறாப்போலே இப்போ நீங்கள் கேட்ட புதுமையிலே ஞான புஷ்பங்களை எடுக்கவேணும். அதெப்படி என்றால் இப்போது நம்மாலே சொல்லப்பட்ட புதுமையிலே யூலியானென்கிற இராயன் செய்த கலாபத்தினின்று தேவமாதா கிறீஸ்துவர்களை இரட்சித்துக்கொண்டாளென்று நீங்கள் கேட்டீர்களே. அந்தபடியினாலே தேவமாதா வழியாக அவர்களுக்குச் செயம் வந்தாப்போலே உங்களுக்கும் வரலாம். நீங்கள் அஞ்ஞானிகளுக்குள்ளே இருக்கிறபடியினாலே அவர்களாலே சிலவிசை உங்களுக்குக் கலகத் தொந்தரையாகும், சிலவிசை பெரிய சேர்வைக்காரன் காரியக்காரன் நிஷ்டூரமுள்ளவனாய் இருந்து பசாசுக்கடுத்த காரியங்களுக்கு உங்களை மெத்தக் கக்கிஷம் பண்ணினால் உங்களுக்கு வந்த கலகம் முகியத்தக்கதாக விசுவாசத்தோடே தேவமாதாவை வேண்டிக்கொள்ளவேணும். அக்காலத்திலேயிருந்த கிறீஸ்துவர்கள் அநேக நாள் கஸ்திப்பட்டாலுஞ் சேசுநாதருடைய வேதத்தை விடாதபடிக்கு அந்தந்தக் கஸ்திலையப் பொறுமையோடே அநுபவித்தார்கள். இந்தப் பிரகாரமாய் நீங்கள் நடக்கவேணும். சிலபேர்கள் சர்வேசுரனுக்குப் பயப்படாமல் அரண்மனையாருடைய சில்லறைக்குப் பயந்து பசாசின் திருவிழாவுக்கு உதவி பண்ணிப் பசாசுக்கு ஊழியம் பண்ணுவார்கள். நீங்கள் இப்படிச் செய்யவேண்டாம்.

பின்னேயும் இப்போ சொல்லப்பட்ட புதுமையிலே அந்தக் கிறீஸ்துவர்கள் தங்களுக்கு வந்த கலகம் நீங்கிப்போகத்தக்கதாக ஒருசந்தியாயிருந்து அநேக

நாள் தாழ்ச்சியோடே தேவமாதாவை வேண்டிக் கொண்டார்கள். நீங்களும் இப்படிச் செய்யவேணும். திருச்சபைக்காருலும் உங்களுக்கு மாத்திரமென்கிலும் ஒரு கனமான கஸ்தி வந்தால் ஆங்காரமாயிராமல் அந்தக் கஸ்தி நீங்கிப்போகத்தக்கதாகத் தேவமாதாவைப் பத்தியோடே வேண்டிக்கொள்ள வேணும். சிலபேர்கள் ஆங்காரியாயிருந்து தங்களுக்குக் கஸ்தி வந்தவுடனே சொல்லுகிறதாவது:

நாங்கள் என்ன பாவஞ் செய்தோம், அநேக வருஷந் தேவமாதாவுக்கு ஊழியம் பண்ணினோம், சனிக்கிழமைதோறும் ஒருசந்தியாய் இருந்தோம், இப்படியிருக்க எங்களுக்குக் கஸ்தி வரத் தேவமாதா பார்த்திருக்கிறாள். அவளுக்குக் கண் இல்லையோ? கஸ்திப்படுகிற சமயத்திலே சகாயம் பண்ணுதிருக்கிறதென்ன, காரியம் என்னவென்று முறைப்படுவார்கள். இந்த வார்த்தைகளெல்லாந் தேவ தூஷணந் தானே. இப்படி சொல்லுகிறவனே, நீ இப்படிச் சொல்வதினால் உன்பேரிலே கனமான பாவம் வருகிறதல்லாமல் உன் ஆங்காரத்தினாலே உனக்குக் கஸ்தி நீங்காமல் அதிகமாயிருக்கும். ஆனபடியினாலே கஸ்தி வந்தால் பின்னுந் தேவமாதாவைப் பார்த்து வேண்டிக்கொள்ளத் தக்கதாவது: தேவமாதாவே நான் பாவிதானே, நான் செய்த பாவத்துக்குக் கணக்கில்லை; என் பாவத்தினாலே எனக்கு இந்தக் கஸ்தி வந்ததென்று நினைத்திருக்கிறேன், ஆனால் நான் செய்த பாவங்களைத் தேவரீர் பாராமல் உம்முடைய தயவைப் பார்த்து இந்தக் கஸ்தி நீங்கிப்போகத்தக்கதாக எனக்குச் சகாயம் பண்ணத் தேவரீரை மன்றாடுகிறேனென்று வேண்டிக்கொள்ள வேணுமென்று அறியக்கடவீர்களாக.

## ௰௬-ம் சனிக்கிழமைப்

புதுமையாவது.



தேவமாதா தம்மை மன்றாடின ஓர் புண்ணியவதியை இரட்சிக்க வந்து தம்முடைய திருக்குமாரனைக் கொண்டு ஓர் குழந்தையை உயிர்ப்பித்துப் பேசவித்த அற்புதம்.

உத்திராதி இராச்சியத்திலே ஒரு ஊரிலே புருஷன் பெண்சாதி இரண்டுபேர் இருந்தார்கள். அவர்களுக்குள்ளே வேற்றுமை மெத்தவிருந்தது. அதேதென்றால் பெண்சாதி நல்ல புண்ணியவதியாய்ச் சர்வேசுரனுக்குப் பயப்பட்டவளுமாய் இருந்ததும் அல்லாமல் தேவமாதாவின்பேரில் மகா பத்தியுள்ளவளுமாயிருந்தாள். புருஷனுக்குத் துர்க்குணம் இருந்ததும அல்லாமல் தன் பெண்சாதியைச் சட்டை பண்ணாமல் புறத்தியிலே மனதின்படியே காமபாவத்தின் வழியிலே நடந்து பெண்சாதிக்கு வஸ்திரபோசனங் கொடாமல் பலஸ்திரீகளிடமாய்ச் செலவு பண்ணினான். அவள் இந்தச் சேதியெல்லாம் அறிந்து தனக்குச் சாப்பாடாக வெறும் அப்பத்தண்ணீர் இருந்தாலும் நல்ல புண்ணியவதியாய் இருந்தபடியினாலே இந்தக் கஸ்தியெல்லாம் பொறுமையோடே அநுபவித்துத் தன்னுடைய புருஷன் மனது திரும்பத்தக்கதாக அடிக்கடி தேவமாதாவை வேண்டிக்கொண்டாள்.

ஆனால் அவளுடைய புருஷன் சிலவிசை பலஸ்திரீகளுக்கு வெகுமானங் கொடுக்கத் தன்னிடத்தில்

ஒன்றும் இல்லாததினாலே தன் பெண்சாதி கையிலே இருந்த மோதிரத்தையுங் கழுத்திலே போட்டிருந்த பொன் உடைமைகளையும் நல்ல வஸ்திரங்களையும் வாங்கிப் பலஸ்திரீகளுக்குக் கொடுப்பான். அவனுடைய பெண்சாதி தான் பிழைக்கத்தக்கதாகச் சிலவிசை புறத்தியிலே கடன் வாங்கினாலும் அது பற்றாததினாலே ஒரு ஆஸ்திக்காரனுடைய குழந்தைக்குப் பால் கொடுக்கிறதினாலே குழந்தையினுடைய தகப்பன் அவளுக்குத் தினஞ் சாப்பாடு கொடுத்து வந்தான். புருஷன் அதையறிந்து தன்னுடைய பெண்சாதி பேரிலே மகா வர்மமாய் இருந்ததினாலே அவளுக்கு ஆண்மனையார் வழியாகக் கனமான மோசம வரத்தக்கதாக ஆகாத ஒரு உபாயஞ் செய்தான். அதேதென்றால்:

இவன் பாளையத்திலே இருந்து தன்னுடைய வீட்டுக்கு இராத்திரியிலே வந்து தன் பெண்சாதி நித்திரை செய்கிறபோது அவள் கிட்டக்கிடக்கிற அந்தக் குழந்தையைக் கத்தியினாலே கழுத்தை அறுத்துப் போட்டு இரகசியமாய் ஓடிப்போனான். இவனுடைய பெண்சாதி காலமே விழித்தபோது குழந்தை செத்துப்போனதைக் கண்டவுடனே ஒரு பயித்தியககாரியைப்போலே இருந்து எத்தனை விசை தன்னுடைய நெஞ்சிலே அடித்துக்கொண்டாள், எத்தனையோ விசை தன் முகத்திலே நகத்தினாலே பிறிக்கொண்டாளென்று கணக்கில்லை. தலைமயிரைப் பிய்த்துக்கொண்டு கையாலே கை அடித்துக்கொண்டு கெட்டியாய்க் கூப்பிட்டு அழுதாள். அவளுடைய அழுகைச் சத்தத்தினாலே சுற்றிலே இருந்தவர்கள் அவளுடைய வீட்டுக்குள்ளே போய்க் குழந்தையைக் கொல்லப்பட்டிருக்கிறதைக் கண்டு இந்தக் கொலைபாதகத்துக்குக் காரணம் யாரென்று விசா

ரிக்கும இடத்தில் சிலர் இந்தப் பெண்பிள்ளை பேரிலேயுஞ் சிலர் அவள் புருஷன் பேரிலேயுஞ் சந்தேகப்பட்டார்கள்.

இப்படி இருக்கையிலே செத்துப்போன குழந்தையினுடைய தகப்பன் இந்தச் சேதியறிந்து மெத்தக் கஸ்திப்பட்டுத் தன்னுடைய மகன் பிரேதத்தைக் காணத்தக்கதாக அந்தப் பெண்பிள்ளையினுடைய வீட்டுக்குப் போகிறபோது அவளுடைய புருஷனாகிய துர்க்குணமுள்ளவன் எதிரே வந்தான். செத்த குழந்தையினுடைய தகப்பன் என் பிள்ளை எப்படி செத்ததென்று கேட்டான். அதற்கு அவன் துரோகஞ் செய்தவனானபடியினாலே தான் ஒன்றும அறியாதவன்போலே சொன்னதாவது:

நீர் சொல்லுகிற சேதி நான் ஒன்றும் அறியேன், இந்தமட்டும நான் வீட்டுக்குப் போகவில்லை, உமமுடைய குழந்தை செத்தது மெய்யானால் என் பெண்சாதிதான் கொன்றாளென்று சொல்ல வேண்டியிருக்கிறது. அதேதென்றால் நேற்றிராத்திரி என் வீட்டில் என் பெண்சாதியை அல்லாமல் வேறே மனுஷரில்லை, அவள் ஒரு புண்ணியவதிபோலே தான் காண்பிக்கிறாளென்று நான் அறிவேன், சிலர் அவளை மெய்யான புண்ணியவதியென்று அவள்பேரிலே விசுவாசமாய் இருப்பார்கள், ஆனால் அவளுக்கு மெய்யான பத்தி இல்லாததும அல்லாமல் அவள் பொல்லாத மனுஷியென்று நினைத்திருக்கிறேன். இதினாலே நான் அவள்பேரிலே பட்சமில்லாதிருக்கிறதும் அல்லாமல் அரோசிகமாய் இருக்கிறேன். நீர் உமமுடைய குழந்தைக்குப் பால் கொடுக்கத்தக்கதாகக் குழந்தையை அவள் கையிலே கொடுக்கிறதற்கு முன்னே என்னை ஒரு வார்த்தை கேட்டால் உமமுடைய குழந்தைக்கு இப்போ வந்த மோசம்

வாரதபடிக்கு நான் அப்போ சம்மதிப்பதில்லையென்று சொன்னான்.

செத்த குழந்தையினுடைய தகப்பன் இந்தச் சேதியைக் கேட்டுத் தாமதம் இல்லாமல் அரண்மனைபாரிடத்திற் போய்த் தன் குழந்தை செத்த சேதியும் அந்தப் பெண்பிள்ளை புருஷன் சொன்ன சேதியுஞ் சொன்னான். பிரதானி இந்தச் சேதி எல்லாங் கேட்ட பிற்பாடு ஊழியக்காரரை அனுப்பி அவளைப் பிடித்து அரண்மனையிலே கொண்டுவரச் சொன்னான். அந்தப் பிரகாரத்துக்கு அவளைப் பிடித்து அரண்மனையிலே கொண்டுவந்த பிற்பாடு பிரதானி அவளைப் பார்த்துக் கேட்டதாவது: குழந்தையைக் கொலை செய்த இராத்திரியிலே உன் புருஷன் வீட்டிலே இருந்தானோ அல்லது நீ தனியே இருந்தாயோவென்று கேட்டதற்கு என் புருஷன் வீட்டிலே இல்லையென்று சொன்ன பிற்பாடு பிரதானி சொன்னதாவது: உன் வீட்டிலே இந்த இராத்திரியிலே நீ தானே இந்தக் கொலை செய்தாயென்று சொன்னான். அதற்கு அவள் மகா கஸ்திப்பட்டு நான் இந்தப் பாவஞ் செய்யவில்லை என்று அழுகையோடே சொன்னாலும் அரண்மனையார் அவள் சொல்லுகிற வார்த்தையை விசுவசியாததினாலே அவளைக் கொன்றுபோடத் தீர்வையிட்டார்கள்.

அவள் சபைமுன்பாக இந்தத் தீர்வையைக் கேட்ட உடனே பரமண்டலத்தை அண்ணாந்துபார்த்துக் கெட்டியாய்ச் சொன்னதாவது: தேவமாதாவே, நான் இந்தக் குற்றஞ் செய்யவில்லையென்று தேவரீர் அறிந்திருக்கிறதினாலே தேவரீர் எனக்குச் சகாயம் பண்ணத்தக்கதாக எழுந்தருளி வாருமென்று மகா நம்பிக்கையோடே சொன்னாள். அவள் இந்த வார்த்தை சொன்ன உடனே இருந்தாப்போலே அந்த

ச்சைக்குள்ளே ஒரு பெரியவிராக்கினி தமது கையிலே ஒரு நல்ல குழந்தையை ஏந்தின பிரகாரத்துக்குக் காண்பித்துப் பிரதானியையும் மற்றக் காரியக்காரரையும் பார்த்துச் சொன்னதாவது: நீங்கள் இந்தப் பெண்பிள்ளையைக் கொன்றுபோடத் தக்கதாகக் கட்டளையிட்டீர்களே, நம்முடைய கையிலே இருக்கிற குழந்தை திரும்ப நடுத்திக்கவேணும் என்று சொன்னபிற்பாடு அந்த இராக்கினி கையிலேயிருக்கிற குழந்தை சொன்னதாவது: அப்படியே குழந்தையைக் கொலைசெய்தவர்கள் ஆமென்று நாம் திருநக்காட்டுவோம். ஆனபடியால் செத்த குழந்தையின் பிரேதத்தை இங்கே கொண்டுவரவேணும் அல்லாமல் இங்கே இருக்கிறவர்களுக்குள்ளே ஆராகிலும் ஓடிப்போகாதபடிக்குப் பெரிய வாசலை அடைக்கப் போடவேணுமென்று சொன்னாள்.

பிரதானியும் மற்றக் காரியக்காரரும் இதுகண்டு ஆச்சரியப்பட்டதும் அல்லாமல் செத்த குழந்தையினுடைய பிரேதத்தைக் கொண்டுவரவும் பெரிய வாசலை அடைக்கவும் கட்டளையிட்டார்கள். அப்படியே செத்த குழந்தையினுடைய பிரேதத்தைக் கொண்டுவந்த பிற்பாடு காண்பித்த இராக்கினி கையிலே இருந்த குழந்தை அந்தப் பிரேதத்தைப்பார்த்துச் சொன்னதாவது: பிரேதமே பிதாவாகிய சர்வேசுரனுடைய திருநாமத்தினாலே சீவனோடே எழுந்திரு, உன்னைக் கொலைசெய்தவன் இன்னானென்று சொல்லென்று கட்டளை இட்டவுடனே அந்தக் குழந்தை புதுமையாக எழுந்திருந்து சுற்றிலும் இருக்கிறவர்களைப் பார்த்துத் தனக்குப் பால் கொடுத்த பெண்பிள்ளையினுடைய புருஷனைக் கையினாலே காண்பித்து இவன்தான் இராத்திரி இரகசியமாய் வீட்டுக்குள்ளேவந்து நிஷ்டூரத்தோடே என்னைக்

கொன்றுபோட்டானென்று கெட்டியாய்ச் சொல்லிற்று. இப்படிச் சொன்னபிற்பாடு காண்பித்த இராக்கினியாகிய தேவமாதாவும் அவள் குழந்தையாகிய சேசுநாதரும் காணமல் மறைந்து போனார்கள். அரண்மனையார் இந்தச் சேதி எல்லாம் அறிந்து பால் கொடுத்த அந்தப் பெண்பிள்ளையை விட்டுவிட்டதும அல்லாமல் அவள் புருஷனுடைய இரண்டு காலையுங் குதிரைக்காலிலே கட்டித் தெருவீதியைச் சுற்றிவரச்செயது அந்தக் குதிரை ஓட்டத்தினலே அவன் இழுபட்ட பிற்பாடு கடைசியாய் அவனைக் கொன்றுபோட்டார்கள். இந்தப் பாவாகிய பொல்லாப்பில் நின்று தேவமாதா அவளுடைய பெண்சாதியை இரட்சித்தாள்.

கிறீஸ்துவர்களே, நல்ல சுமுகத்திலே எசமான் கனிகளைப் பறிக்கிறாப்போலே நீங்கள் கேட்ட இந்தப் புதுமையிலே சில ஞானகனிகளைப் பறிக்கவேணும். முதலாவது. தேவமாதா தம்முடைய திருக்குமாரனுகிய சேசுநாதனை முன் சொல்லப்பட்ட பெண்பிள்ளைக்காக வேண்டிக்கொண்டதினலே சேசுநாதர் தம்முடைய தாயார் கையிலே குழந்தையாக அந்த அரண்மனையாருக்குக் காண்பித்து அவளுக்கு நல்ல தீர்வையிட்டார். இந்தப் பிரகாரமாகத் தேவமாதா உனக்காகச் சேசுநாதனை வேண்டிக்கொண்டால் சாகிற சமயத்திலே தனித்தீர்வையில் சேசுநாதர் தம்முடைய தாயாரைக்குறித்து உனக்கு நல்ல தீர்வையிடுவார். இதினலே நீ சாகிறமட்டுஞ் சளியாமல் தேவமாதாவுக்கு முழுமனதோடே ஊழியம் பண்ணவேணும்.

இரண்டாவது. நாம் இப்போது சொன்ன புதுமையிலே அந்தப் பெண்பிள்ளை புருஷனுகிய துர்க்குணமுள்ளவன் தன்னுடைய பெண்சாதிக்கு அ

யாயமாய் அநேகங் கஸ்தி வருத்துவித்ததும் அல்லா மல் கடைசியிலே அரண்மனையார் வழியாக அவரு க்கு மோசம் வரத்தக்கதாக அந்த ஆகாத உபாயம பண்ணினன். ஆனல் இந்தப் புண்ணியவதி தன் புருஷனைப் பழிவாங்கத் தேடாமல் தேவமாதாவின் பேரிலே நம்பிக்கையாய் இருந்ததினலே பூலோகத் துக்கு ஆண்டவள் அவருக்குக் கனமான சகாயம பண்ணினள். இதுவல்லாமல் அவருடைய புரு ஷன் தான் செய்த பாவத்தினலே கனமான ஆக் கினை அநுபவித்தான்? இந்தப் பிரகாரமாய் யாதா மொருத்தன் உனக்கு அநியாயமாய்க் கஸ்தி வருத் துவித்தால் நீ அவனைப் பழி வாங்காமல் அந்தக் கஸ்தி முடியத் தேவமாதாவைத் தக்கவிதமாய் வே ண்டிக்கொண்டால் அவருடைய கிருபையினலே சந்தேகம இல்லாமல் உன்னுடைய கஸ்தி முடிவது மன்றி உனக்குச் சந்தோஷமும வரும.

கடைசியிலே நம்மாலே இப்போது சொல்லப்ப ட்ட அந்தப் பெண்பிள்ளை புருஷன் கபடாய் இரா த்திரியிலே வீட்டுக்குள்ளே போய் இரகசியமாய்க் கொலை பாதகஞ் செய்ததினலே தன்பேரிலே புறத் தியாருக்குச் சந்தேக முதலாய் வரவில்லையென்று நினைத்திருந்தான். ஆனல் அவன் கனமான மோசம போனன். அதேதென்றல் அவன் செய்த இரகசிய மான பொல்லாப்பைச் சர்வேசுரனுடைய கிருபை யினலே எல்லாரும் அறிந்தார்கள். இப்படி இந்த நாளிலே சிலவிசையாகுது. அதேதென்றல் கபடு ள்ள சிலபேர்கள் செய்த கனமான பாவங்களை இர கசியமாய்க் கட்டிக்கொண்டதினலே தங்கள் பே ரிலே புறத்தியாருக்குச் சந்தேகம் வரவில்லையெ ன்று நினைத்திருக்கிறர்கள். இப்படிக்கொத்தவர்கள் மோசம் போகிறர்கள். அதெப்படியென்றல் எவனு·

யினும் இரகசியமாய்ச் செய்த பாவஞ் சர்வேசுரன் அறிந்திருக்கிறபடியினாலே சிலவிசை ஆண்டவர் பாவஞ் செய்தவனுக்கு ஆக்கினையாக அவன் சீவனோடே இருக்கிறபோது அதை மற்றவர்களுக்கு அறியப் பண்ணுவார். எப்படியும் அது பொதுத் தீர்வையிலே தெரியப்படுமே. இப்படிக்கொத்த மோசம் உங்களுக்கு வாராதபடிக்கு நீங்கள் பிரசித்தமாகவும் இரகசியமாகவும் ஒருகாலும் பாவஞ் செய்யாமல் இருக்கவேணுமென்று அறியக்கடவீர்களாக.

## ௨௰-ம் சனிக்கிழமை

### புதுமையாவது.

ஒருத்தன் கனமான பாவத்தைப்
பாவசங்கீர்த்தனத்திலே சொல்லாமலிருக்க
வெட்கப்பட்டிருக்கையில் தேவமாதாவை வேண்டிக்
கொண்டதினால் அது தீர்ந்துபோன
அற்புதம்.

கர்த்தர் மனுஷாவதாரம் பண்ணின ஆயிரத்தொருநூற்றைம்பதாம் வருஷத்திலே செர்மானியா என்கிற இராச்சியத்திலே உயர்ந்த கோத்திரத்திலே பிறந்த ஒரு கிறீஸ்துவன் பசாசின் தந்திரத்தினாலே கனமான பாவத்திலே விழுந்தான். அதை அவன் பாவசங்கீர்த்தனத்திலே சொல்லுகிறதற்குக் கனமான வெட்கம் வந்ததினாலே அந்தப் பாவத்தை ஒளித்தான். பிற்பாடு அவனுக்கு வந்த விசாரமா

வது: நான் செய்த இந்தப் பாவத்தைப் பாவசங்கீர்த்தனத்திலே சொல்லாதிருந்தால் நரகத்துக்குப் போவேனென்று நினைத்தான். இந்த நினைவினாலே அவன் சாப்பிட்டாலும் பேசிக்கொண்டிருந்தாலும் வெவ்வேறே தொழில் செய்துகொண்டிருந்தாலும் எப்போதும் கஸ்தியாயிருந்தான். இந்தக் கஸ்தியினாலே தான் செத்தால் தாவிளையென்று நினைத்துத் தான் இருந்த பட்டணத்துக்கு அடுத்தாப்போலே இருக்கிற பெரிய ஆற்றின கிட்டப்போய் அந்தத் தண்ணீருக்குள்ளே அமுந்திச் சாகத்தக்கதாகத் தண்ணீர் மெத்த இருக்கிற இடம் பார்த்து அங்கே தானே விழுகிறதற்கு மனதாயிருந்தான்.

இப்படி இருக்கையிலே தனக்குக் காவலாய் இருக்கிற சம்மனசு வழியாக வந்த விசாரமாவது: நான் இந்தத் தண்ணீரிலே விழுந்து செத்தாலும் இப்போது எனக்கிருக்கிற கஸ்தியைப் பார்க்க நரகத்திலே எனக்கு வருகிற கஸ்தி எப்போதும் அதிக பெரிதாயிருக்கும், இது புத்தியல்ல. நான் என்ன செய்ய வந்தேன், ஒர் பயித்தியக்காரனைப்போலச் செய்கிறேனென்று நினைத்துத் தான் சாகவேணுமென்கிற விசாரத்தைத் தள்ளித் தன் வீட்டுக்குப் போனான். அங்கே சேர்ந்த பிற்பாடு சேசுநாதர் பாடுபட்ட சுரூபத்தின் முன்பாக முழங்காலிலேயிருந்து கஸ்தியோடே வேண்டிக்கொண்டதாவது:

என் சேசுநாதரே, நான் செய்த பாவத்தைப் பாவசங்கீர்த்தனத்திலே கூச்சத்தினாலே சொல்லாதிருந்தாலும் தேவரீர் உம்முடைய ஐந்து காயங்களைப் பற்றிப் பொறுத்தருள உம்மை மன்றாடுகிறேனென்று மகா கஸ்தியோடே அநேகம் விசை வேண்டிக்கொண்டான். ஆனால் அவன் வேண்டிக்கொண்டாலும் அழுதாலும் அவன் நினைவிலே எப்போதும்

வந்த விசாரமாவது: சேசுநாதர் தம்முடைய திருச் சபைக்குப் பாவிகள் செய்த பாவங்களை எல்லாம் பாவசங்கீர்த்தனத்திலே சொல்லக் கட்டளையிட்ட தினாலே சாவானபாவஞ் செய்தால் பாவசங்கீர்த்த னத்திலே வெளிப்படுத்துகிறதற்கு எப்போதுங் க டன் இருக்குமென்று நினைத்தான். இந்த நினைவு மர த்தைத் துளைக்கிற பூச்சிபோலே அவன் இருதயத் திலே துளைத்துக்கொண்டிருந்ததினாலே அவனுக்கு ஆறுதலும் நல்ல நித்திரையுமில்லை.

இப்படி இருக்கையிலே மறந்த பாவம் பாவசங் கீர்த்தனத்திலே சொல்லக் கடனில்லையென்று நினை த்துத் தான் செய்த பாவத்தை மறந்துபோகத்தக்க தாகப் பராக்கு வருத்துகிறதற்கு அவன் வேறே சீர் மையிலே அங்கங்கே அந்தந்தப் பட்டணங்களிலே போய்ச் சுற்றித்திரிந்தான். ஆனால் அவனுக்கு எத் தனை பராக்கு வந்தாலும் அந்தப் பாவத்தை மற ந்துபோகாமல் எப்போதும் அது நினைவிலே இருந் ததினாலே கஸ்தி அதிகம் வந்தது. இப்படி இருக் கையிலே ஒரு இராத்திரி இந்தக் காரியத்தைக் குறி த்துத் தேவமாதாவை வேண்டிக்கொண்ட பிற்பாடு நித்திரைபோனான். அப்போது தன்னுடைய தோ ளிலே ஒரு அடிபடுகிற சத்தங் கேட்டான். இந்தச் சத்தங் கேட்டதும் அல்லாமல் பாவசங்கீர்த்தனம் பண்ணப் போவென்கிற சத்தமுங் கேட்டான். இந் தச் சத்தத்தினாலே நித்திரை மயக்கம்போய் விழித் துக்கொண்டு தன்னை அடித்து இந்த வார்த்தை சொன்னது இன்னதென்று தெரியாததினாலே புது மையாக இப்படியாச்சுதோவென்று நினைத்துச் சர் வேசுரனுக்குப் பயந்து உடனே தாமதமில்லாமல் எழுந்திருந்து பாவசங்கீர்த்தனம் பண்ணக் கோயி லுக்குப் போனான்.

. அங்கே போய்ச் சேர்ந்து அந்தக் கனமான பாவஞ் சொல்லுகிறதற்குத் திரும்பவும் வெட்கப்பட்டதினாலே பாவசங்கீர்த்தனம் பண்ணாமல் மகா கஸ்தியோடே தன் வீட்டுக்குப் போய் இப்படி அநேக நாள் இருந்தான். இப்படி இருக்கையிலே ஒரு இராத்திரி நித்திரை செய்கிறபோது திரும்பவும் முன்னையைப்போலே தோளிலே ஒரு அடிச் சத்தங் கேட்டதும் அல்லாமல் பாவசங்கீர்த்தனம் பண்ணப் போவென்கிற சத்தமுங் கேட்டான். இதினாலே மெத்தப் பயப்பட்டுத் தாமதம் இல்லாமல் பாவசங்கீர்த்தனம் பண்ணத் திரும்பக் கோயிலுக்குப் போனான். அங்கே சேர்ந்தவுடனே மற்றக் கிறீஸ்துவர்கள் பாவசங்கீர்த்தனம் பண்ணுகிறதைக் கண்டாலுந் தன் பாவத்தைப் பாவசங்கீர்த்தனத்திலே சொல்லுகிறதைப்பார்க்கச் சகிக்கிறது தாவிலேயென்று என்னைத் துண்டுதுண்டாய் ஒருவன் வெட்டினாலும் நான் ஒருகாலும் இந்தப் பாவம் பாவசங்கீர்த்தனத்திலே சொல்லுகிறதில்லையென்று நினைத்துப் பாவசங்கீர்த்தனம் பண்ணாமல் வெளியிலே போனான். அவன் அப்படி போகிறபோது அந்தக் கோயிலின் பீடத்தின்மேலே தேவமாதாவின் சுரூபம் இருக்கிறதையும் அந்தச் சுரூபத்தின் முன்பாக அநேகம் பேர் முழங்காலிலே இருந்து வேண்டிக்கொள்ளுகிறதையுங் கண்டான். ஆதலால் நாலு பேருஞ் செய்கிறாப்போலே அந்தச் சுரூபத்தின் முன்பாக முழங்காலிலே இருந்து அந்த வெட்கத்தினாலே தனக்கு வந்த கஸ்தி நீங்கிப்போகத்தக்கதாகத் தேவமாதாவைப் பார்த்து முழுமனதோடே அழுது வேண்டிக்கொண்டவுடனே ஆச்சரியமான காரியஞ் சம்பவித்தது.

அதேதென்றால் அவன் செய்த பாவம் பாவசங்கீர்த்தனத்திலே வெளிப்படுத்துகிறதற்குச் சொல்·

லக்கூடாத வெட்கப்பட்டானென்று முந்தி நீங்கள் கேட்டீர்களே. இப்படி இருக்கையிலே தேவமாதா வின் புதுமையாக அவனுடைய வெட்கம் இருந் தாப்போலே போய்ப் புதுசாய் வேறே இருதயம் வந்தாப்போலே இருந்தது. ஆகையால் அவன் எழு ந்து அந்தக் கோயிலிலே இருந்த ஒரு குருசுவாமி கிட்டப்போய் நடந்த சேதி சொன்ன பிற்பாடு அந் தப் பாவத்தை வெளிப்படுத்தி உத்தமமனஸ்தாபப் பட்டு அழுதுகொண்டு நல்ல பாவசங்கீர்த்தனம் பண்ணித் தனக்குத் தேவமாதா செய்த உபகாரங் களைச் சந்தோஷமாகச் சொல்லி வீட்டுக்குப் போன பிற்பாடு தேவமாதாவின் வழியாகத் தனக்கு வந்த கனமான சகாயத்தை நினைத்து அடிக்கடி தேவமா தாவைத் தோத்திரம் பண்ணினதும் அல்லாமல் எப்போதுந் தேவமாதாவின் பேரிலே மகா பத்தியுள் ளவனாய் நடந்தான்.

கிறீஸ்துவர்களே, சமுத்திரத்திலே முத்துகள் எடுக்கிறாப்போலே நீங்கள் இப்போது கேட்ட புது மையிலே கண்ட சில பலனை எடுக்கவேணும். முத ல்ாவது. இப்போது நம்மாலே சொல்லப்பட்ட கிறி ஸ்துவன் தான் செய்த பெரும் பாவத்தைப் பாவச ங்கீர்த்தனத்திலே வெட்கத்தினாலே வெளிப்படுத்தா மல் நரகத்துக்குப் பாத்திரமாய் இருந்தான். இப்படி இருக்கையிலே அவன் தேவமாதாவை வேண்டிக் கொண்டதினாலே நரகத்துக்குப் போகாதபடிக்கு அந்தப் பொல்லாப்பில் நின்று தேவமாதா அவனை இரட்சித்தாள். ஆகையால் நீங்கள் பாவசங்கீர்த்த னம் பண்ணுகிற சமயத்திலே முன் செய்த பாவங் களைச் சொல்லுகிறதற்கு வெட்கப்பட்டால் அதி னாலே உங்கள் ஆத்துமத்துக்கு மோசம் வராதபடி க்கு முன் சொல்லப்பட்ட கிறீஸ்துவன் வேண்டிக்

கொண்டாற்போலே நீங்கள் தேவமாதாவை வேண்டிக்கொள்ளவேணும். அந்தச் சமயத்திலே இப்படிக் கொத்த வேண்டுதல் உண்டானால் தேவமாதாவின் கிருபையினாலே சந்தேகம் இல்லாமல் தகாத வெட்கத்தை நீக்கி நல்ல பாவசங்கீர்த்தனம் பண்ணுவீர்கள்.

இரண்டாவது. நாம் இப்போது சொன்ன கிறீஸ்துவன் தேவமாதாவின் உதவியினாலே தன்னை உபத்திரியப்படுத்தி இருந்த தகாத வெட்கத்தை விடாதிருந்தால் தான் செய்த கனமான பாவத்தை வெட்கத்தினாலே பாவசங்கீர்த்தனத்திற் சாகுமட்டுக்குஞ் சொல்லாமல் இருப்பதினால் சந்தேகமில்லாமல் நாகத்திலே போகவேண்டியிருந்தது. இப்படிச் சில கிறீஸ்துவர்கள் பாவத்தை ஒளிக்கிறதென்று நமக்குப் பயம் இருக்கின்றது. அதைக் குறித்து அர்ச். தெரேசம்மாள் சொன்னதாவது: அநேகங் கிறீஸ்துவர்கள் பாவசங்கீர்த்தனத்தில் தங்கள் கனமான பாவங்களை வெட்கத்தினாலேயாகிலும் பயத்தினாலென்கிலும் குருவோடே சொல்லாமல் மறைத்தால் நரகத்திலே போவார்களென்று திருவுளம் பற்றினாள். இப்படிக்கொத்த மோசம் உங்களுக்கு வாராதபடிக்கு இந்த நல்ல புத்தியை ஏற்றுக்கொள்ளுங்கள். அதேதென்றால் கடின காயமுள்ளவன் சரீரத்துக்கு ஆரோக்கியம் வரத்தக்கதாகத் தன் சரீரத்திலுண்டான காயங்கள் புண் சிழுகளைக் காட்ட வெட்கம் வந்தாலும் வயித்தியனுக்குச் சந்தேகமில்லாமல் காண்பிப்பான். இந்தப் பிரகாரமாய் ஆத்துமத்துக்குப் பாவசங்கீர்த்தன வழியாக ஞான ஆரோக்கியம் வரத்தக்கதாக அதிலே இருக்கிற அசுத்தமான பாவங்களை எல்லாம் ஞான வயித்தியனாகிற குருவினிடத்திலே சொல்லித் தெளிவிக்கவேணும்.

மூன்றாவது. நாம் இப்போது சொன்ன கிறீஸ்துவன் பாவசங்கீர்த்தனத்திலே தன் பாவத்தைச் சொல்லாதபடிக்குத் துவக்கத்திலே வெட்கத்துக்கு இடங்கொடுத்ததினாலே ஒரு பாவசங்கீர்த்தனத்திலே அதைச் சொல்லாதிருந்தான். பின்னேயும் மறு பாவசங்கீர்த்தனத்திலே அதிக வெட்கம் வந்தது. பின்னேயும் அதினாலே எத்தனையோ உபத்திரிய வருத்தப்பட்டான். ஆதலால் இந்த ஆகாத வெட்கத்தினாலே உன்னாத்துமத்துக்கு மோசம் வாராதபடிக்குத் துவக்கத்திலேதானே இப்படிக்கொத்த வெட்கத்துக்கு இடங்கொடாமல் இருக்கவேணுமென்று அறியக்கடவாயாக.

## உக-ம் சனிக்கிழமைப்

புதுமையாவது.

---

### எஜீப்த்து மரியாயி தேவமாதாவின் அநுக்கிரகத்தினாலே மனந்திரும்பி அருந்தவஞ் செய்து பெரிய அர்ச்சியசிஷ்டவளான அற்புதம்.

எஜீப்த்திராச்சியத்திலே மரியாளென்கிற ஒரு பெண்பிள்ளை இருந்தாள். அவள் அந்த இராச்சியத்திலே பிறந்தபடியினாலே அவளுக்கு எஜீப்த்து மரியாளென்கிற பேராச்சுது. அவளுக்கு நல்ல ரூபம் இருந்தபடியினாலேயும் புத்திக் குறையினாலேயும் மோக பாவத்தின் வழியிலே நடந்தாள். அதற்குச்

சில அடையாளங்களை அவளிடத்திலே அவளுடைய தாய்தகப்பன் கண்டு அவள் அந்தப் பாவ வழியிலே நடவாதபடிக்கு அவளைத் தெண்டித்தார்கள். அவள் தான் நினைத்த காரியத்துக்கு விக்கினம் வாராதபடிக்குப் பன்னிரண்டுவயது நடக்கிறபோது அலெக்சாந்திரியென்கிற பட்டணத்துக்கு ஓடிப்போனாள். அவள் அங்கே சேர்ந்த பிற்பாடு அவள் மெத்தச் சவுந்தரியமாயிருந்த படியினாலே கொசுக்கள் வெளிச்சங் கண்டு மொய்க்கிறாப்போலே அந்தப் பட்டணத்திலிருந்த அநேகம்பேர்கள் இவளுடைய முகத்தைக் கண்டாப்போலே அவளைச் சுற்றிக்கொண்டார்கள். அதினாலே அநேகங் கொசுக்கள் வெளிச்சத்திலே அகப்படுகிறாப்போலே அவளுடைய சவுந்தரியத்தினாலே அகப்பட்ட அநேக ஆத்துமங்களுக்குப் பாவத்தினாலே ஞான சாவுவந்தது. அந்தப் பட்டணத்தில் அவள் பதினாறுவருஷம் இருந்ததும் அல்லாமல், ஆகாத நடக்கையிலே நடந்ததினாலே அங்கே அவள்பேரில் மிகுந்த ஆவலாதியாயிற்று.

இப்படி இருக்கையிலே அந்தப் பட்டணத்திற்கு அநேகங் கிறீஸ்துவர்கள் அப்பாலே இருந்து வந்ததை அவள் கண்டு நீங்கள் வந்தகாரியம் என்னவென்று அவர்களைக் கேட்டாள். சேசுநாதர் பாடுபட்டஸ்தலமாகிய எருசலேமென்கிற பட்டணத்துக்குப் போகத்தக்கதாக வந்தோமென்றார்கள். எஜிப்த்து மரியாயி இந்தச் சேதி அறிந்து தன்னுடைய முகத்தை எருசலேமென்கிற பட்டணத்தாருக்குக் காண்பிக்கத்தக்கதாக அவர்களோடே கூடக் கப்பலேறிப் போனாள். அந்தப் பட்டணத்திலே சேர்ந்த பிற்பாடு சேசுநாதர் மனுஷருக்காக அங்கே பாடுபட்டு அநுபவித்த ஸ்தலங்களை அவள் சட்டைபண்ணாமல் மனதின்படியே அங்கேயும் பாவவழியிலே

நடந்தாள். இப்படியிருக்கையிலே புட்டாசிமாதம பதினாலாந்தேதியில் வருகிற சிலுவை மகிமைத்திருநாள் நிமித்தமாகச் சேசுநாதர் பாடுபட்ட சிலுவையைத்தானே கண்டு நமஸ்காரம் பண்ணத்தக்கதாக எண்ணப்படாத கிறீஸ்துவர்கள் கோயிலுக்குள்ளே போகிறதை இந்த மரியாயி கண்டாப்போலே தானும் அவர்களோடே கூடப்போனாள். கோயிலின் பெரிய வாசலிலே சேர்ந்த பிற்பாடு கோயிலுக்குள்ளே ஒருத்தருடைய காணாத கை அவளை வெளியிலே தள்ளிற்று. முந்த முந்த அவளை இப்படி தள்ளினதை அவள் சட்டைபண்ணாமல் இரண்டாம் விசையுங் கோயிலுக்குள்ளே போக அவள் சோதனை பார்த்தாள். ஆனால் அந்த இரண்டாம் விசையும் முன்னையைப்போலே வெளியில் தள்ளப்பட்டாள்.

அப்போது அவளுக்கு வந்த விசாரமாவது: இரண்டாம் விசையுந் தள்ளப்பட்டபோதே இது சும்மாவாயில்லை, சர்வேசுரனுடைய ஆக்கினையாக வந்ததென்று நினைத்துப் பயந்திருந்தாள். ஆனால் இம்மாத்திரம் பயம் வந்தாலும் மூன்றாவது நாலாவது உள்ளே போகலாமோவென்று சோதித்துப் பார்த்தாள்.. ஆகிலும் அப்போதும் முன்னையைப்போலே தள்ளப்பட்டதும் அல்லாமல் அவள் சரீரமெல்லாம வருத்தமாய் இருந்தது. இதினாலே மெத்த விசாரப்பட்டுக் கோயிலின் முன் மண்டபத்தில் ஒரு மூலையிலே போய்க் கஸ்தியோடு இருக்கிறபோது இஸ்பிரீத்துசாந்துவாகிய சர்வேசுரன் கிருபையினாலே அவளுக்கு வந்த நல்ல விசாரமாவது: நான் செய்த எண்ணப்படாத மோகபாவத்தினாலே என் ஆத்துமம் மெத்த அசுத்தமாய் இருக்கிறதைக் கண்டு சர்வேசுரன் தம்முடைய வீடாகிற கோயிலுக்குள்ளே என்னை வரவொட்டாமல் சாபிக்கப்பட்டவளைப்போ

லே அப்பாலே என்னைத் தள்ளினாளென்று அழுகையோடே நினைத்து நெஞ்சிலே பிழை தட்டிக்கொண்டு அறியாமற் செய்தேனென்று அடிக்கடி சொன்னாள். இப்படி வேண்டிக்கொள்ளுகிறபோது கோயில் முகப்பிலே இருந்த தேவமாதாவின் சுரூபத்தைக் கண்டாப்போலே தனக்குக் கொஞ்சம் நம்பிக்கை வந்ததினாலே அவள் அந்தச் சுரூபத்தைப் பார்த்து வேண்டிக்கொண்டதாவது:

தேவமாதாவே பாவியாயிருக்கிற என்பேரிலே இரக்கமாயிரும். நான் செய்த பாவத்தினாலே இந்தக் கோயிலுக்குள்ளே போகிறதற்கு நான் பாத்திரமல்லவென்று அறிந்திருக்கிறேன். ஆனால் தேவரீர் பாவிகளுக்கு அடைக்கலமாய் இருக்கிறபடியினாலே உம்முடைய திருக்குமாரனைக் குறித்து நிர்ப்பாக்கியமுள்ள எனக்குச் சகாயம் பண்ணும். இப்படியே என்னுடைய நிர்ப்பாக்கியம் எம்மாத்திரம் கனமாயிருக்கிறதோ அம்மாத்திரம் கனமாய் உம்முடைய தயவைக் காண்பியும். உம்மாலே நான் கோயிலுக்குள்ளே போய்ச் சேசுநாதர் பாடுபட்ட சிலுவையை நமஸ்காரம் பண்ணினேனானால் நான் பாவத்தை விட்டுப் பூலோகத்தை வெறுத்துச் செய்த பாவங்களுக்குத் தபசு பண்ணுகிறதற்குத் தேவரீர் குறிக்கும் ஸ்தலத்துக்குப் போக வார்த்தைப்பாடு கொடுக்கிறேனென்று மகா அழுகையோடே வேண்டிக்கொண்டாள். தான் கேட்ட இந்த மன்றாட்டைத் தேவமாதா கொடுப்பாளென்று நம்பிக்கை கொண்டு எழுந்திருந்து தேவமாதாவின் கிருபையினாலே கோயிலுக்குள்ளே விக்கினமில்லாமற் போய் மெத்தச் சந்தோஷப்பட்டுச் சேசுநாதர் பாடுபட்ட சிலுவையை நமஸ்காரம் பண்ணின பிற்பாடு திரும்ப முன் மண்டபத்திலே வந்து முகப்பிலே இரு

காட்டுக்குள்ளே இருந்தாலும் மோட்ச சந்தோஷ த்தை அநேகம்விசை அநுபவிக்கச் சர்வேசுரன் கட் டளையிட்டார். இப்படியே அங்கே காட்டுக்குள்ளே ஐம்பது வருஷம் இருந்தாள். மேலும் ஓர் மனுஷர் முகமுங் காணாதிருந்தாள். பிற்பாடு அவள் பிறந்து எண்பத்தாறு வயது நடக்கிறபோது சர்வேசுரன் உதவியினாலே அர்ச். சொசிமென்கிறவர் அந்தக் காட்டுக்குள்ளே சுற்றித் திரிகிறபோது அங்கே அ வளைக் கண்டார். அந்தப் புண்ணியவதி அவரோடே தன் நடக்கையெல்லாஞ் சொன்ன பிற்பாடு அவ ரைக் கேட்ட மன்றாட்டாவது: வருகிற வருஷத் திலே நீர் இங்கே தேவநற்கருணை கொண்டுவரவே ணுமென்று சொன்னாள். அப்படியே மறு வருஷத் திலே சித்திரை மாதம் அர்ச். சொசிமென்கிறவர் இந்தப் புண்ணியவதி இருந்த ஸ்தலத்துக்குத் திரு ம்பப் போய்த் தேவநற்கருணை கொடுத்தார். அவள் மகா பத்தியோடேயுஞ் சந்தோஷத்தோடேயும் அ தை வாங்கின பிற்பாடு பரமண்டலத்தை அண்ணா ர்ந்து பார்த்து வேண்டிக்கொண்டதாவது:

சுவாமீ இப்போ சாகிறதற்குச் சந்தோஷமாய் இருக்கிறேனென்று சொல்லி மகாத்துமாவான சொசிமென்பவரைப் பார்த்து மறு வருஷந் தேவரீர் இங்கே வர உம்மை மன்றாடுகிறேனென்றாள். அந் தப் பிரகாரமாக அந்தக் குரு மறுவருஷம் அங்கே போனபோது அந்தப் புண்ணியவதி செத்துப்போ னதினாலே அவளுடைய பிரேதத்தைக் கண்டு அந் தச் சரீரத்துக்குச் சுற்றிலும் நல்ல பிரகாசமும் வீசச் சரீரத்தின் தலைமாட்டிலே பூமிமேலே எழுதி யிருக்கிற சில எழுத்துகளையுங் கண்டு வாசித்தார். அதாவது: நான் பாவியாயிருந்த மரியாயி சித்திரை மாதம் மரணமடைந்தேன். என் சரீரத்தை இந்த

ஸ்தலத்திலே பூமிக்குள்ளே புதைத்து என் ஆத்து
மத்துக்கு வேண்டிக்கொள்ளுமென்று எழுதியிருந்
தது. கல்லறையை வெட்ட எத்தனம் இல்லாததி
னுலே காட்டிலே இருந்து ஒரு சிங்கம் வந்து புது
மையாகத் தன் முன்னங் காலினுலே கல்லறை
தோண்டின பிற்பாடு அந்தச் சரீரத்தைக் குருவா
னவர் கல்லறையில் அடக்கிவைத்தார். அதின் பி
ன்பு தமது மடத்துக்குப் போய்த் தமக்குக் கீழாயிரு
க்கிற மற்றக் குருக்களுக்கு நடந்த சேதிகளைச்
சொன்னுர். இதைக் கேட்டு எல்லாருஞ் சர்வேசுர
னையுந் தேவமாதாவையுந் தோத்திரம் பண்ணினுர்
கள்.

கிறீஸ்துவர்களே அப்படியே நீங்களுந் தோத்தி
ரம் பண்ணவேணும். இந்தப் புதுமையிலே நடந்த
காரியங்களெல்லாங் கேட்ட உங்களுக்குள்ளே தேவ
மாதாவின் தயவும் வல்லபமுங் குறித்து உங்களில்
ஆச்சரியப்படாதிருக்கிறவனுர்? அதேனென்றுல் எ
ஜிப்த்து மரியாள் என்கிறவள் ஆத்துமந் தன் பாவ
த்தினுலே மகா அசுத்தமாய் இருந்தாலுந் தேவமா
தாவினுடைய கிருபையினுலே ஒரு வெள்ளை மாடப்
புருவைப்போல் சுத்தமாச்சுது. ஓர் பெரிய பாவியா
னவள் பெரிய ஆர்ச்சியசிஷ்டவளானுள்.

கிறீஸ்துவர்களுக்குள்ளே பாவிகள் உண்டானுல்
அந்தப் புண்ணியவதி தேவமாதாவின் உதவியினுலே
பாவத்தைவிட்டுத் தபசு பண்ணினுப்போலே இவர்க
ளும் பாவத்தை விட்டுத் தபசு பண்ணக் கடவார்கள்.
அந்த வழியாக அவர்களுடைய ஆத்துமத்துக்கு வ
ந்த வியாதி நீங்கி ஞான ஆரோக்கியம் வரத்தக்க
தாக அந்தப்பிரகாரமாய் அடிக்கடி அழுகையோடே
தேவமாதாவை வேண்டிக்கொள்ளக்கடவார்கள். பா
வத்தினுலே ஆத்துமத்துக்கு வந்த வியாதி நீங்

ஞான ஆரோக்கியம் வரத்தக்கதாக அந்தப் பிரகாரமாய் அடிக்கடி தேவமாதாவை வேண்டிக்கொண்டால் சந்தேகம் இல்லாமல் அந்த ஆண்டவள் வழியாக ஆரோக்கியம் வருமென்று அறியக்கடவீர்களாக.

---

## உஉ-ம் சனிக்கிழமைப்

புதுமையாவது.

---

தேவமாதாவின் படத்து மூலமாக மொனோ
மொத்தப்பாவென்கிற நாட்டின்
இராசா மனந்திரும்பின
அற்புதம்.

சில்வேராகொஞ்சால்வென்கிற குருவானவர் தம்முடைய இராச்சியத்திலிருந்து புறப்பட்டு அக்கியானிகளுக்குச் சர்வேசுரனுடைய வேதத்தைப் படிப்பிக்கத்தக்கதாக ஆப்பிரிக்காத் தேசத்திலே மொனோமொத்தப்பாவென்னுந் தேசத்துக்குப் போனார். அவர் தேவமாதாவின்பேரிலே மகா பத்தியாய் இருந்ததினாலே தாம் போகிற காரியம் அனுகூலமாக மோக்ஷராக்கினியின் சாயலாகிய ஒரு நல்ல படத்தைக் கொண்டுபோனார். அங்கே சேர்ந்த பிற்பாடு தாங் கொண்டுபோன படமுந் தட்டுமுட்டுகளும் ஒரு வீட்டிலே வைத்துக் கொஞ்ச நாளைக்குப் பிற்பாடு உலோகத்தானாகிய அந்த இராச்சியத்து இராசாவின் கிட்டச் சந்திக்கப் போனார். அப்படியே

இராசாவையுஞ் சந்தித்துத் தாம் வந்த காரியத்தை யும் மற்றப் பற்பல நூதன சேதிகளையும் பேசின தின்பேரில் இராசாவும் அவருக்குப் பட்சத்தைக் காண்பித்து நல்ல வார்த்தை சொல்லி அனுப்புவித் தான். குருவானவர் தம்முடைய வீட்டுக்குவந்து தேவமாதாவின் படத்து முன்பாக இராவும் பகலுந் தான் வந்த காரியம் அநுகூலமாயிருக்க வேண்டிக் கொள்ளுகிறதிலே அநேக தேசகாலஞ் செலவழித் தார். அந்தப் பிரகாரமாய்த்தானே சம்மனசுகளு டைய இராக்கினியானவள் அந்தக் குருவானவர் கேட்ட மன்றாட்டைக் கட்டளையிட்டாள்.

அதெப்படியென்றால் ஒருநாள் அவர் அந்தப் பட த்தின் முன்பாக முழங்காலிலேயிருந்து செபம் பண் ணுகிறபோது அந்த இராசாவின் கிட்ட இருந்த ஒரு துரைமகன் அவரோடே பேசத்தக்கதாக இவர் இரு ந்த வீட்டுக்கு வந்தான். வந்தவுடனே அவர் செபம் பண்ணுகிறதையும் அந்த அலங்காரமான படத்தின் வடிவையுங் கண்டு ஆச்சரியப்பட்டு நாம் பேசினால் செபத்துக்கு விக்கினமாய் இருக்குமென்று துரை மகன் பேச்சுக்கொடாமற் புறப்பட்டுப் போனான். அவன் தான் கண்ட படம் மெய்யான பெண்பிள்ளை யென்று நினைத்து இராசாவின் கிட்டப்போய்ச் சொன்னதாவது: வேறே இராச்சியத்திலிருந்து சர் வேசுரனுடைய வேதக்குரு கொஞ்ச நாளைக்கு முன் னே இங்கே வந்தாரே, அவர் வீட்டுக்கு நான் இப் போது போனேன். அங்கே ஒரு பெண்பிள்ளையைக் கண்டேன். அந்தப் பெண்பிள்ளையினுடைய சவுந் தரிய அலங்காரத்தைப்போலே இந்தச் சீமையிலே கிடையாதென்று இராசாவோடே சொன்னான். இ ராசாவானவன் இந்தச் சேதியைக் கேட்டு என்ன ஆசையினாலேயோ துரைமகன் சொன்ன அந்தப்

பெண்பிள்ளையைப் பார்க்கத்தக்கதாகக் குருவானவருக்கு ஆளனுப்பித் தன் அரண்மனைக்கு அந்தப் பெண்பிள்ளையைக் கூட்டிவரச் சொன்னான். குருவானவர் இந்தச் சேதி கேட்டு அந்தப் படத்தை நேத்தியான ஒரு பட்டுச் சீலையாலே மூடி இராசாவின் அரண்மனைக்குக் கொண்டுபோனார்.

அங்கே சேர்ந்த பிற்பாடு குருவானவர் படத்தைத் திறந்து காட்டுவதற்கு முன்னே சுதனாகிய சர்வேசுரன் மனுஷாவதாரம் பண்ணின வர்த்தமானத்தைக் குறிப்பிடமாக இராசாவைப் பார்த்துச் சொன்னதாவது: ஆதிமனுஷருடைய பாவத்தினாலே சகல மனுஷருக்கும் வந்த பொல்லாப்பைத் தீர்க்கத்தக்கதாகப் பிதாவாகிய சர்வேசுரன் தமது அளவில்லாத இரக்கத்தினாலே தமக்கு உகந்த குமாரனாகிய சுதன் மனுஷாவதாரம் பண்ணிச் சிலுவையிலே அறையுண்டு மரணத்தை அடையச் சித்தமானார். அப்படியே மனுஷாவதாரம் பண்ணின சேசுநாதர் கன்னியாஸ்திரியாகிய ஒரு பெண்பிள்ளை இடத்திலே பிறந்தார். இவருடைய தாயார் தன் கன்னி முத்திரை மகிமை கெடாமல் சேசுநாதரைப் பெற்றாள். இந்த உத்தம பெண்பிள்ளையின் படத்தைக் கண்டல்லவோ அந்தத் துரைமகன் உம்மிடத்தில் வந்து சொன்னானென்று குருவானவர் சொன்ன பிற்பாடு மகா தாழ்ச்சியோடேயும் பத்தியோடேயும் முழங்காலிலே இருந்து அந்தப் படத்தைத் திறந்து காண்பித்து இராசாவோடே சொன்னதாவது: இராசாவே சம்மனசுகளும் மனுஷருந் தங்களுடைய இராக்கினியாக வணங்குகிற ஆண்டவளுடைய சாயல் இதுவே இந்தப் படத்தைப் பத்தியோடே பார்த்துத் தலை குனியத்தகும். இராசா அந்தப் படத்துத் திருமுகத்தின் வடிவையும் அழகையுங் கண்டு

மிகவுஞ் சந்தோஷப்பட்டு அந்தப் படத்தைத் தமது அரண்மனையிலேதானே வைத்துக்கொள்ளக் குருவை மன்றாடினான். அதற்குக் குருவானவர் சம்மதித்து அந்த அரண்மனைக்குள்ளே ஒரு நல்ல அறையிலே தம்முடைய கையினாலேதானே நேத்தியாள வஸ்திரத்தையுங் கட்டி மற்ற ஆயத்தங்களையுஞ் செய்து வெகு பூச்சியத்தோடே அந்தப் படத்தை அங்கே ஸ்தாபித்தார்.

பிற்பாடு தம்முடைய வீட்டுக்குப் போகிறபோது யோசித்ததாவது: இந்தப் படம அந்த அரண்மனையிலே சும்மாய் இருப்பதில்லை. இது வழியாக இராசாவின் ஆத்துமத்துக்கு ஞானப் பிரகாசம் வருமென்று கெட்டி நம்பிக்கையாய் நினைத்துக்கொண்டு போனார். அந்தப் பிரகாரமாய்த்தானே ஆச்சுது. அதெப்படியென்றால் அன்றிராத்திரிதானே இராசா நித்திரை செய்கிறபோது மோக்ஷத்துக்கு இராக்கினியானவள் அந்தப் படத்தின் சாயலாக இராசாவுக்குக் காண்பித்துச் சில வார்த்தை சொன்னாள். அந்தப் பிரகாரமாக ஐந்து இராத்திரியிலேயாச்சுது. அதினாலே இராசா ஆச்சரியப்பட்டுத் தினந் தினம் ஐந்து இராத்திரியுந் தான் கண்ட தெரிசனத்தை விழித்தவுடனே தம்முடைய தாயாருக்குஞ் சில துஷ்டாமக்களுக்குஞ் சொல்லி அந்த ஆண்டவளைக் கண்டு எனக்குச் சொல்லக்கூடாத சந்தோஷமாச்சுது; ஆனால் இந்தச் சந்தோஷத்துக்குள்ளே ஒரு கஸ்தி இருக்கிறது. அதேதென்றால் அந்த ஆண்டவள் எனக்குத் தெரியாத பாஷையிலே பேசினதினாலே நான் அந்த வார்த்தைக்கு அர்த்தங் கண்டுபிடிக்கவில்லையென்று சொன்னார்.

பிற்பாடு அந்தக் கஸ்தி நீங்கத்தக்கதாகக் குருவானவரைத் தன்கிட்ட அழைப்பித்து நடந்த சேதி

யை அவருக்குச் சொல்லி அந்த ஆண்டவள் பேசின பாஷை இன்னதென்று கண்டுபிடிக்கப் புத்தியென்னவென்று கேட்டான். குருவானவர் இந்தச் சேதியெல்லாங் கேட்டு மகா சந்தோஷப்பட்டு இராசாவைப் பார்த்துச் சொன்னதாவது: காண்பித்த ஆண்டவள் மோக்ஷத்துக்கு இராக்கினியானவளான படியினாலே அவளுடைய பாஷை சர்வேசுரனுடைய வேதக்காரர் அறிகிறதல்லாமல் வேதங் கேளாதவர்கள் அறியமாட்டார்களென்று சொன்ன இந்த வார்த்தைக்கு இராசா அர்த்தத்தைக் கண்டுபிடித்து மறுவுத்தாரஞ் சொல்லாமல் சிரித்துக்கொண்டிருந்தார். அவர் சிரித்ததைக் குருவானவர் கண்டு அந்த இராசா கொஞ்ச நாளையிலே வேதங் கேட்கிறதற்கு இதுவே அடையாளமென்று நினைத்துச் சந்தோஷமாய் இருந்து தம்முடைய வீட்டுக்குப் போனார். அப்படியே அவர் நினைத்த பிரகாரத்துக் காச்சுது.

அதெப்படியென்றால் இரண்டு [illegible]க்குப் பிற்பாடு இராசா தமக்குந் தமது தாயாருக்குஞ் சர்வேசுரனுடைய வேத வாங் கேட்க மனது வந்தது. ஆகையால் நீர் அரண்மனைக்கு வாருமென்று ஸ்தானபதி வழியாகக் குருவானவருக்குச் சொல்லி அனுப்பினார். அவர் அந்தச் சேதி அறிந்து சந்தோஷத்தினாலே அழுததும் அல்லாமல் பரமண்டலத்தை அண்ணார்ந்து பார்த்துச் சர்வேசுரனுக்குந் தேவமாதாவுக்குந் தோத்திரம் உண்டாகக்கடவதென்று இரண்டு கையையும் உயரவெடுத்துக் கும்பிட்டு இராசாவின் கிட்டப்போனார். பிற்பாடு இது வெகு கனமான காரியமாய் இருக்கிறதினாலே சுருக்கத்திலே முடிக்கக்கூடாதென்று நினைத்து அநேக நாள் இராசாவுக்கும் அவருடைய தாயாருக்கும் உபதேசத்

றைதத் தமது வாக்கினாலே வெளிப்படுத்தி உபதேசம் முடிந்த பிற்பாடு ஞானஸ்நானம் பெறுகிறதற்கு ஒருநாளைக் குறித்தார். ஞானஸ்நானச் சடங்குசெய் வது இராசாவினுடைய மகிமைக்குத் தக்கதாகும் படிக்கு ஒரு பெரிய திருநாள்போல் அநேகம் பேர் பிரயாசப்பட்டு மிகுந்த வேலை நடத்தினார்கள். பின்னும் எத்தனையோ ஆரவாரம் நடத்தினார்களென்று சொல்லக்கூடாது. ஞானஸ்நானங் கொடுக்கிற அன்றைக்கு எண்ணப்படாத சேவகர் பிரசைகள் முன்பாக வெகு மகிமையோடே இராசாவுக்குச் செபஸ்தியானென்கிற பேரும் அவருடைய தாயாருக்கு மரியம்மாளென்கிற பேரும் இட்டுக் குருவானவர் ஞானஸ்நானங் கொடுத்தார். இதல்லாமல் துரைகளுக்குள்ளே மூன்று துரைகள் அந்தக் குருவின் கையினாலே ஞானஸ்நானம் பெற்றார்கள். இந்த வழியாக அந்தச் சீமையாருக்குச் சர்வேசுரனுடைய வேதங் கேட்க வாசல் திறக்கப்பட்டது.

கிறீஸ்துவர்களே சமுத்திரத்திலே முத்துகள் செனிக்கிறப்போலே இந்தப் புதுமையிலே செனித்த ஞான முத்துகளைக் கைக்கொள்ளவேணும். முந்த முந்த அக்கியானிகளுங் கெட்ட கிறீஸ்துவர்களுந் தேவமாதாவின் வழியாக மனந் திரும்பலாமென்கிறதற்கு மகா நம்பிக்கை உண்டென்று சந்தேகமில்லாமல் நீங்கள் நினைக்கவேணும். அதேனென்றால் உலோகத்தானாகிய ஒரு இராசா சர்வேசுரனுடைய வேதங் கேட்கிறதற்காகக் கக்கிஷமும் விக்கினமும் உண்டென்கிறதற்குச் சந்தேகமில்லை. அதேதென்றால் ஒரு துரை சத்திய வேதங் கேட்கவேணுமானால் ஒரே பெண்சாதியோடு இருக்கலாமொழியத் தானு வைத்திருக்கிற மற்ற ஸ்திரீகளை விட்டுவிடவேணும். பெண்ணாசையினாலே இராசா அதற்குச் சம்மதிக்கிறதற்குக் கக்கிஷமாயிருக்கும்.

இப்படியிருக்கையிலே இந்தப் புதுமையிலே நம் மாற் சொல்லப்பட்ட இராசா சர்வேசுரனுடைய வேதங் கேட்கத்தக்கதாகத் தேவமாதாவின் கிருபையினல் உறுதியாகித் தமக்கு உண்டான எண்ணப்படாத விக்கினங்களைச் சட்டை பண்ணமல் வேதத்தைக் கேட்டான். ஆகையால் தம்பீ நீ செய்த பாவத்தினலே உன் மனது கல்லுபோலே இருந்தாலும் இற்றைவரைக்கும் உனக்குப் பெரியோர்கள் சொன்ன நல்ல புத்தியைக் கேளாதிருந்தாலும் உன் மனது திரும்புகிறதற்கு நீ தேவமாதாவைப் பத்தியோடே மன்றாடினல் உன் மனது திரும்புமே. இதினலே பூலோகத்துக்கு ஆண்டவளுக்கு மகா ஆசையோடே ஊழியம் பண்ணவேணும். இதுவுந் தவிர உலோகத்தாருங் கெட்ட கிறீஸ்துவர்களும மனந் திரும்புகிறதற்கு நீ ஆசையாய் இருந்தால் அநுகாரியம் அநுகூலமாக இப்படிக்கொத்த மனுஷரைச் சம்மனசுகளுடைய இராக்கினிக்கு ஒப்புக்கொடு. இதற்கு அர்த்தம் ஏதென்றால், அவரவர்களுக்காக மோக்ஷத்துக்கு இராக்கினியை மன்றாட ஒருசந்தி இருக்கவும் பிச்சை கொடுக்கவும் பிரயாசப்படவேணும். அப்படிப்பட்ட மனுஷருடைய மனதிலே தேவமாதாவின்பேரிலே பத்தி வந்தால் அந்த ஆண்டவள் கிருபையினலே அவர்கள் மனது திரும்புமே. இந்த வழியாக எண்ணப்படாத பாவிகளும் அஞ்ஞானிகளும் மனந் திரும்பினர்கள். இதல்லாமல் உன் பெண்சாதி பிள்ளைகள் அடிமைகள் உனக்குக் கீழாயிருக்கிறவர்கள் உன்னேடே கூடத் தேவமாதாவைக் குறித்து ஜெபதுமணிச் செபம் பண்ணவும் உன்னைப்போலே ஒருசந்தி முதலான வெவ்வேறே புண்ணியங்களைச் செய்யவும் நீ பிரயாசப்பட்டால் பூலோகத்துக்கு ஆண்டவள் அவர்கள்பேரிலே பட்சமாய் இருப்பதும் அல்லாமல் உன்னலே

தேவமாதாவுக்குச் சந்தோஷம் வரும். சம்மனசுகளுடைய இராக்கினியானவள் அர்ச். விறிசித்தமமாளுக்குக் காண்பித்துச் சொன்னதாவது: நீ நம்முடைய பேரிலே பத்தியாய் இருந்தால் இப்படிப்பட்ட பத்தி உன்னுடைய பிள்ளைகளுக்கும் வருத்துவிக்கக் கடவாயென்று திருவுளம் பற்றினாள். இதினாலே தேவமாதாவின் பேரிலே சிறியோர்களுக்குப் பத்தி வரத்தக்கதாகப் புத்தி சொல்லுகிறவர்களுக்குங் கேட்கிறவர்களுக்கும அநேக ஞான நன்மைகள் வருமென்று அறியக்கடவீர்களாக.



## ௨௩-ம் சனிக்கிழமைப்

புதுமையாவது.

முசியோவென்கிறவன்
சர்வேசுரனுடைய அர்ச். மாதாவே
என்கிற மந்திரத்தை அடிக்கடி செபித்ததினாலே
இரண்டுவிசை தேவமாதாவினால் மரண
ஆபத்தினின்று காப்பாற்றப்
படுகிறான்.

இத்தாலிய இராச்சியத்திலே நல்ல கிறீஸ்துவனாகிய முசியோவென்கிறவன் இருந்தான். அவனுக்கு அநேகம் பேர்கள் சத்துருக்களாய் இருந்தபடியினாலே இவர்கள் அவனைக் கொன்றுபோடவேணுமென்று அநேகம் விசை உபாயமும் ஆலோசனையும்

பண்ணினார்கள். இப்படிக்கொத்த ஆலோசனையை அவன் அறிந்து மெத்தப் பயந்திருந்தாலும் அவன் தனக்கு மோசம் வராதபடிக்கு அர்ச். ஐந்து காயச் சபையார் மடத்துக்குப் போய் அங்கே இருந்த மகாத்துமாவாகிய ஓர் சந்நியாசியார்கிட்ட நடந்த சேதியைச் சொல்லிப் புத்தி என்னவென்று கேட்டான். அப்போது சந்நியாசியார் அவனைப் பார்த்துச் சொன்னதாவது: உன்னுடைய சத்துருக்களால் உனக்குப பொல்லாப்பு வராதபடிக்குத் தேவமாதாவின் பேரிலே பத்தியென்கிற கேடையம் உனக்கு வேண்டியிருக்கின்றது. இதினாலே அடிக்கடி நீ வேண்டிக் கொள்ளத்தக்கதாவது: சர்வேசுரனுடைய அர்ச். மாதாவே இதோ உமமுடைய அடைக்கலமாக ஓடி வந்தேனென்று வேண்டிக்கொள். சுருக்கமாயிருக்கிற இந்த மந்திரத்தைக்கொண்டு பூலோகத்துக்கு ஆண்டவள் அநேகம் புதுமைகளைப் பண்ணினாளென்று அநேகம புத்தகங்களிலே எழுதியிருக்கின்றது. அதேனென்றால் கனமான கஸ்திப்பட்ட பேர்கள் இந்த. மந்திரத்தைச் சொன்னதினாலே மோக்ஷத்துக்கு இராக்கினியானவள் இந்தக் கனமான கஸ்திகளில் நின்று அவர்களை இரட்சித்தாளென்று சொன்னார்.

சந்நியாசியார் சொன்னபடி அந்த மந்திரத்தை அடிக்கடி வேண்டிக்கொண்டதினாலே தேவமாதா அவனுக்குக் கனமான சகாயம் பண்ணினாள். அதெப்படியென்றால் அவனுடைய சத்துருக்கள் அவனைக் கொன்றுபோடத்தக்கதாக அவன் குடி இருந்த வீட்டுக்கு அடுத்த வீட்டிலே அவர்களுங் குடி வந்தார்கள். அதற்குப் பிற்பாடு தாங்கள் இருந்த வீட்டிலே இருந்து அவன் வீட்டுக்கு இரகசியமாய்ச் சுரங்கம் அறுத்துத் துப்பாக்கி மருந்து நிறையக் கட்டியிரு

ந்த பைகளை எடுத்து அந்தச் சுரங்கத்துக்குள்ளே வைத்தார்கள். அதின் பிறகு ஒரு இராத்திரியிலே முசியோவென்கிறவன் நித்திரை செய்கிறபோது அவனுடைய சத்துருக்கள் நீளமாய்ப் போட்டிருக்கிற வத்தியிலே நெருப்பை வைத்துத் தங்களுக்கு மோசம் வராதபடிக்கு அப்பாலே ஓடிப்போனார்கள். அந்த நெருப்பு வத்தி வழியாய் மெள்ள மெள்ளப் போய் ஏறக்குறைய நடுச்சாமத்திலே பற்றிக்கொண்டது. அந்த மருந்து மகா சத்தமாய் அந்த வீட்டுச் சுவரையுந் தரையையும் அடியோடே துண்டு துண்டாய்ப் பேர்ந்தெறிந்து போட்டது. அந்தச் சத்தத்தினாலே ஊரிலே நித்திரை செய்கிறவர்கள் பயந்து விழித்துக்கொண்டார்கள்.

மருந்து பற்றின அந்த வீட்டிலே இருந்த முசியோவென்கிறவனுக்கு என்ன சம்பவித்ததென்று நீங்கள் அறிய மனதாய் இருக்கிறீர்களல்லோ? இதோ சொல்லுகிறோம். அவன் அந்த இராத்திரி நித்திரை போகிறதற்கு முன்னே சர்வேசுரனுடைய அர்ச். மாதாவே உம்முடைய அடைக்கலமாக ஓடிவந்தேனென்கிற இந்த மந்திரத்தை வேண்டிக்கொண்டதினாலே பூலோகத்துக்கு ஆண்டவள் அந்தப் பொல்லாப்பில் நின்று அவனை இரட்சித்தாள். அதெப்படியென்றால் அந்த மருந்து முகாந்தரமாக அவனுடைய வீடெல்லாந் துண்டு துண்டாய்ப் போனாலும் மோக்ஷத்துக்கு இராக்கினியினாலே அவன் தப்பித்துக்கொண்டதினால் அவனுக்கு ஒரு பொல்லாப்பாகிலும் வரவில்லை. அவன் அதை நினைத்துத் தனக்கு அந்த சகாயத்துக்காகத் தேவமாதாவைத் தோத்திரம் பண்ணினதும் அல்லாமல் முன் சொன்ன சந்நியாசியார் இடத்திற்போய் நடந்த சேதியைச் சொன்னான். அவர் மிகவுஞ் சந்தோஷப்பட்டு அவ

னிடத்திற் சொன்னதாவது: உன்னுடைய சத்துரு க்கள் உன்னை விடத்தக்கதில்லை. அவர்களாலே உன க்கு இன்னம் மோசம் வராதபடிக்குத் தினம் அந்த மந்திரத்தை விடாமல் வேண்டிக்கொண்டு வரவே ணுமென்றார். குருவானவர் சொன்னபடியே திரும் பவும் அப்படியாச்சுது.

அதாவது: ஒருநாள் அந்தக் கிறீஸ்துவன் வெளி யிலே புறப்பட்டு ஒரு ஆற்றங் கரையிலே தனியே இருக்கிறபோது சத்துருக்கள் அவனைக் கொன்று போடத்தக்கதாக அவன் கிட்டப் போனார்கள். அ வன் இவர்கள் வருகிறதைக் கண்டு ஓடத்தின்பேரில் ஏறித் தனியே அக்கரைக்குப் போகத் துவக்கினான். அவன் அப்படியே போகிறபோது சர்வேசுரனு டைய அர்ச். மாதாவே இதோ, உம்முடைய அடை க்கலமாக ஓடிவந்தேனென்று பத்தியோடே சொன் னான். இந்த மந்திரஞ் சொல்லுகிறபோது சத்துருக் களுக்குள்ளே ஒருத்தன் அவனைத் துப்பாக்கியாலே சுட்டான். துப்பாக்கிக் குண்டு அவனுடைய இடுப் பிலே பட்டது. ஆனால் அவன் இடுப்பிலே ஒரு பை யிருந்தது. அதிலே சில இரும்புத் துண்டு வைத்தி ருந்தான். அந்த இரும்புத் துண்டுகள் மேலே அந் தக் குண்டு பட்டதினாலே அவனுக்கு மோசமில்லை. அதற்குப் பிற்பாடு சத்துருக்கள் எல்லாரும் ஒரு மிக்க அவனைச் சுட்டாலுந் தேவமாதாவின் உதவியி னாலே ஒரு குண்டாகிலும் அவன் சரீரத்தின்பே ரிலே தையாமல் அவனுடைய வஸ்திரம் எல்லாந் துவாரமாய்த் துளைத்தது. அவன் அக்கரையிலே சேர்ந்த பிற்பாடு சந்தோஷத்தினாலே அழுதுகொ ண்டு நன்றியறிந்த மனதோடே தேவமாதாவுக்குத் தோத்திரம் பண்ணினான். பிற்பாடும் அவன் சாகு மட்டுந் தேவமாதாவுக்கு நன்றியறிந்த மனதோடே

ஊழியம் பண்ணினதும் அல்லாமல் அந்த மந்திரத்தைக் கொண்டு தினந் தினந் தப்பாமல் பத்தியோடே சம்மனசுக்ளுடைய இராக்கினியைப் பிரார்த்தித்துக்கொள்ளுவான்.

கிறீஸ்துவர்களே ஏசமான் தன் நந்தாவனத்திலே புஷ்பங்களைப் பறிக்கிறாப்போலே நீங்கள் இந்தப் புதுமையில் உள்ள ஞானப் புஷ்பங்களைக் கைக்கொள்ளவேணும். முந்த முந்தச் சர்வேசுரனுடைய மூர்ச். மாதாவே இதோ உம்முடைய அடைக்கலமாக ஓடிவந்தோமென்கிற மந்திரத்தைப் பத்தியோடே நாள்தோறும் அடிக்கடி நீங்கள் சொல்லிப் பழக்கம் பண்ணவேணும். இந்தப் பழக்கம் உண்டானால் உங்களுக்கு வருகிற அவதியான சமயத்திலே இந்த மந்திரஞ் சொல்ல நினைவு வரும். இதினாலே உங்கள் சத்துருக்கள் வழியாக ஆனாலுஞ் சுபாவமாகவென்கிலும் உங்களுக்குச் சாகிறதாவாய் வந்தால் அந்தச் சமயத்திலே நீங்கள் இந்த மந்திரத்தைத் தக்க பத்தியோடே சொன்னால் பூலோகத்துக்கு ஆண்டவள் அந்தப் பொல்லாப்பில் நின்று உங்களை இரட்சிப்பாள். இதல்லாமற் சரீரத்துக்குச் சத்துருக்கள் இருக்கிறாப்போலே ஆத்துமத்துக்குஞ் சத்துருக்கள் உண்டு. அவர்களாலே உங்கள் ஆத்துமத்துக்கு மோசம வாராதபடிக்குச் சோதனை வருகிற சமயத்திலே இந்த மந்திரத்தைப் பத்தியோடே சொல்லவேணும். அந்த வழியாக மோக்ஷத்துக்கு இராக்கினியானவள் ஆத்துமத்தை இரட்சிப்பாள். ஆகையால் ஒரு நாளைக்குள்ளே அநேகம் விசை அந்த மந்திரத்தைச் சொன்னால் நல்லது. அப்படிச் சொல்லக் கூடாதே போனாலுங் காலமே விழித்தவுடனேயும் இராத்திரி நித்திரை போகிறதற்கு முன்னேயும் இந்த இரண்டு நேரமுந் தப்பாமல் அந்த

மந்திரத்தை நல்ல பத்தியோடே சொல்லவேணும். இந்த வேண்டுதல் முகாந்தாமாக இராவும் பகலும் உங்கள் ஆத்துமத்துக்குஞ் சரீரத்துக்கும் மோசம் வாராதபடிக்குச் சம்மனசுகளுடைய இராக்கினியா னவள் உங்களை இரட்சிப்பாளென்று அறியக்கடவீர் களாக.

---

## உ௬-ம் சனிக்கிழமைப்

### புதுமையாவது.

### மேற் சொல்லிய மந்திரத்தைச் சொன்னதினால் அகுஸ்தீனென்பவன் காப்பாற்றப்பட்ட அற்புதம்

காலிய இராச்சியத்திலே இருந்து மூன்று பேர் கள் இத்தாலிய இராச்சியத்துக்குப் போகப் பயண மாய்ப் புறப்பட்டார்கள். போகிறபோது சவோயி யென்கிற சீமையிலே சேர்ந்து அங்கே இருக்கிற செனிசென்கிற மலையின் கிட்டப் போனவுடனே பெருங் காற்று மழை மேகங்கள் பயங்கரமான வித மாய்த் திரண்டு வந்தது. இதினின்று மின்னலுங் கனமான இடிச் சத்தமும் புறப்பட்டது. அப் போது பயணமாகப் போகிற அந்த மூன்று பேரும் மெத்தப் பயந்திருந்தார்கள். இப்படிப் பயத்தோடே போகிறபோது உயர மேகத்திலே இருந்து புறப் பட்ட சத்தமாவது: கொன்றுபோடுங் கொன்று போடுமென்கிற சத்தத்தைக் கேட்டார்கள். கேட்ட

வுடனே அந்த மேகத்திலிருந்து ஒரு இடி இந்த மூன்றுபேருக்குள்ளே ஒருத்தன் தலையிலே விழுந்து அவனைப் பிளந்துபோட்டது. இப்படி அவன் செத்துப்போனதை மற்ற இரண்டு பேருங் கண்டு எம் மாத்திரம் பயந்தார்களென்று சொல்லக்கூடாது.

சற்று நேரத்துக்குப் பிற்பாடு ஆகாசத்திலே வேறே கனமான இடிச் சத்தம் புறப்பட்டது. அப்போதுங் கொன்றுபோடுங் கொன்றுபோடுமென்கிற சத்தத்தை இரண்டு பேருங் கேட்டார்கள். கேட்டவுடனே இருவருக்குள்ளே ஒருவன்மேலே இடி விழுந்து அவனையுங் கிழித்துப்போட்டது. தப்பின அகுஸ்தீனென்கிறவன் இதுகண்டு இந்த இரண்டு பேருக்கும் இடியினலே வந்த சாவு சற்று நேரத்துக்குள்ளே தனக்கும் வருமென்று நினைத்து. மெத்தப் பயந்தான். ஆனால் அப்படிக்கொத்த மோசந் தனக்கு வராதபடிக்கு அந்தச் சமயத்திலே தேவமாதாவின்பேரிலே கெட்டி நம்பிக்கையாய் இருக்கிறதற்குத் தனக்குக் காவலான சம்மனசு வழியாக நல்ல நினைவு வந்தது. அந்த நினைவு வந்தவுடனே பூலோகத்துக்கு ஆண்டவளைப் பார்த்து வேண்டிக்கொண்டதாவது: சர்வேசுரனுடைய அர்ச். மாதாவே இதோ உம்முடைய சரணமாக ஓடிவந்தேனென்று பத்தியோடே வேண்டிக்கொண்டான்.

அதற்குப் பிற்பாடு ஆகாசத்திலே முன்னையப்போலே கொன்றுபோடுங் கொன்றுபோடுமென்கிற சத்தத்தைக் கேட்டவுடனே அங்கேயிருந்து தானே புறப்பட்ட வேறே சத்தத்தைக் கேட்டதாவது: இவன் தேவமாதாவின் அடைக்கலமாகப் போனதினாலே இவனைக் கொல்லுகிறதற்கு என்னாலே கூடாதென்கிற சத்தங் கேட்டான். அகுஸ்தீனென்கிறவன் அந்த வார்த்தையைக் கேட்டு மெத்தச் சந்

தோஷப்பட்டதும் அல்லாமல் அங்கேதானே முழ ங்காலிலே இருந்து பரமண்டலத்தை அண்ணார்ந்து பார்த்துச் சமமனசுகளுடைய இராக்கினியானவள் தனக்குச் செய்த சகாயத்துக்கு அழுகையோடே நன்றியறிந்த தோத்திரம பண்ணினன். இதன்றியே அவன் ஊருக்குப் போய்ச் சேர்நத பிற்பாடு தன் னோடேகூட வநத இரண்டு பேருக்குஞ் சம்பவித்த சாவு பூலோகத்துக்கு ஆண்டவளுடைய தயவினு லே தனக்கு வரவில்லையென்று மற்றவர்களோடே சொல்லுகிறபோது இநதச் சேதி கேட்டவர்கள் அந்தச் சாவு பசாசினலே வந்ததென்று நினைத்தது மல்லாமல் தேவமாதாவை மெத்தக் கொண்டாடி னர்கள் இது தவிர இந்த நல்ல புதுமையைக் கேட் டவர்களே, அகுஸ்தினு சொன்ன அந்த மந்திரத் தின் பேரிலே பிரியமாயிருந்து அடிக்கடி அதைச் சொல்லப் பழகவேணுமு.

கிறீஸ்துவர்களே, எசமான் ஒரு நல்ல மரத்திலே கனிகளைப் பறிக்கிறபபோலே இந்தப் புதுமையிலு ள்ள ஞானக் கனிகளைக் கைக்கொள்ளவேணும். நம மாலே சொல்லப்பட்ட இந்தப் புதுமையிலே செத் துப்போன இருவரும் அந்தச் சமயத்திலே சாவான பாவத்தோடே இருந்தால் நரகத்திலே போவார்கள். இதினலே நீங்கள் சாவான பாவத்தோடே இருக் கிறதற்குப பயந்து நடக்க வேண்டாமோ? அதே னென்றல் இருந்தாப்போலே சாவு வந்தால் அப் போது ஆத்துமத்தைச் சுத்தம பண்ணுகிறதற்கு நேரமில்லே. சிலர் தாங்கள் அவஸ்தையாய் இருக்கி றபோது பாவசங்கீர்த்தனம் பண்ணி ஆத்துமத் தைச் சுத்தம் பண்ணலாமென்று நினைக்கிறார்கள். ஆனல் சிலவிசை இப்படிக்கொத்த மனுஷருக்கு மோசம் வரும். அதேனென்றல் பலமுறை வியாதி

இல்லாமல் அவஸ்தை இல்லாமல் சாவு வருகிற அடையாளம் இல்லாதிருக்கையிலே சிறு பிள்ளைக ளுக்கும் வாலருக்கும் விருத்தாப்பியருக்குஞ் சாவு வந்தது. சிலபேர்கள் சாப்பிடுகிறபோதும் பயணம் போகிறபோதும் அசுப்பிலே செத்தார்கள். இதி னுலே நீங்கள் அடிக்கடி உங்கள் ஆத்தும காரியத் தைக் கவனிக்கவேணும். முந்த முந்த நித்திரை போகிறதற்கு முன்னே பாவசங்கீர்த்தனத்தினுலே யாகிலும் உத்தம மனஸ்தாபத்தினுலென்கிலும் ஆத் துமத்தைச் சுத்தம் பண்ணவேணும்.

உன்னுடைய வீட்டிலே நீ தூங்குகிறதற்கு மு ந்தி ஒரு நல்ல பாம்பைக் கண்டால் அந்தப் பாம் பைக் கொன்றுபோடுமட்டும் வீட்டிலே நித்திரை போகமாட்டாயே. அப்படியே உன் ஆத்துமத்திலே இருக்கிற பொல்லாத பாம்பாகிற சாவான பாவத் தைப் பாவசங்கீர்த்தனத்தினுலே யாகிலும் உத்தம மனஸ்தாபத்தினுலென்கிலுங் கொன்று போடுமட் டும் நித்திரை போகவேண்டாம். பின்னேயும் இப் போ நீங்கள் கேட்ட புதுமையிலே அகுஸ்தினென் கிறவன் சம்மனசுகளுடைய இராக்கினியைக் குறித் துச் சொன்ன ஒரு மந்திரத்தினுலே உடனே அவ னுக்குப் பொல்லாப்பு வாராதபடிக்குத் தேவமாதா ஏற்றுக்கொண்டாள். பூமிலோகத்திலே உனக்கு யா தொரு பொல்லாப்பு வாராதபடிக்கு யாதொரு துணை உனக்குச் சலுகையாயிருக்க வேணுமானுல் அந்தத் துணையைத்தான் மன்றாடவேணும். எம்மாத்திரங் கைக்கூலி கொடுக்க வேணும். எத்தனை நாள் காத் திருக்க வேணுமென்று நீ நன்றாய் அறிவாய். ஆனுல் பூலோகத்துக்கு ஆண்டவளுடைய சலுகை உனக்கு வேணுமானுல் கைக்கூலி கொடுக்கவும் மிகுந்த பிர யாசை படவுந் தேவையில்லை. பத்தியோடே ஒரு

விசை மாத்திரம அவளை வேண்டிக்கொண்டாலுஞ் சிலவிசை தேவமாதா உன்னை உடனே ஏற்றுக் கொள்ளுவாள். உடனே ஏற்றுக்கொள்ளாளாகில் பின்னும் பத்தி ஆசையோடே வேண்டிக்கொள்ள வேணும்.

இதல்லாமல் பூலோகத்திலுள்ள துரைகளுடைய சலுகைக்கும் மோட்ச இராக்கினியினுடைய சலுகைக்கும் எத்தனை தூர வித்தியாசமென்று நீங்கள் நினைக்கவேணும். தமபீ, சிலவிசை உனக்குப் பொல்லாப்பு வராதபடிக்கு உன்னை இரட்சிக்கத்தக்கதாகத் துரைகளுக்குப் பலன் பற்றாது. வியாதி இடிசாவு பில்லி சூனியம இது முதலான பசாசுகளின் தந்திரங்கள் துரைகளுக்குக் கீழ்ப்படியாததினாலே துரைகள் சொன்னபடி அதுகள் கேட்கமாட்டாது. ஆனால் தேவமாதா பூலோகத்துக்கு ஆண்டவளாய் இருக்கிறபடியினாலே பசாசுகள் சாவு முதலான மற்றப் பொல்லாபபெல்லாம் அவளுக்குக் கீழ்படிந்திருக்கின்றது. ஆகையால் அதுகள் அந்த ஆண்டவள் சொன்னபடி கேட்கும். ஆதலால் தேவமாதாவுக்கு இப்படிக்கொத்த பலமும மிகுந்த தயவும் இருக்கிறபடியினாலே நீ மனது பொருந்தி அந்த ஆண்டவளுக்கு அடிமையாய்ப் போகவேணும்.

இதல்லாமல் சர்வேசுரனுடைய அர்ச்சியசிஷ்ட மாதாவே இதோ உம்முடைய சரணமாக ஓடிவந்தோமென்கிற இந்த மந்திரத்தைச் சொல்லி உனக்குப் பழக்கம் வரப்பண்ணவேணும். இந்தப் பழக்கத்தினாலே அடிக்கடி அந்த மந்திரத்தை வேண்டிக் கொள்வதும் அல்லாமல் உனக்கு வருகிற இக்கட்டுகளிலே சுபாவமாய்ச் சொல்ல அது வாயிலே வரும். அந்த மந்திரத்தை நல்ல பத்தியோடே அடிக்கடி சொன்னால் அதைக்குறித்துப் பூலோகத்துக்கு [illegible]

டவள் உன்னை இரட்சிப்பாளென்று அறியக்கடவா யாக.

## ௨௫-ம் சனிக்கிழமைப்

### புதுமையாவது.

ஓர் புண்ணியவதி தன் புருஷனுக்காக
நித்தமுந் தேவமாதாவை வேண்டிக்கொண்ட மட்டும்
அவன் காப்பாற்றப்பட்ட
அற்புதம்.

பிலாந்திறென்கிற இராச்சியத்திலே ஒரு துரை மகனாகிய தெயோதோரிக்கென்கிறவன் இருந்தான். அவன் ஆதம்மாளென்கிற ஒரு பெண்பிள்ளையைக் கலியாணம் பண்ணினான். அவள் நடக்கைக்கும் அவள் புருஷனுடைய நடக்கைக்கும் வெகு தூர வித்தியாசமாயிருக்கும். அதேதென்றால் பெண்சாதி எம்மாத்திரம் புண்ணியவதியாய் இருந்தாளோ புருஷன் அம்மாத்திரம் பாவியாய் இருந்தான். அவன் வெகு ஆங்காரமும் மிகுந்த நிஷ்டூரமுள்ளவனுமாய் இருந்தபடியினாலே அநேகம் பாவங்களைக் கட்டிக் கொண்ட பிற்பாடு அந்தச் சீமையிலே இருந்த அர்ச். மால்த்துறாத் கோவிலையும் அர்ச். அல்தே கோர்ந்தென்கிற கோவிலையுஞ் சுட்டுப்போட்டான். இவன் செய்த இந்தக் கனமான தோஷத்தையும் மற்றப் பாவங்களையும் அறிந்தவர்கள் இந்த மட்டுஞ் சர

வேசுரன் இந்தத் துரைக்கு ஆக்கினையை இடவி ல்லையென்று அதிசயப்பட்டார்கள். ஆனால் அவன் பெண்சாதியினுடைய வேண்டுதலினாலே அந்தமட் டும் அவனுக்கு ஆக்கினை வராமல் இருந்தது.

அதெப்படியென்றால் அந்தப் புண்ணியவதி பூ லோகத்துக்கு ஆண்டவள்பேரிலே மெத்தப் பத்தி யாய் இருந்ததினாலே தினந் தேவமாதாவைக் குறி த்து அறுபது பிறியதத்தமுந்திரம் வேண்டிக்கொ ண்டு வருவாள். இந்த வேண்டுதலின் கடைசியிலே தன் புருஷனுக்காகப் பிரார்த்தித்துக்கொள்ளுவாள். இந்த வேண்டுதலினாலே அந்தமட்டும் அவள் புரு ஷனுக்கு ஆக்கினை வரவில்லையென்று பிற்பாடு அறி யப்பட்டது. அதெப்படியென்றால் அந்தச் சீர்மை யிலே ஒரு காட்டுக்குள்ளே புரோச்சிரேத்தென்கிற ஒரு ரிஷியானவர் தபசு பண்ணிக்கொண்டிருந்தார். இவர் ஒரு நாள் தியானத்திலே இருக்கிறபோது கண்ட தெரிசனமாவது: சம்மனசுகளுடைய இராக் கினியானவள் ஒரு பெரிய ஆண்டவளீ போலே மகா மகிமையோடிருக்க அவள் முன்பாக இரண்டு கன் னியாஸ்திரீகள் ஒரு மன்றாட்டு கேட்டார்கள். இந் தக் கன்னியாஸ்திரீகள் ஆரென்றால் முன் சுட்டுப் போடப்பட்ட இரண்டு கோவிலுக்குங் குறிக்கப்ப ட்ட கன்னியாஸ்திரீகள்தானே. இவர்கள் தேவமா தாவின் சந்நிதியிலே தங்கள் கோயிலைச் சுட்டுப்போ ட்ட துரை பேரிலே முறையிட்டு அவனைத் தெண் டிக்கத் தக்கதாகத் தேவமாதாவை மன்றாடினார்கள். இதற்குப் பூலோகத்துக்கு ஆண்டவள் அவர்களைப் பார்த்துச் சொன்னதாவது: " கன்னியாஸ்திரீகளே, நீங்கள் கேட்கிற மன்றாட்டு ஞாயந்தானே, அந்தத் துரைக்குக் கனமான ஆக்கினை வரத்தக்கதாக அவன் பாத்திரவான்தானே. ஆனால் அந்தத் துரை பெண்

சாதி முகாந்தரமாக இப்போ துரைக்கு ஆக்கினை வரவேண்டாமென்று திருவுளம் பற்றினாள்.

அப்போது கன்னியாஸ்திரீகள் சொன்னதாவது: அந்தத் துரை பெண்சாதிக்குப் புண்ணியங்கள் உண்டானால் அவளுக்கு ஆக்கினை இடாமல் பலன் கொடுக்கவேணும். அந்தத் துரை செய்த பாவங்கள் மெத்த இருக்கிறதினாலே இவனுக்கு ஆக்கினை இடவேணுமென்று விண்ணப்பஞ் செய்தார்கள். அந்தச் சமயத்திலே தேவமாதா திருவுளம பற்றினதாவது: அப்படியே ஆக்கினை வரும, ஆனால் இப்போது வேண்டாம். நீங்கள் பொறுமையாய் இருங்கள். துரை பெண்சாதி நமமைக் குறித்துத் தினம மகா பத்தியோடே பாராக்கில்லாமல் அறுபது பிறிய நத்தமந்திரம் வேண்டிக்கொள்ளுகிறாள். இப்படியிருக்கையிலே அவள் புருஷனுக்கு ஆக்கினை இட்டுச் சாவு வந்தால் அவளுக்குச் சலிப்பு வரும். அப்படி அவளுக்குக் கஸ்திவர நமக்குச் சித்தமில்லையென்று திருவுளம பற்றினாள்.

இதற்குக் கன்னியாஸ்திரீகள் கேட்டதாவது: ஆகிலும ஆண்டவளே அந்தத் துரைக்கு ஆக்கினை இடத்தக்கதாக மெத்தத் தாமதம் பண்ண வேண்டாம் என்று விண்ணப்பஞ் செய்தார்கள். இதற்குச் சம்மனசுகளுடைய இராக்கினியானவள் அவர்களைப் பார்த்து என் மக்களே இந்தக் காரியத்தின் பேரிலே நீங்கள் பேச வேண்டாம். துரைக்கு ஆக்கினை வருகிறதற்குக் காலம் வரும், அந்த ஆக்கினையிலே அப்போது துரை பெண்சாதிக்குக் கஸ்தி வரமாட்டாது, அதெப்படியென்று இனிமேல் தெரியவருமென்று திருவுளம்பற்றினாள். இந்தச் சேதியெல்லாம அவர் தெரிசனத்திலே கண்டார்.

பிற்பாடு என்ன சம்பவித்ததென்று இப்போ வெளிப்படுத்துவோம். இந்தத் துரை அந்தப் புண்ணியவதியைக் கலியாணம் பண்ணின இருபது வருஷமாய்ப் பிள்ளை இல்லாமல் இருந்தார்கள். இதினாலே இரண்டுபேருடைய உறவின் முறையாருக்குஞ் சொல்லக்கூடாத கஸ்தி இருந்தது. இந்தக் காரியத்தின் பேரிலே அவர்கள் யோசனைப் பண்ணுகிறபோது திருச்சபை ஆசாரத்தின் படியே அந்தத் துரை அந்தப் புண்ணியவதியை விவாகம பண்ணுகிறதற்குக் கிட்டின உறவு முகாந்தரமாக விக்கினம் இருந்தது. அந்த விக்கினம முந்தி அறிந்தால் துரை அவளை விவாகம பண்ணக் கூடாது. ஆனால் அப்போ தெரியாததினாலே கலியாணம பண்ணினான். உறவின் முறையார் இது காரியம நன்றாய் விசாரித்த பிற்பாடு கம்பிராயெங்கிற பட்டணத்தின் மேற்றிராணியாரிடத்திற்போய் அந்தக் கலியாணத்துக்கு விக்கினம் உண்டென்று ஞாயத்தோடே சாட்சி ஒப்பித்த பிற்பாடு மேற்றிராணியார் ஒத்துக்கொண்டு அந்தக் கலியாணத்தை மெய்விவாகம அல்லவென்று தீர்த்து அவரவர் மனதின்படி இருக்கக் கட்டளையிட்டார். அந்தப் புண்ணியவதி துரைசெய்த பொல்லாப்பின் முகாந்தரமாக அவன் பேரிலே சுபாவபட்சம் இல்லாதிருந்ததினாலே மேற்றிராணியாரிட்ட இந்தத் தீர்வையினாலே அவளுக்குக் கஸ்தி இருக்கவில்லை.

°

இதல்லாமல் அந்தப் புண்ணியவதிக்கு வேறே கலியாணம் பண்ணுகிறதற்கு மனதில்லாததினாலே சும்மா இருந்து அநேகம் புண்ணியங்களைப் பண்ணிக்கொண்டுவந்தாள். ஆனால் துரையாகிய தெயோதோரிக்கென்கிறவனுக்கு இப்போ சொன்ன தீர்வைக்குப் பிற்பாடு சம்பவித்ததென்னவென்று வெளி

யாக்குவோம். அந்தப் புண்ணியவதி துரைவீட்டைவிட்டுப் போன சில நாளைக்குப் பிற்பாடு துரைக்குப் பொல்லாப்பு வராதபடிக்கு முன்னையைப்போலே அவள் வேண்டிக்கொள்ளாததினாலே துரைசெய்த பாவத்தின் முகாந்தரமாக அவனுக்குக் கனமான ஆக்கினை வந்தது. அதெப்படி என்றால் முன் சொல்லப்பட்ட ரிஷி இருந்த காட்டுக்குள்ளே அந்தத் துரை வேட்டைக்குப் போனான். அவனுக்கு எதிராளியாகிய ஈசாக்கென்கிற வேறே துரை காட்டுக்குள்ளே அவன் போனசெதியறிந்து வெகு படையோடேபோய் அந்தக் காட்டைச் சுற்றிக்கொண்டான். பிற்பாடு இருவருங் கனமான சண்டை செய்கிறபோது தெயோதோரிக்கென்கிற துரைக்குக் கனமான குத்துப் பட்டதினாலே அங்கேதானே செத்தான். முன் சொல்லப்பட்ட அந்தப் புண்ணியவதி அந்தச் சமயத்திலே துரைக்குப் பெண்சாதியாய் இராததினாலே இந்தத் துரை சாவினாலே அவளுக்கு அத்தனை கஸ்தி வரவில்லை.

கிறீஸ்துவர்களே யாதொருத்தன் சமுத்திரத்திலே முத்துக் குளிக்கிறாப்போலே இப்போது கேட்ட புதுமையிலுள்ள ஞான முத்துகளைக் கைக்கொள்ள வேணும். முந்த முந்த அந்தப் புண்ணியவதி அந்தத் துரையை விட்டு எப்போ அப்புறம் போனாளோ அப்போ துரைக்கு அவன் பாவத்தினாலே ஆக்கினை வந்தது. துரை இடத்தில் அவள் இருந்த மட்டும் அவனுக்காகத் தேவமாதாவை வேண்டிக்கொண்டதினாலே, துரைக்குப் பொல்லாப்பு வரவில்லை. இதினாலே நீ இப்போ பூலோகத்துக்கு ஆண்டவனைக் குறித்துச் சனிக்கிழமை ஒருசந்தியாய் இருந்தாலுந் தவம் பண்ணினாலும் பிச்சை கொடுத்தாலும் இது முதலான பற்பல புண்ணியங்களைப் பண்ணினாலும்;

அதைச் சாகுமட்டும் கைவிடாதே. அதேனென்றால் அதை எப்போ கைவிடுவாயோ அப்போ நீ செய்கிற பாவத்தினாலே உனக்குக் கனமான பொல்லாப்பு வருமென்று நினைக்கவேணும். நீ அந்தப் புண்ணியத்தைச் செய்யுமட்டும் மோக்ஷத்துக்கு இராக்கினியுடைய வேண்டுதலினாலே உனக்குப் பொல்லாப்புவராது. அந்தப் புண்ணியத்தைச் செய்யாதிருந்தால் அவளுடைய வேண்டுதலுமுடியும்.

இரண்டாவது. அந்தப் புண்ணியவதி தினந் தேவமாதாவைக் கூபித்து அறுபது'பிறியதத்த மந்திரம் வேண்டிக்கொண்டதினாலே பூலோகத்துக்கு ஆண்டவள் இவள்பேரிலே மெத்தப் பிரியமாய் இருந்தாளென்று சொன்னோமே. அந்தப் பிரகாரமாய் நீ வேண்டிக்கொண்டால் மோக்ஷத்துக்கு இராக்கினியானவள் உன் பேரிலே மெத்தப் பிரியமாய் இருப்பாள்.

மூன்றாவது. முன் சொல்லப்பட்ட புண்ணியவதிக்குக் கஸ்தி வராதபடிக்குத் தேவமாதா விலக்கினாளென்று நீங்கள் கேட்டதினாலே பூலோகத்துக்கு ஆண்டவளுக்குச் சொல்லக் கூடாத நல்ல குணம இருக்கிறதென்று நினைக்கவேணும். கடைசியிலே யாதொருத்தருக்குப் பொல்லாப்பு வராதபடிக்கு உனக்கு ஆசை இருந்தால் அடிக்கடி அவர்களுக்காகத் தேவமாதாவை வேண்டிக்கொள்ள வேணும். அந்த வேண்டுதலினாலே அவர்களுக்குப் பொல்லாப்பு வரத்தக்கதில்லையென்று அறியக்கடவாயாக.



## உகூ-ம் சனிக்கிழமைப்

### புதுமையாவது.



வலஞ்சியன் பட்டணத்துக் கொள்ளை
நோயைத் தேவமாதா ஒழித்த
அற்புதம்.

பிலாந்திரென்கிற சீமையிலே வலஞ்சியனென்கிற பட்டணத்திலே கொள்ளை நோய் வந்ததினாலே அதிலே அநேகம் பேர்கள் இறந்து போனார்கள். இப்படி கொஞ்ச நாளைக்குள்ளே எண்ணாயிரம் பேர்கள் செத்தார்கள். இதினாலே அந்தப் பட்டணத்தில் எங்கும் அழுகையும் பயமும் பிணமும் ஆச்சுது. அந்த நோவு இல்லாதவர்கள் மற்ற வியாதிக்காரர் கிட்ட இராமல் தூரத்திலே போனாலுஞ் சாஸ்திர வயித்தியர் கையில் நல்ல அவுழ்தங்களைச் சாப்பட்டாலும் அந்த வியாதியினுடைய ஆவிகள் ஆகாச மட்டும் போய்ப் பரம்பினதினால் அநேகம் பேர்கள் செத்தார்கள்.

இப்படி இருக்கையிலே அந்தப் பட்டணத்துக்குப் புறத்திலே இருக்கிற தேவமாதாவின் கோயிலிலே தபசு பண்ணிக்கொண்டிருந்த ஒரு ரிஷியானவர் அந்தப் பட்டணத்தார் பேரிலே உள்ள இரக்கத்தினாலே கொள்ளை நோயில் நின்று தேவமாதா அவர்களை இரட்சிக்கத்தக்கதாக இராவும் பகலும் அழுகையோடே சம்மனசுகளுடைய இராக்கினியை வேண்டிக்கொண்டார். அப்போது பூலோகத்துக்கு ஆண்டவள் அவருக்கு மகா பட்சத்தோடே காண்பித்துத் திருவுளம் பற்றினதாவது: அந்தப் பட்டண

த்தார் செய்த பாவத்தினலே அவர்களுக்கு ஆக்கினையாக இந்தப் பொல்லாப்பு வந்தது. ஆனல் அவர்கள் பேரிலே நீ இரக்கமாய் இருந்து வேண்டிக்கொண்டதினலே அந்தப் பொல்லாப்பிலே நின்று நாம் அவர்களை இரட்சிக்கச் சித்தமாய் இருக்கிறோம். இதினலே அவர்கள் செய்ய வேண்டியதாவது: இப்போ கொஞ்ச நாளைக்குள்ளாக வருகிற நாம் பிறந்த திருநாளைக்கு முந்தின நாள் எல்லாரும் ஒருசந்தியாய் இருந்து வேண்டிக்கொள்ளவேணும். அன்றி ராத்திரியிலே தானே ஆகாசத்தில் அவர்கள் அண்ணார்ந்து பார்த்துக்கொண்டிருக்கச் சில ஆச்சரியங்களைக் காண்பிப்போமென்று திருவுளம்பற்றி மறைந்தாள். இந்தச் சேதியை அந்த ரிஷியானவர் அந்தப் பட்டணத்தாருக்கு அறிவித்தவுடனே அவர்கள் மகா சந்தோஷப்பட்டுச் சிறு பிள்ளைகள் முதலாய்ச் சகலரும் அந்தத் திருநாளுக்கு முதல் நாள் ஒருசந்தியாய் இருந்து வேண்டிக்கொண்டு எல்லோரும் அந்த இராத்திரியிலே விழித்திருந்து ஆகாசத்தை நோக்கி அண்ணார்ந்து பார்த்துக்கொண்டிருந்தார்கள். நடுச்சாமத்திலே இருந்தாப்போலே ஆகாசத்திலே பன்னிரண்டு பிரகாசங் காண்பித்தது. அதிலே அநேகமாயிரஞ் சம்மனசுகளாலே சூழப்பட்டவளாக மோக்ஷத்துக்கு இராக்கினி காண்பித்தாள். இந்தக் காட்சியைப் பட்டணத்தார் கண்டு வெகு சந்தோஷப்பட்டு எல்லாருஞ் சாஷ்டாங்கமாக வணங்கினர்கள்.

பிற்பாடு தேவமாதா பூமிக்கிட்டத் தனியே இறங்கிச் சுற்றிலுங் காதவழி தூரமுள்ள அந்தப் பெரிய பட்டணத்தைச் சுற்றிவந்து தம்முடைய திருக்கையிலே இருந்த ஒரு நூலை அந்தப் பட்டணத்துக்குச் சுற்றிலும் பூமிமேலே போட்டு மறைந்தாள். அந்தப் பட்டணத்தாருக்குத் தேவமாதா காணுதே

முறைந்தாலும் முன் சொல்லப்பட்ட ரிஷியானவரு க்குக் காண்பித்துச் சொன்னதாவது: நாளைக்கு நம் முடைய திருநாளல்லவோ. சூரியன் உதயமானவு டனே பட்டணத்தைச் சுற்றிப்போட்ட நூலை அந் தப் பட்டணத்தார் எடுத்தவுடனே கொள்ளை நோய் நீங்கிப் போகுமென்று சொல்லி மோக்ஷ இராச்சியத் துக்கு எழுந்தருளிப் போனாள்.

அந்தப்படியே மறுநாள் ரிஷியானவர் அவர்களு க்கு அறிவித்தவுடனே அந்தப் பட்டணத்தார் எல் லாரும் வெளியிலே புறப்பட்டுத் தேவமாதா தமது திருக்கையினாலே போட்ட நூலை எடுக்கவே அந்தக் கொள்ளை நோய் நீங்கி அதினாலே வந்த சாவு ஒழிந் ததினாலே அவர்கள் எல்லாருந் தேவமாதாவை வெகுவாய்த் தோத்திரம் பண்ணினதும் அல்லாமல் வெள்ளியினாலே அர்ச்.பண்டம் வைக்கிற எத்தனம் போலே வெகு நேத்தியாய் ஒன்று உண்டாக்கி அதி லே தேவமாதா திருக்கைப்பட்ட அந்த நூலை ஸ்தா பித்தார்கள். இது தவிரத் தேவமாதாவுக்குத் தோத் திரமாக வருஷந் தோறும் அவள் பிறந்த திருநா ளிலே அந்தத் திரு நூலை எடுத்துத் தேவமாதா அந் தப் பட்டணத்தைச் சுற்றின வழியே பிரதக்ஷண மாகக் கொண்டுவரத்தக்கதாகக் கற்பித்தார்கள். இப் படியே எழுநூறு வருஷத்துக்கு மேலே இந்தமட் டும் நடத்திக்கொண்டு வருகிறார்கள்.

கிறீஸ்துவர்களே, தோட்டக்காரன் நந்தவனத்தி ல புஷ்பங்களைப் பறிக்கிறாப்போலே இந்தப் புது மையிலே உள்ள ஞான புஷ்பங்களை நீங்கள் கைக் கொள்ள வேணும். முந்த அந்தப் பட்டணத்தார் செய்த பாவத்துக்கு ஆக்கினையாகக் கொள்ளை நோய் வந்ததென்று கேட்டீர்களே. திருச்சபைக்கும் இரா ச்சியத்துக்கும் உங்கள் வீடு முதலான வஸ்துக்களு

க்கும் பொல்லாப்பு வராதபடிக்கு நீங்கள் கனமான பாவங்களைச் செய்யாதிருக்கவேணும். சேசுநாதர் பூலோகத்திலே இருக்கிற போது ஒரு வியாதிக் காரனுக்கு ஆரோக்கியங் கட்டளை இட்டு அவனுக்குத் திருவுளம் பற்றினதாவது: இந்த வியாதியைப் பார்க்க அதிக வியாதி திரும்ப வராதபடிக்கு இனிமேல் நீ பாவஞ் செய்யாதே என்றார். உனக்கு வந்த பொல்லாப்பு ஆகாச குணத்தினாலே வந்ததென்று உலோகத்தாரைப் போல் சொல்லாதே. நீ செய்த பாவத்தினாலே வந்ததென்று சொல்லவேணும்.

இரண்டாவது. முன் சொல்லப்பட்ட ரிஷியானவர் அந்தப் பட்டணத்தாருக்காக வேண்டிக்கொண்டபடியினாலே தேவமாதா அவர்களுக்குச் சகாயம் பண்ணினாள். அந்தப் பிரகாரமாய் யாதொரு ஊரிலே சில புண்ணியவான்கள் இருந்து வேண்டிக்கொண்டால் நல்லதுதானே. உனக்கு வந்த பொல்லாப்பு நீங்கிப் போகத்தக்கதாகப் புண்ணிய ஆத்துமாக்கள் உனக்காக வேண்டிக்கொள்ளும் படியாகப் பிரயாசப் படவேணும்.

மூன்றாவது. அந்தப் பட்டணத்தாரைத் தேவமாதா இரட்சிக்கத் தக்கதாக அவர்களை ஒருசந்தியாய் இருக்கச் சொல்லி ஆண்டவள் தானே கட்டளை இட்டாள். ஆகையால் உனக்கு யாதொரு கஸ்தி வந்த பிற்பாடு அது அநுகூலமாகத் தக்கதாக எவ்வளவாகிலும் ஒருசந்தியாய் இருக்கவும் பிச்சை கொடுக்கவும் நீ பிரயாசப் படவேணும்.

நாலாவது. பூலோகத்துக்கு ஆண்டவள் அந்தப் பட்டணத்தார் பேரிலே இரக்கமாய் இருந்ததுமல்லாமல் தாந்தாமே மோக்ஷத்திலிருந்து இறங்கி அந்தப் பட்டணத்தைச் சுற்றி வந்து தமது திருக்கையினால்தானே நூலைப் போட்டாளென்று கேட்டீர்

களே. இது எல்லாம் நீங்கள் அறிந்து தேவமாதா வினுடைய தயை சமுத்திரம் போலே இருக்கிற தென்று நீங்கள் நினைக்கவேணும். ஆகையால் உங்களுக்கு எந்தெந்தக் கனமான கஸ்தி வந்தாலும் அவநம்பிக்கைப்படாமல், அந்த ஆண்டவளை வேண் டிக்கொள்ளவேணும். இப்படிப் பத்தி நம்பிக்கை யோடே வேண்டிக்கொண்டால் தேவமாதாவின் கிருபையினாலே உங்களை வாதிக்கிற பொல்லாப்பு நீங்குமென்று அறியக் கடவீர்களாக.

## உஎ-ம் சனிக்கிழமைப்

புதுமையாவது.

லுதொவீக்கென்பவன்
தேவமாதாவைக் குறித்துச் சில செபஞ்
செய்தாலும் பாவத்தை விடாததைப்பற்றிக் கடின
வியாதிப்பட்டு அவஸ்தையில் தேவமாதாவின்
ஆரோக்கியம் அடைந்த
அற்புதம்

க்ஸவியா இராச்சியத்திலே அவிஞோனென்கிற பட்டணத்திலே லுதொவீக்கென்கிற ஒருவன் பாவி யாயிருந்து பாவத்தின் வழியிலே நடந்துகொண்டு வந்தாலுஞ் சிறுபோதே துவக்கித் தேவமாதாவின் பேரிலே பத்தியாயிருந்து அவளைக் குறித்துச் சில புண்ணியங்களைச் செய்துகொண்டு வந்தான். இந் தப் புண்ணியத்தின் வழியாகப் பாவத்தை முழுதும்

விடுகிறதற்கு அவனுக்கு நல்ல விசாரம் அடிக்கடி வந்தாலும் இனிமேல் விடுவேனென்று நினைத்துப் பழையபடி நடந்து வந்தான். இப்படி இருக்கை யிலே அவனுக்குப் பாவத்தின் முகாந்தரமாக வியாதி வந்ததினாலே அவன் பிழைக்கிறதற்கு நம்பிக்கை இல்லையென்று சாஸ்திர வயித்தியர் சொன்னார்கள். அப்படி இருக்க அவன் பாவிகளுக்கு அடைக்கல மாகிற தேவமாதாவைப் பார்த்து வேண்டிக்கொண் டதாவது: என் அடைக்கலமே நான் சிறுபோதே துவக்கி இந்த மட்டுந் தேவரீர் பேரிலே நம்பிக்கை யாயிருந்து உமமைக் குறித்துச் சில புண்ணியங்க ளைப் புண்ணிக்கொண்டு வந்தேன். இந்தச் சமயத் திலே உம்மாலே எனக்கு ஆரோக்கியம் வந்தால் பாவத்தை முழுதும் விடத் துணிந்திருக்கிறேனெ ன்று அழுகையோடே வேண்டிக்கொண்டான். அந் தச் சமயத்திலே தேவமாதா அவனுக்குக் காண்பி த்து அவனைக் கோபத்தோடே பார்த்துச் சொன்ன தாவது:

நம்மாலே உனக்கு அநேகம் விசை பாவத்தை விடுகிறதற்கு நல்ல மனது வந்தாலும் நீ இந்தமட் டும் பாவத்தை விடாமல் இப்போ பாவத்தை விடுகி றேனென்று சொல்லுகிற வார்த்தைப்பாட்டை நம் பக்கூடாது. இந்த வார்த்தைப்பாட்டின் அழுகை எல்லாஞ் சாவுக்குப் பயந்து வந்ததல்லாமல் பாவத் துக்குப் பயந்து இப்போது வரவில்லை என்று திருவு ளம் பற்றி மறைந்துபோனாள். இந்த வார்த்தை யைக் கேட்டுப் பயந்து சேசுசபையில் உட்பட்ட ஒரு குருவை அழைப்பித்துச் சிறுபோதே துவக் கிச் செய்த குற்றமெல்லாம் அப்போது அவர் கிட் டப் பாவசங்கீர்த்தனம் பண்ணத் துவக்கினான். இப் படி அவன் பாவசங்கீர்த்தனம் பண்ணுகிறபோது

வியாதி முகாந்திரமாக மயங்கி நினைவில்லாமல் இருந்ததினாலே பாவசங்கீர்த்தனத்தை முழுதும் முடிக்கக் கூடாதே போச்சுது.

இப்படி இருக்கையிலே பின்னேயும் அவன் கண்ட காட்சியாவது: சேசுநாதருந் தேவமாதாவுங் காண்பித்துத் தேவமாதா தம்முடைய திருக்குமாரனுடைய திரு விலாக் காயத்தைத் தமது கையாலே மூடிக்கொண்டிருக்கிறதையும் அவள் பாதத்திலே அர்ச். இஞ்ஞாசியார் தனக்காக வேண்டிக்கொள்ளுகிறதையுங் கண்டான். அப்போது அவன் பேரிலே தேவமாதாவுக்கு உண்டான கோபத்தையும் அவளுடைய கையினாலே ஆண்டவருடைய திரு விலாக்காயம் மூடியிருக்கிறதையுங் கண்டு இவனுக்குப் பயமும் அர்ச். இஞ்ஞாசியார் தனக்காக வேண்டிக்கொள்ளுகிறதினாலே நம்பிக்கையும் வந்தது. அர்ச். இஞ்ஞாசியார் வேண்டிக்கொண்டதாவது: பாவிகளுக்கு அடைக்கலமே தேவரீர் இவனுக்கு ஆரோக்கியங் கட்டளையிட்டால் இவன் பாவத்தை விட்டுப் புண்ணிய வழியிலே நடக்க நான் இவனுக்குப் பிணையாய் இருப்பேனென்று வேண்டிக்கொண்டது இவன் காதிலே விழுந்தது. அப்போது மோக்ஷத்துக்கு இராக்கினியானவள் அர்ச். இஞ்ஞாசியார் வேண்டுதலினாலே தமது திருமுகத்திலே இருந்த கோபத்தை விட்டுப் பட்சத்தோடே வியாதிக்காரனைப் பார்த்து நம்மாலே உனக்கு ஆரோக்கியம் வந்தால் அந்த ஆரோக்கியத்தைக்கொண்டு நீ என்ன செய்வாயென்று கேட்டாள். இதற்கவன் பயந்து அழுகையோடே அர்ச். இஞ்ஞாசியாரைக் காண்பித்து என் ஆண்டவளே இந்த அர்ச்சியசிஷ்டவர் என்ன சொன்னாரோ அந்தப் பிரகாரமாய்த் தப்பாமல் செய்வேனென்று சொன்னான். பிற்பாடு தேவமாதா தமது திருக்

குமாரன் வியாதியின் காயத்துக்குள்ளே கையை யிட்டு அதின் திருவிரத்தத்திலே எடுத்து வியாதி யாய் இருக்கிறவன் பேரிலே பூசுகிறாப்போலே கண் டபிறபாடு அந்தத் தெரிசனங்களெல்லா மறைந்து போச்சுது. அவஸ்தையாய் இருந்த லூதொவீக்கெ ன்கிறவன் இருந்தாப்போலே புதுமையாக உடனே ஆரோக்கியம் அடைந்தான்.

இவன் முன் கொடுத்த வார்த்தைப்பாட்டைச் செலுத்தத் தக்கதாகப் பாவத்தை முழுதும் விட்டுச் சாகிறவனாயில் புண்ணிய வழியிலே நடந்ததும் அ ல்லாமல் தேவமாதாவையும் அர்ச். இஞ்ஞாசியாரை யுந் தோத்திரம் பண்ணி முன்னையைப் பார்க்க ஆண்டவள் பேரிலே அதிக பத்தியாய் இருந்தான். இதை மறவாதபடிக்குத் தேவமாதாவின் சுரூபம் அல்லாமல் அர்ச். இஞ்ஞாசியார் சுரூபத்தையுந் தன் வீட்டிலே ஸ்தாபித்தான்.

கிறீஸ்துவர்களே ஒரு தோப்பிலே எசமான நல்ல கனிகளைப் பறிக்கிறாப்போலே இந்தப் புதுமையி லுள்ள ஞானக் கனிகளை எடுக்கவேணும். முந்த முந்தப் பூலோகத்துக்கு ஆண்டவள் அர்ச். இஞ்ஞா சியார்பேரில் மெத்தத் தயை பட்சமாய் இருக்கிறு ளென்று நீங்கள் நினைக்கவேணும். இந்த நினைவு பலக்கத்தக்கதாக முன்னே நீங்கள் கேட்ட சேதியல் லாமல் பின்னையும் ஒரு சேதியைக் கேளுங்கள். ஒரு பெண்பிள்ளைமேலே வந்த பசாசு கட்டாயமாய் அவளை விட்டுப் போகிறபோது சொன்னதாவது: இஞ்ஞாசியாரென்கிறவர் நமக்கு விரோதமான தேவ மாதாவின் பேரிலே பத்தியாய் இருக்கிற முகாந் தரம் அவன் கட்டாயத்தினுலே நான் இவளை விட் டுப் போகிறேனென்று சொல்லி ஓடிப்போச்சுது. ஆகையால் நீங்கள் யாதொரு மன்றாட்டுக் கேட்க

வேணுமானால் அர்ச். இஞ்ஞாசியார் பேரிலே பத்தியாய் இருந்து அவர் வழியாகத் தேவமாதாவைக் கேட்டால் காரியம் அநுகூலமாகும். நீங்கள் செய்த பாவங்களினாலே தேவமாதாவுக்கு உங்கள் பேரிலே இருக்கிற கோபம் அமரத்தக்கதாகப் பூலோகத்துக்கு ஆண்டவள் அந்த அர்ச்சியசிஷ்டவர் பேரிலே மெத்தத் தயை பட்சமாய் இருக்கிறாளென்று விசாரித்து அவர் வழியாகத் தேவமாதாவின் கோபத்தை அமர்த்தவேணும்.

உ-வது. அவரவர் தேவமாதாவைப் பார்த்துச் செய்கிற புண்ணியங்களுக்குள்ளே [illegible]த்தை விட்டு மனந் திரும்புகிற புண்ணியத்தின் பேரிலே தேவமாதா மெத்த விருப்பமாய் இருக்கிறாளென்று அறிந்து அந்தப் பிரகாரம நடக்கவேணும். ஆனால் தம்பி நீ பாவியாயிருந்தாலுந் தேவமாதாவைக் குறித்துச் செய்கிற புண்ணியத்தை விடாதே, அந்த வழியாக உனக்கு நன்மைவரும்.

மூன்றாவது. இந்தப் புதுமையிலே சொல்லப்பட்ட வியாதிக்காரன் தன் பாவத்தினாலே தேவமாதா தன் பேரில் கோபமாய் இருக்கிறதை அறிந்து தனக்கு ஆரோக்கியம் வந்தவுடனே பாவத்தை முழுதும் விட்டுப் புண்ணிய வழியிலே நடந்தான். நீ முழுதும் பாவத்தை விடாதிருக்கிற முகாந்தரத் தேவமாதா உன் பேரிலே மனத்தாங்கலாய் இருக்கப்பண்ணுகிறதற்குச் சந்தேகமில்லை என்கிறதினாலே பாவத்தைவிடவேணும். அவளுடைய மனத்தாங்கல் இருந்தால் நீ பிழைக்கிறதெப்படி? அந்த ஆண்டவள் உன்பேரில் தாங்கலில்லாமல் பட்சமாய் இருந்தால் எல்லாப் பாக்கியமும் வருமென்று அறியக்கடவாயாக.

# உ,அ-ம் சனிக்கிழமைப்

புதுமையாவது.



தேவமாதாவின் தயவினாலே
சொஸ்தமான ஒரு குஷ்டரோகி தான்
காணிக்கையாகக் கோவிலுக்கு அனுப்பின பணத்தினாலே
ஆரோக்கியம் வாங்கினேனென்றதினால்
னுக்கு வந்த
ஆக்கினை.

இத்தாலியாவென்கிற இராச்சியத்திலே கியேத்தியென்கிற பட்டணத்திலே கடன் கொடுத்து அநியாய வட்டி வாங்கின ஒரு ஆஸ்திக்காரன் இருந்தான். இவன் செய்த அநியாயத்தினாலே, எல்லாரும் அவன் பேரிலே ஆவலாதி சொல்லுவார்கள். அவன் செய்த அநியாயத்தை விடுவிக்கிறதற்கு அவனுக்குக் குஷ்ட வியாதி வர ஆண்டவர் சித்தமானார். அந்த வியாதி தீரத்தக்கதாக நல்ல வயித்தியருக்கும மருந்துகளுக்கும் அநேகம் பொன் செலவழித்தாலுங் குணமாகவில்லை. இதினாலே தேவமாதாவின் வழியாகத் தனக்கு ஆரோக்கியம் வரவேணுமென்று தான் தேவமாதாவின் கோயிலுக்குப் போகக் கூடாதவனானபடியினாலே ஒரு பையிலே நூறு பொன்னைக் கட்டி நம்பிக்கையுள்ள ஊழியக்காரன் கையிலே கொடுத்து லொரேத்து மாதாவின் கோயிலுக்கு அனுப்பி அந்தப் பணத்தை அங்கே காணிக்கையாகக் கொடுத்துத் தனக்காக வேண்டிக்கொண்டு வரச் சொல்லிக் கட்டளையிட்டான். அந்தப் பிரகாரத்துக்கு அந்த ஊழியக்காரன் இரண்டு மூன்று நாள்

பயணமாயிருக்கிற கோயிலுக்குப் போய்க் காணிக்கை கொடுத்துத் தன் எசமானுக்காக வேண்டிக்கொண்டான். பூலோகத்துக்கு ஆண்டவள் வியாதிக்காரருக்கு ஆரோக்கியமாய் இருக்கிறபடியினாலே அந்த ஊழியக்காரன் அங்கே எந்த நேரத்திலே வேண்டிக்கொண்டானோ அந்த நேரத்திலே புதுமையாகத் தேவமாதாவின் கிருபையினாலே எசமானுக்கு ஆரோக்கியம் வந்ததினாலே எல்லாரும் ஆச்சரியப் பட்டார்கள். அவனுடைய உறவின் முறையார் சிநேகிதர் இந்தச் சந்தோஷத்தைக் கேட்டு இவனைச் சந்திக்க வந்தார்கள்

அந்தச் சமயத்திலே வந்தவர்களுக்குள்ளே அவனுக்கு மெத்தச் சிநேகமாய் இருந்த ஒருவன் ஆரோக்கியம் பெற்றவனைப் பார்த்துச் சொன்னதாவது: தேவமாதாவின் தயவினாலே உனக்கு ஆரோக்கியம் வந்தது. திரும்ப அந்த வியாதி உனக்கு வாராதபடிக்கு இனிமேல் நீ நன்றியறிந்து நடக்கவேணும். அதாவது: முன்னையைப்போலே நீ இனிமேல் அநியாயமாய் வட்டி வாங்காமல் அந்தப் பாவத்துக்குப் பயந்து நடக்கவேணுமென்று சொன்னான். இந்த வார்த்தையை அவன் கேட்டுச் சிரித்துக்கொண்டு இது கனமான பொல்லாப்பென்று நீ நினைத்தால் பயித்தியக்காரன்தானே. அதேதென்றால் தேவமாதாதானே இப்படிச் செய்தாள். அதாவது: நான் நூறு பொன் கொடுத்து அனுப்பினதினாலே எனக்கு இந்த ஆரோக்கியம் வந்தது. அனுப்பாமலிருந்தால் வரத்தக்கதில்லை. ஆகையால் இந்த ஆரோக்கியம் நான் விலைக்கு வாங்கினேனென்று பரியாசம்போலே சொன்னான். அவன் இந்தத் தேவதூஷணஞ் சொன்னவுடனே எல்லாரும் அவனைக் கோபித்துக்கொண்டு அவனைவிட்டு அப்புறம் போனார்கள். இது கண்டு

அவன் தான் சொன்னது பொல்லாப்பென்று நினை,த்துச் சலிப்பாய் இருந்ததினாலே அன்றிராத்திரி சாப்படாமற் படுத்துக்கொண்டான். கொஞ்ச நேரம நித்திரை போன பிற்பாடு தன்பேரிலே நெருப்பு விழுந்தாப்போலே கஸ்தியினாலே விழித்துக்கொண்டு அழத் துவக்கினான். அந்த அழுகைச் சத்தத்தை அவன் பெண்சாதியும் மற்றவர்களும் கேட்டு அவன் கிட்டப் போனவுடனே முந்தி நீங்கிப்போன குஷ்டவியாதி மறுபடியும் அவன் சரீரத்திலே இருக்கிறதைக் கண்டார்கள். அப்போது எல்லாருக்கும பயமும் விய[illegible]னுக்குக் கஸ்தியுமாச்சுது.

அப்போது அந்த வியாதிக்காரன் இடுப்பிலே ஒரு கொள்ளிக்கட்டையாலே சுடுகிறாப்போலே மெத்த வருத்தமாய் இருக்குதென்று சொல்லி அழுதான். அவன் பெண்சாதி அது என்னவென்று அவன் இடுப்பிலே கையினாலே தொடுகிறபோது அதில் ஒரு பை இருக்கிறதைக் கண்டு அதை எடுத்து அவிழ்த்துப் பார்த்தாள். பார்க்கிறபோது அவன் முந்தித் தேவமாதாவின் கோவிலுக்கு அனுப்பின நூறு பொன்னும் அந்தப் பையின் அடையாளமுஞ் சரியாய் இருந்தது. வியாதிக்காரன் இதைக் கண்டு ஐயையோ, தேவமாதா என்பேரிலே மனத்தாங்கலானபடியினாலே நான் கொடுத்த பணந் திரும்பவும என்னிடத்தில் வந்ததென்று சொல்லிச் சாகிறேன், சாகிறேனென்று கூப்பிட்டு நரகத்துக்குப் போகிறேனென்று அலறிப் பாவசங்கீர்த்தனம் இல்லாமல் செத்தான். அந்தப் பட்டணத்தார் இந்தச் சேதி அறிந்து அவன் தேவமாதாவின் பேரிலே சொன்ன தூஷணமென்கிற பாவத்தினாலே இந்த ஆக்கினை அவனுக்கு வந்ததென்று சொல்லி அவர்களும் பயந்திருந்தார்கள்.

கிறீஸ்துவர்களே, சமுத்திரத்திலே முத்துகள் குளிக்கிறாப்போலே இந்தப் புதுமையிலுள்ள ஞான முத்துகளைக் கைக்கொள்ளவேணும். முந்த முந்த ஆஸ்திக்காரன் அநியாய வட்டி வாங்குகிற பாவத்தைக் கட்டிக்கொண்டபடியினாலே அதற்கு ஆக்கினையாகக் கனமான குஷ்ட வியாதி வந்ததென்று கேட்டீர்களே. இதினாலே நீங்கள் பாவத்துக்குப் பயந்து நடக்கவேணும். கிறீஸ்துவர்களுக்குள்ளே சிலர் அநியாய வட்டிக்காகக் கடன் கொடுப்பார்கள். ஆனால் அந்த ஆஸ்திக்காரனுக்குப் பொல்லாப்பு வந்தாப்போலே இவர்களுக்கும் வருமென்று பயப்படக்கடவார்கள்.

இரண்டாவது. அந்த ஆஸ்திக்காரன் மதவமாதாவின் பேரிலே சொன்ன தூஷண வார்த்தைகளினாலே கனமான ஆக்கினை அவனுக்கு வந்ததென்று நினைத்துச் சர்வேசுரன் பேரிலேயுந் தேவமாதாவின் பேரிலேயும் மற்ற அர்ச்சியசிஷ்டவர்களின் பேரிலேயும் விளையாட்டுப்போலே பரியாச வார்த்தைகளைச் சொல்லாதேயுங்கள். அது தேவ தூஷணமாய் இருக்கும். சில கிறீஸ்துவர்கள் ஒரு கஸ்தி முகாந்தரமாகச் சர்வேசுரனுக்குக் கண்ணில்லையோ? இப்படிப் பார்த்திருக்கலாமோ? இரக்கம் இல்லையோ? இந்த நிஷ்டூரம் உண்டோவென்று அநியாயமாய்ச் சொல்லுவார்கள். அப்படிப்பட்டவர்கள் அந்த வார்த்தை சொன்ன நாக்கு அறுக்கப்படுகிறதற்குப் பாத்திரவான்கள்தானே.

மூன்றாவது. அந்த ஆஸ்திக்காரனுக்குத் தேவமாதா ஆரோக்கியங் கொடுத்திருந்தாலும் நன்றியறியாதவனாய்ப் போனான். இப்படியே சில பேர்கள் நடப்பார்கள். அதெப்படியென்றால் அந்தந்தக் கஸ்தி நீங்கிப்போகத்தக்கதாகத் தேவமாதா முதலாகிய

அர்ச்சியசிஷ்டவர்களைக் குறித்து எத்தனை வார்த்தைப்பாடு, எத்தனை அழுகையோடே செய்த வேண்டுதல், கோயிலுக்குப் போகிறது எத்தனை விசையென்று கணக்கில்லை. ஆனால் காரியம் அநுகூலமான பிற்பாடு சொன்ன வார்த்தைப்பாட்டைச் செலுத்தாமல் நன்றியறியாதவர்களாய்ப் போகிறார்கள். அப்படிக்கொத்த மனுஷர் பேரிலே தேவமாதா மனத்தாங்கலாய் இருக்கிறதினாலே பிற்பாடு அவர்களுக்குத்தானே வருகிற வேறே பொல்லாப்பில் நின்று தேவமாதா இரட்சிப்பாளென்கிற நம்பிக்கை எப்படி வரும்? இதினாலே நீங்கள் தேவமாதாவைக் கேட்ட மன்றாட்டு வந்தவுடனே சொன்ன வார்த்தைப்பாடு செலுத்துகிறதும் அல்லாமல் அந்த ஆண்டவளுக்கு வாக்கினாலேயுங் கிரியையினாலேயும் நன்றியறிந்து நடக்கக்கடவீர்களாக.



## உகூ-ம் சனிக்கிழமைப்

புதுமையாவது.



### தேவமாதாவின் அடைக்கலத்திலே வைக்கப்பட்ட தாயும் மகளுங் காப்பாற்றப்பட்ட அற்புதம்.

அலெக்சாந்திரியென்கிற பட்டணத்திலே புண்ணியவான்களான தாய் தகப்பன் மகளாகிற மூன்று பேர் இருந்தார்கள். இவர்கள் தேவமாதாவின் பேரிலே மெத்தப் பத்தியாயிருந்து அநேக வகைத் தர்

மங்களைச் செய்துகொண்டு வந்தார்கள். இவர்களுக் குள்ளே தகப்பனானவன் ஒரு காரிய நிமித்தமாகக் கொனஸ்தாண்டிநோப்பொலியென்கிற பட்டணத் துக்குப் போகப் பயணமாய் இருக்கிற சேதி அவன் பெண்சாதி அறிந்து புருஷனோடே சொன்னதா வது: நீர் தூர பயணம் போகிறபடியினாலே என் னையும் பிள்ளையையும் ஆரிடத்தில் ஒப்புக்கொடுத் துப்போகிறீர். யாதொரு அவசரம் உண்டானால் எங்களை விசாரிக்கிறதாரொன்று அழுதுகொண்டு கேட்டாள். அப்போது புருஷன் சொன்னதாவது: நம்முடைய வீட்டிலே இருக்கிற இந்தக் கிழவனான வன் நம்பிக்கை மனுஷனாய் இருக்கிறதும் அல்லாமல் உங்களைத் தேவமாதாவின் திருக்கையிலே ஒப்புவி த்து நானுந் தேவமாதாவை வேண்டிக்கொள்ளுவே னென்றும் அந்த ஆண்டவள் உங்களுக்குப் பொல் லாப்பு வராதபடிக்கு இரட்சிப்பாளென்றும் நீயும் இந்தப் பிள்ளையுந் தினந் தேவமாதாவைப் பிரார்த் தித்துக்கொள்ளுங்கள் என்றுஞ் சொல்லி அவன் பயணம் போனான்.

வீட்டிலே இருந்த முன் சொல்லப்பட்ட ஊழி யக்காரன் எப்போதும் நம்பிக்கை மனுஷனாயிருந் தாலும் இந்தச் சமயத்திலே பசாசின் தந்திரத்தி னாலே அவனுக்கு வந்த விசாரமாவது: இப்போ எசமான் அப்பாலேபோய் இருக்கிறதினாலே இந்த வீட்டிலே இருக்கிற ஆஸ்தியெல்லாம் நான் எடுத் துக்கொண்டு வேறே சீமைக்கு ஓடிப்போய்ப் பிழை ப்பேன். இதற்கு எசமான் பெண்சாதியும் பிள்ளை யும் விக்கினம் பண்ணாதபடிக்குத் தாயையும் பிள்ளை யையுங் கொன்றுபோட நினைத்தான். இதினாலே அந்த ஊழியக்காரன் சமையல் வீட்டிலே இருந்த ஒரு சூரிக்கத்தியை எடுத்துக்கொண்டு தாயும் பிள்

ளையுமிருக்கிற மேல்வீட்டிலேறி அவர்கள் இருக்கிற அறையிலே சேர்ந்தான். ஆனால் எசமான் ஊருக்குப் போகிறதற்கு முன்னே தன் பெண்சாதிக்கும் பிள்ளைக்கும் பொல்லாப்பு வராதபடிக்குப் பூலோகத்துக்கு ஆண்டவளிடத்தில் ஒப்புக்கொடுத்தபடியினாலே அந்த ஆண்டவள் இந்தச் சமயத்திலே அவர்களுடைய ஊழியக்காரன் நினைத்த பொல்லாப்பு வராதபடிக்குச் சகாயமாயிருந்தாள்.

அதெப்படியென்றால் முன் சொன்ன துரோகியான ஊழியக்காரன் அவர்களைக் கொல்லத்தக்கதாக அறை வாசற்படியிலே நிற்கிறபோது காண்பியாத ஒரு கையினாலே தள்ளப்பட்டுக் கீழே விழுந்ததும் அல்லாமல் இரண்டு கண்ணுந் தெரியாதவனாய்ப் போனான். அவன் திரும்ப, எழுந்திருந்து வெறி கொண்டவனைப்போலே காலுபக்கமுந் தடவிக்கொண்டு திரிந்து அறைக்குள்ளே போகப் பிரயாசப்படுகிற சத்தத்தை உள்ளே இருக்கிற தாயும் மகளுங் கேட்டு ஆரங்கேயென்று கூப்பிட்டுக் கேட்டதற்கு அவன் திரும்பவும் இங்கே வாருங்களென்று சொன்னான். இந்த வார்த்தையை அவர்கள் கேட்டு என்னமோ தெரியவில்லையென்று சட்டைபண்ணாமல் இருந்தார்கள். இரண்டாவது. அந்த ஊழியக்காரன் இங்கே வாருங்களென்று கூப்பிட்ட படியினாலே அந்தப் புண்ணியவதி சொன்னதாவது: வெறி கொண்டவனைப்போலே ஏன் கத்துகிறாய், உனக்கு அவசரக்காரியம் உண்டானால் இங்கே வந்து சொல்லென்றாள். இந்த வார்த்தையை அவன் கேட்டுக் கோபத்தினாலேயும் வெட்கத்தினாலேயுந் தன் கையிலே இருந்த சூரிக்கத்தியினாலே தன்னைத்தானே மகா கோபத்தோடே நெஞ்சிலே குத்திக்கொண்டு ஏராளமாய்ச் சிந்திக்கிடந்த இரத்தத்திலே தானே விழுந்து

அழுதான். அந்தச் சத்தத்தை உள்ளே இருக்கிற தாயும் பிள்ளையுங் கேட்டு வெளியிலேவந்து அந்தக் காயத்தையும் இரத்தத்தையுங் கண்டு ஆச்சரியத் தோடே கஸ்திப்பட்டதும் அல்லாமல் அரண்மனை யார் இந்தச் சேதி அறிந்து அந்தக் குற்றங்களை ஆர் பேரிற் சாட்டுவார்களென்று மெத்தப் பயந்திருந் தார்கள். ஆனால் தேவமாதா இந்தப் பொல்லாப்பில் நின்று அவர்களை இரட்சித்தாள்.

அதெப்படியென்றால் இந்தச் சேதி புறத்தியிலே இருக்கிற சிலபேரும் அரண்மனையாரும் அறிந்து பார்க்க வந்தார்கள். இது ஆர் இட்டீர்க் குத்தினதெ ன்று அவனைக் கேட்கிறபோது அவன் தான் நினைத்த துரோகத்தையும் நடந்த மற்றச் சேதி எல்லாத்தை யுஞ் சொன்ன பிற்பாடு பாவசங்கீர்த்தனம் இல் லாமல் அங்கேதானே செத்தான். அரண்மனையார் வழியாக அந்தப் புண்ணியவதிக்கு ஒரு பொல்லாப் பும் வரவில்லை.

அவனுடைய பிரேதத்தைக் கல்லறையிலே வை த்த பிற்பாடு அந்தப் புண்ணியவதியாகிய தாயும் பிள்ளையும் அந்த அறையிலே இருக்கிற தேவமாதா வின் சுரூபத்து முன்பாகச் சாஷ்டாங்கமாக விழு ந்து பூலோகத்துக்கு ஆண்டவள் இந்தப் பொல்லா ப்பில் நின்று தங்களை இரட்சித்ததினாலே மிகுந்த தாழ்ச்சியோடே தோத்திரம் பண்ணினார்கள். இதல் லாமல் தன்னுடைய புருஷன் வந்த பிற்பாடு அவள் நடந்த சேதி எல்லாஞ் சொல்லவே இருவருந் தேவ மாதாவை மன்றாடினார்கள். இதினாலே இந்த மூன்று பேரும் முன்னையிற் பார்க்கத் தேவமாதாவின் பேரிலே பத்தி நம்பிக்கையாய் இருந்தார்கள்.

கிறீஸ்துவர்களே, எசமான் தன் நந்தவனத்திலே நல்ல புஷ்பங்களை எடுக்கிறாப்போலே இந்தப் புது

மையிலுள்ள ஞான புஷ்பங்களைக் கைக்கொள்ளவே ணும். முந்த முந்தப் பொல்லாப்புச் செய்கிறவர்க ளுக்குப் பொல்லாப்பு வருகிறதே அல்லாமல் நன் மை வராதென்று கெட்டியாய் நீங்கள் அறியவே ணும். இதினாலே பொல்லாப்புச் செய்கிற பாவத்து க்கு நீங்கள் பயந்து நடக்கவேணும். அதற்குப் பயப் படாமல் இருந்தால் நாம் இப்போது சொன்ன புது மையிலே பொல்லாப்புச் செய்ய நினைத்த ஊழியக் காரனுக்குச் சம்பவித்தாப்போலே உங்களுக்குஞ் சம்பவிக்கும்.

இரண்டாவது. தம்பி மனுஷர்பேரில் உன்னுடைய நம்பிக்கை எல்லாம் வைக்கவேண்டாம். அதேதெ ன்றால் இந்தப் புதுமையிலே இந்த ஊழியக்காரன் நம்பிக்கை மனுஷனென்று நினைத்து அந்த எசமான் அவனை வீட்டிலே வைத்து விட்டுப் பயணம்போ னான். ஆனால் அவனுடைய வழியாகத்தானே எச மான் பெண்சாதிக்கும், பிள்ளைக்கும் கிடின பொல் லாப்பு வருகிற தறுவாயாச்சுது. இதினாலே இந்த எசமான் நினைத்த காரியத்திலே மோசம் வந்தாப் போலே உனக்கும் வாராதபடிக்கு மனுஷர்பேரிலே உன்னுடைய நம்பிக்கையெல்லாம் வைக்கவேண் டாம்.

மூன்றாவது. அந்த எசமான் அப்பாலே போகிற தற்குமுன்னே தன்னுடைய குடும்பத்தை வேண்டி தல் வழியாகத் தேவமாதாவின் கையிலே ஒப்பித் ததினாலே அவர்களுக்குப் பொல்லாப்பு வரவில்லை யென்று இப்போ நீங்கள் கேட்டதினாலே அந்த எசமான் செய்தபடி நீங்களுஞ் செய்யவேணும். இத ற்கு அர்த்தமேதென்றால் நீங்கள் பயணம் போகிற தற்குமுன்னே உங்களுக்கும் உங்கள் குடும்பத்து க்கும் பொல்லாப்பு வாராதபடிக்கும் நீங்கள் நினைத்த

காரியம் அநுகூலமாகுமபடிக்கும் அந்தக் காரியந் துவக்குகிறதற்கு முன்னே தேவமாதாவை வேண்டிக்கொள்ள வேணும். இப்படி வேண்டிக்கொண்டால் பூலோகத்தின் ஆண்டவளுடைய உதவியினாலே உங்கள் காரியம் அநுகூலமாகும். இப்படியே சிந்து தேசத்துக்கு அப்போஸ்தலரான அர்ச். சவேரியார் எந்தெந்தக்காரியந் துவக்குகிறதற்கு முன்னே அந்தக் காரியம் அநுகூலமாகத் தேவமாதாவைத் தமக்கு மன்றாடுகிறவளாக நம்பிப் பத்தியோடே வேண்டிக்கொண்டு தேவமாதாவின் ஆசீர்வாதத்தைக் கேட்பார். இதினால், அவருடைய காரியம் எப்போதும் அநுகூலமாகும். விசேஷமாய் அவர் பொங்கோ என்கிற இராசாவின் அரண்மனையிலே போகிறபோது அந்தப் பெரிய ஆண்டவளை மன்றாடினதும் அல்லாமல் அந்த ஆண்டவளுடைய வெகு நேத்தியான சுரூபத்தை அங்கே கொண்டுபோனார். உலோகத்து இராசாக்கள் வேதங் கேட்கிறது கடினமாய் இருந்தாலும் அர்ச். சவேரியாருடைய வேண்டுதலின்பேரில் தேவமாதா அந்தக் காரியத்துக்கு ஆசீர்வாதம் பண்ணினதினாலே கடைசியிலே இந்த இராசா சர்வேசுரனுடைய வேதங் கேட்டானென்று அறியக்கடவீர்களாக.



# ௲ய-ம் சனிக்கிழமைப்

புதுமையாவது.

பாதகனுன ஒருவன் தேவமாதாவை விடாமல்
நித்தமும் வேண்டிக்கொண்டதினுல் அவன்
தீர்வையிடப்பட்ட சாவினின்று
இரட்சிக்கப்பட்ட
அற்புதம்.

உத்திராதி இராச்சியத்திலே உயர்ந்த கோத்திரத்திலே பிறந்த ஒரு கைம்பெண்சாதியும் அவளுடைய குமாரனும் இருந்தார்கள். தாயானவள் தேவமாதாவின் பேரிலே பத்தியாய் இருந்து புண்ணிய வழியிலே நடக்கிறுப்போலே மகனும் அப்படியே நடக்க அடிக்கடி அவள் புத்தி சொன்னதினுலே அவனும் அந்தப் பிரகாரமாய் நடந்துகொண்டு வந்தான். அவளுடைய புருஷன் பெரிய துரைகிட்ட ஒரு காரியக்காரனுய் இருந்தான். துரை அவன்பேரிலே மெத்தப் பட்சமாய் இருந்ததினுலே அந்த உத்தியோகத்திலே அவன் மகனை வைக்கிறதற்கு அவன் சம்மதியாய் இருந்தான். மகனும் அதற்குச் சம்மதித்து அந்தத் தொழிலிலே போகிறபோது தாயார் அவனிடத்திற் சொன்னதாவது: என் குமாரனே நான் சொன்னபடி செய்ய நீ வார்த்தைப்பாடு கொடுத்தால் ஒரு காரியம் உனக்குச் சொல்லுவேனென்று சொன்னுள். அப்போது அவன் நீர் கட்டளையிட்டபடி கேட்கிறேனென்று சொன்னுன். தாயானவள் தம்பி, நீ தினந் தினந் தேவமாதாவைக் குறித்துப் பத்தியோடே ஒரு பிரியதத்தமந்திரம் வேண்டிக்கொள்ளுகிறதும் அல்லாமல் தேவமாதா

வை நான் சாகிற சமயத்திலே அடியேனுக்குத் தயையாய் இருமென்று வேண்டிக்கொள்ளென்று சொன்னாள். மகன் அப்படியே தாய் சொன்ன பிரகாரத்துக்கு அன்று துவக்கித் தினந் தினந் தப்பாமல் சாகுமட்டும் வேண்டிக்கொண்டுவந்தான்.

இப்படி அரண்மனையிலே சேர்ந்த பிற்பாடு துரை அவன் பேரிலே மெத்தப் பட்சமாயிருந்து தகப்பன் சேவித்தாப்போலே அவனையுஞ் சேவிக்கச் சொல்லிக் கட்டளையிட்டான். ஆனால் அந்த அரண்மனையிலே சில பேர்கள் துர்ப்புத்திக்காரராய் இருந்தபடியினாலே இந்தக் கம்பெண்சாது மகன் மெள்ள மெள்ள அவர்களோடேகூடி முன் நடந்த புண்ணிய வழியை விட்டுப் பாவ வழியிலே பழகி முந்த முந்தக் காம பாவத்திலே விழுந்தான். இதினாலே அவனுடைய ஆவலாதி அநேகம் பேர்கள் அறிந்ததல்லாமல் துரை காதிலேயும் விழுந்தது. துரை அவனை அழைத்து: உன் தகப்பனைப்போலே புண்ணிய வழியிலே நடவாமல் நீ ஏன் இத்தனை ஆவலாதிக்கு இடமாய்ப் பாவ வழியிலே நடந்தாயென்று கண்டித்துப் புத்தி சொன்னான். துரை சொன்ன புத்தியை அவன் கேளாததினாலே அரண்மனையை விட்டதின் மேல் துரை அவனை அப்புறம் போகச் சொன்னான்.

பிற்பாடு அவன் வெட்கப்பட்டுத் தாயிடத்திற் போகாமல் காட்டுக்குள்ளே போய்க் கள்ளரோடே கூடிக் கள்ளருக்கெல்லாங் காரியக்காரனாய்ப் பெரிய கள்ளனாயிருந்தான். அந்தக் கள்ளர் செய்த கொலை பாதகம் மெத்தவானதினாலே இது துரை காதிலே விழவே சில சேவகரை அனுப்பிப் பிடிக்கச்சொன்னபோது அப்படியே அவர்கள் காட்டுக்குள்ளே கள்ளரோடே சண்டைகொடுத்துக் காரியக்காரனைப் பிடித்தார்கள். அவனைப் பிடித்துக்கொண்டுவந்து துரை

கிட்ட விட்டவுடனே எல்லாரும் அவனுடைய குற்றம் அறிந்த படியினாலே துரை அவன் கழுத்திலே கயிறுபோட்டுத் தூக்கிக் கொன்றுபோடச் சொல்லிக் கட்டளையிட்டான். அவன் இந்தச் சேதியறிந்து நாளைக்குத் தனக்கு வருகிற அவமான சாவை நினைத்து அழுதுகொண்டிருக்கிறபோது ஒரு பசாசு மனுஷரூபமாகக் காவற் கூடத்திலே அவனுக்குக் காண்பித்துச் சொன்னதாவது: லூசிப்பேரென்கிற சோதியுடைத்தான என்னுடைய துரை நீ படுகிற கஸ்தி அறிந்து என்னை உன்னிடத்தில் ஸ்தானாபதியாக அனுப்பினான். அவனை சொன்னபடி நீ கேட்டால் இந்தக் காவலை விட்டுப் போவாயென்றதற்குக் காவலிலே இருக்கிறவன் என்ன செய்யவேணுமென்று கேட்டான். அப்போது பசாசு சொன்னது: நீ பாவியாயிருக்கிறாயே, நீ தினந்தினம் மரியாயியென்கிறவளைக் குறித்து ஒரு பிறியதத்தமுஞ் சில மந்திரமும் வேண்டிக்கொள்ளுகிறதையும் அவள் பேரிலுள்ள பத்தியையும் விட்டுவிட்டால் உன்னை இரட்சிப்பானென்று சொல்லிற்று. இதற்கு நான் ஒருகாலுஞ் சம்மதிக்கிறதில்லை. நான் சிறுபத்திலே துவக்கி எப்போதும் வேண்டிக்கொள்ளுகிறதை விட்டுவிடுவேனோ? இனிமேலும் அப்படியே வேண்டிக்கொள்ளுவேனென்று அப்போது உடனே தேவமாதாவே எனக்கு வருகிற மரணத்திலே நின்று என்னை இரட்சியுமென்று சொன்னான். இந்த வார்த்தையைப் பசாசு கேட்டுக் காணாமல் மறைந்து போச்சுது.

மறுநாள் துரை உத்தாரப்படிக்குச் சேவகர் அவனைக் கொலைக்களத்துக்குக் கொண்டு போகிறதற்கு முன்னே அவன் ஒரு குருவினிடத்தில் அழுதுகொண்டு பாவசங்கீர்த்தனம் பண்ணின பிற்பாடு சேவகர் அவனைக் கட்டிக்கொண்டுபோனார்கள். இப்படிக்

கூட்டிக்கொண்டு போகிறபோது வழியிலே இருக்கிற மடத்துக்குள்ளே தேவமாதா சுரூபமிருக்கிறதை அவன் கண்டு பாவிகளுக்கு அடைக்கலமே இப்போ எனக்கு வருகிற சாவிலே நீர் உதவியாய் இருமென்று கெட்டியாய்க் கூப்பிட்டான். அப்போது அந்தச் சுரூபம் புதுமையாக எல்லோருங் காணத் தலைகுனிந்தது. ஆக்கினைப்படப்போகிறவன் இதைக் கண்டு தேவமாதாவின் பேரிலே மகா நம்பிக்கையாய் இருந்து சேவகரைப்பார்த்து இந்தச் சுரூபத்தைச் சற்று முத்திசெய்கிறேனென்று கேட்டதற்குச் சேவகர் சம்மதியாமல் இருந்ததினாலே வேடிக்கைப் பார்க்கப்போன சனங்கள் சேவகரைக் கோபித்துக்கொண்டு கலாபம் பண்ண நினைத்தார்கள். சேவகர் அதற்குப் பயந்து அவன் அந்தச் சுரூபத்தை முத்திசெய்ய உத்தாரங் கொடுத்தார்கள். அவன் இரண்டு கைகளுங் கட்டப்பட்ட பிரகாரத்துக்குச் சுரூபத்தின் கிட்டப்போய்ப் பாதத்திலே முத்திசெய்கிறபோது அந்தச் சுரூபம் புதுமையாகத் தமது வலதுகையை நீட்டிக் குற்றவாளியுடைய வலதுகையைக் கெட்டியாய்ப் பிடித்தது. அந்தப் புதுமையை எல்லோருங் கண்டு இது கனமான அதிசயமென்று சொல்லித் தேவமாதாவைத் தோத்திரம் பண்ணினதும் அல்லாமல் சேவகரைப் பார்த்துக் குற்றவாளியை விட்டுவிடுங்களென்று எல்லோருங் கூப்பிட்டுச் சொன்னார்கள். அப்படி சேவகர் அவனைக் கட்டியிருந்த கயிற்றை அவிழ்த்துப்போட்டார்கள். அப்போது தேவமாதாவின் சுரூபம் அவனைப் பிடித்திருந்த கையை விட்டுவிட்டது. பிற்பாடு அவன் தேவமாதாவை முழுமனதோடே தோத்திரம்பண்ணித் தன்னுடைய தாயிடத்திற்போய் நடந்த சேதியெல்லாஞ் சொல்லக்கொள்ள தாயானவள் கேட்டுச் சந்தோஷப்பட்டாள். அவன் பாவத்தை

முழுதும் விட்டுச் சாகுமட்டுந் தேவமாதாவுக்கு நன்றியறிந்தமனதோடே ஊழியம் பண்ணினுன்.

கிறீஸ்துவர்களே, நல்ல தோப்பிலே தோட்டக்கா ரன் கனிகளைப் பறிக்கிறுப்போலே இந்தப் புதுமை யிலுள்ள ஞானக் கனிகளைப் பறிக்கவேணும். முந்த முந்த அந்தக் கைம்பெண்சாதியைப்போலே அவர வர் பெற்ற பிள்ளைகளைத் தேவமாதாவின்பேரிற் பத் தியாயிருக்கப் படிப்பிக்கவேணும்.

இரண்டாவது. நீங்கள் தேவமாதாவைக் குறித்து ஒரு பிறியதத்தமந்திரம வேண்டிக்கொண்டாலும் அதை மகா பத்தியோடே தினந் தப்பாமல் வேண் டிக்கொள்ளவேணும். சிலபேர்கள் கொஞ்ச நாள் தேவமாதாவைக் குறித்து வேண்டிக்கொண்டு சில நாள் சுமமாயிருப்பார்கள். இது ஆகாது. தினந் தப்பாமல் அந்த வாலன் வேண்டிக்கொண்டாப்போ லே நீங்களும் வேண்டிக்கொள்ளவேணும்.

மூன்றுவது. அந்த வாலன் தேவமாதாவின் பேரி லுள்ள பத்தியை விடாமல் என்ன விக்கினம் வந்தா லுஞ் சாவை முதலாய்ச் சட்டைபண்ணுமல் இருந் தான். இதினுலே தம்பி, தேவமாதாவின் பேரில் உண்டான உன்னுடைய பத்தியை விடாதபடிக்குச் சீவன் போனுலும் போகட்டுமென்று நினைக்கவே ணும்.

நாலாவது. பூலோகத்துக்கு ஆண்டவள் மகா பட் சத்தோடேயும் இரக்கத்தோடேயுந் தம்முடைய. திருக்கையினுலே அவனைப் பிடித்த சேதி அறிந்து மகா பத்திச் சுறுசுறுப்போடேயும் முழுமனதோ டேயும் அந்த ஆண்டவருக்கு நீ ஊழியம் பண்ண வேணுமென்று அறியக்கடவாயாக.

## ௬௧-ம் சனிக்கிழமைப்

புதுமையாவது.



தேவமாதாவின் தோத்திரம் பாடினதைப்பற்றி
ஓர் யூதனால் கொல்லப்பட்ட வாலன்
உயிர்ப்பிக்கப்பட்ட
புதுமை.

உத்திராதி இராச்சியத்திலே ஒரு பட்டணத்திலே ஒரு பிச்சைக்காரி மகன் தேவமாதாவின் பேரிலே தோத்திரமாகச் சில பாட்டுகளைப் படித்துச் சுற்றித் திரிந்து அந்தந்தக் கிறீஸ்துவர்கள் வீட்டிலே போய்ப் பாடினான். கிறீஸ்துவர்கள் பூலோகத்துக்கு ஆண்டவள்பேரிலே மகா பத்தியாய் இருந்ததினாலேயும் அந்தப் பிள்ளைக்கு நல்ல குரற்சத்தமானதினாலேயும் அவர்கள் இந்தப் பாட்டுகளை மகா சந்தோஷத்தோடே கேட்டதும் அல்லாமல் இந்தப் பிள்ளைக்குச் சாப்பாடு மற்றதுங் கொடுத்து நன்றாய்ப் பராமரித்துக்கொண்டு வந்தார்கள். இந்த வழியாக அவனும் அவனுடைய தாயும் நன்றாய்ப் பிழைத்தார்கள்.

இப்படியிருக்கையிலே அந்தப் பட்டணத்திலே இருந்த அநேகம் யூதர்கள் அர்ச். கன்னிமரியாயின்பேரிலே பாடுகிற பாட்டுகளை மகா கஸ்தியோடே கேட்டுக்கொண்டு வந்ததினாலே அந்தப் பிள்ளை அதைப் பாடாதபடிக்குக் காறுபூறு பண்ணினார்கள். ஆனால் அவன் அவர்களுக்குப் பயப்படாதபடிக்கு முன்னையைப் பார்க்கக் கெட்டியாய் அந்த யூதர்களுக்கு முன்னே தேவமாதாவின் பேரிலே பாடினான். அந்த

யூதர்களுக்குள்ளே ஒருத்தன் இதைக் கண்டு அந்தப் பிள்ளை தனியே இருக்கிற சமயத்திலே அவனுக்கு நல்ல வார்த்தையைச் சொல்லிச் சில இனிப்புள்ள கனிகளைக் கொடுத்துத் தன் வீட்டுக்கு அவனை வரச் சொன்னான். அவனுடைய பட்சத்தை அந்தப் பிள்ளை கண்டு அவனிடத்திற் கபடில்லையென்று நினைத்து அவன் பிறகே போனான். அந்த யூதன அவனை அழைத்துக்கொண்டு இரகசியமாய் அறைக்குள்ளே போன பிற்பாடு யூதன் அந்தப் பிள்ளையைப் பிடித்துக் கத்தியினாலே அவன் குரல்வளையை அறுத்துப்போட்டான். அப்போது பகலாய் இருந்தபடியினாலே அந்தப் பிரேதத்தை வெளியில் கொண்டுபோகக் கூடாதென்று நினைத்து அறையிலேதானே அந்தப பிரேதத்தை மரத்தினால் பண்ணின கூட்டில் வைத்துக் கவிழ்த்துப்போட்டான்.

இப்படியிருக்கையிலே அந்தப் பிள்ளையினுடைய தாயானவள் தன் பிள்ளை அநேகநேரம வராததைக் கண்டு சுற்றித் தேடித்திரிந்து எத்தனை மனுஷரைக் கண்டாளோ அத்தனைபேருக்குந் தன் மகன் அடையாளத்தைச் சொல்லி அவனைக் கண்டீர்களோவென்று கேட்டாள். கேட்கப்பட்டவர்களுக்குள்ளே ஒருத்தன் அவளைப்பார்த்து உன் மகன் ஒரு யூதன்பிறகே போனதையும் அவன் அறைக்குள்ளே நுழைந்ததையுங் கண்டேன். திரும்ப வெளியிலே புறப்பட்டானோ இல்லையோ தெரியாதென்று சொன்னான். தாயானவள் இந்தச் சேதியைக்கேட்டு யூதர்கள் முன்னமே தன் மகன்பேரிலே வர்மமாயிருந்தார்களென்று அறிந்திருக்கிறதினாலே அவர்கள் தன் மகனைக் கொன்றுபோட்டிருப்பார்களென்று சந்தேகப்பட்டு அரண்மனையார் இடத்தில் சொன்னாள். அரண்மனையார் அந்த யூதனை அழைக்கும் இடத்தில் யூதர்கள்

செய்த அந்தக் கொலைபாதகத்துக்குச் சாட்சி இல்லை என்று நினைத்து நாங்கள் கொல்லவில்லையென்றும அந்தக் கைம்பெண்சாதி எங்கள் பேரிலே அநியாய மாய்க் கோள் சொன்னதினாலே அவனுக்கு ஆக்கினை இடவேணுமென்றுஞ் சொன்னார்கள்.

அப்போது அரண்மனையார் யூதர்களையும் அந்தக் கைம்பெண்சாதியையும் பார்த்துச் சொன்னதாவது: யூதர் வீடுகளைச் சோதித்துப் பார்த்து அந்தப் பிள்ளைப் பிரேதத்தை யூதர் வீட்டிலே கண்டால் அந்த வீட்டுக்கு உடையவர்களை எல்லாம் நெருப்பிலே போட்டுச் சுட்டுப்போடவேணும. அந்தப் பிரேதத்தை அவர்கள் வீட்டிலே காணாதிருந்து அவர்கள் பேரிலே சொன்ன குற்றம ஒப்புவியாதிருந்தால் அந்தக் கைமபெண்சாதியை நெருப்பிலே தள்ளிச் சுட்டுப்போடவேணுமென்று தீர்வை இட்டாரகள். அதற்குப பிற்பாடு சேவகர் யூதர் வீடுகளிற் போய் வேட்டை நாயானது முசலைப் பிடிக்கத் தேடுமாப் போலே வீடு வாசல்களெல்லாம நன்றாய்ச் சோதித்துப் பார்த்தார்கள். அப்படிச் சோதிக்கிறபோது அந்தப் பிரேதத்தை மூடியிருக்கிற மாக்கூட்டை அவர்கள் அநேகம் விசை கண்ணாலே கண்டாலும அதற்குள்ளே பிரேதம் இருக்குமென்று நினைக்கவில்லை. பிற்பாடு அவர்கள் பிரதானி இடத்திற் போய்ப் பிரேதத்தைக் காணவில்லையென்று சொன்னார்கள். அப்போ யூதர் சந்தோஷப்பட்டு வெகு ஆங்காரத்தோடே அந்தக் கைம்பெண்சாதியை நெருப்பிலே போட்டுச் சுடவேணுமென்று கேட்டார்கள். பிரதானி துவக்கத்திலே அந்தக் காரியத்துக்குச் சம்மதியாமல் ஒரு பிரகாரமாய் இருக்கிறதைத் யூதர் கண்டு, இந்த அரண்மனையாரிடத்திலே நீதி இல்லையென்று கூக்குரலிட்டுப் பிரதானி மனதைக் கட்டா

ரம் பண்ணினதினாலே அது காரியத்துக்குப் பிரதானியுஞ் சம்மதித்தான்.

இதினாலே அந்தக் கைம்பெண்சாதியைப் பின்கட்டு முறியாய்க் கட்டிப் பட்டணத்திலுள்ள வெகு சனங்களோடேகூடக் கொலைக்களத்துக்குக் கூட்டிக்கொண்டு போனார்கள். இப்படிக் கூட்டிக்கொண்டு போகிறபோது அவள் அழுதுகொண்டு அடிக்கடி பரமண்டலத்தை அண்ணார்ந்து பார்த்துத் தனக்குச் சகாயமாய் இருக்கத்தக்கதாகத் தேவமாதாவை வேண்டிக்கொண்டாள். இப்படி அவள் வேண்டிக்கொண்டு போகிறபோது அவள் போகிற தெரு வீதியில் இருக்கிற யூதர்கள் வீட்டுக்கிட்டச் சேர்ந்தவுடனே தேவமாதாவின் பேரிலே தன் மகன் பாடுகிற சத்தந் தன் காதிலே கேட்கப்பட்டாப்போலே இருந்தது. அப்போது அந்தக் கைம்பெண்சாதி சேவகரைப் பார்த்து நில்லுங்கள், என் மகன் பாடுகிற சத்தத்தைக் கேளுங்களென்று சொன்னவுடனே, சேவகரும் பிறகே வருகிற பட்டணத்துச் சனங்களும் பேசாமல் இருக்கிற சமயத்திலே, அந்தச் சத்தம் எல்லார் காதிலேயும் விழுந்தது. அப்போது அந்தச் சத்தத்தைக் கேட்டுப் பழக்கமுள்ள சிலபேர்கள் இது இந்தக் கைம்பெண்சாதியுடைய மகன் குரற்சத்தந்தான் என்றார்கள்.

கிறீஸ்துவர்களும் விசேஷமாய்க் கைம்பெண்சாதியும் மகா சந்தோஷப்பட்டதும் அல்லாமல், கைம்பெண்சாதி அந்தச் சத்தங் கேட்கிற திக்கிலே போய் விசாரிக்க வேணுமென்று சேவகரை மன்றாடினாள். அப்படியே அந்தச் சத்தம் ஒரு யூதன் வீட்டிலே இருந்து புறப்படுகிறதென்று சேவகர் கேட்டு, அந்த யூதன் வீட்டுக்குள்ளே போனவுடனே அந்தச் சத்தம் அல்லாமல் அநேகம் பேர்கள் தேவமா

தாவின் பேரிலே பாடுகிற சத்தமுங் கேட்டார்கள். ஆனால் கைம்பெண்சாதி மகன் பாடுகிற சத்தங் கூட்டுக்குள்ளே இருந்து புறப்படுகிறதென்று கேட்டு அதைத் தள்ளித் திறந்து அதின் கீழே உயிரோடே இருக்கிற அந்தப் பிள்ளையைக் கண்டதும் அல்லாமல் கழுத்திலே அறுபட்டிருக்கிற காயத்தின் அடையாளமும் மேலே வடிந்திருக்கிற இரத்தத்தையுங் கண்டு நடந்த காரியமென்ன உன்னோடே கூடப் பாடினதாரென்று அவனைக் கேட்டார்கள். அதற்கு அந்தப் பிள்ளை இந்த வீட்டுக்குடைய யூதன் என்னைக் கபடமாய்க் கூப்பிட்டுக்கொண்டு வந்து என் கழுத்தை அறுத்து நான் செத்துப் போனேன் என்று நினைத்து இந்தக் கூட்டின் கீழே என்னைப் போட்டு மூடிவைத்தான். ஆனால் தேவ மாதாவின் புதுமையினாலே நான் சாகவில்லை. என்னோடேகூடப் பாட்டுப் பாடினவர்கள் சம்மனசுகள் தானென்று சொன்னான். சேவகர் அந்தப் பிள்ளையைத் தாயிடத்திற் கூட்டிப்போய் விட்ட உடனே தாயானவள் மகனைக் கட்டிக்கொண்டு போன மாத்திரத்தில் எத்தனை விசை முத்தி செய்து எம்மாத்திரஞ் சந்தோஷப் பட்டாளென்று வாக்கினாலே சொல்லக்கூடாது.

பிற்பாடு சேவகருங் கைம்பெண்சாதியும் அவள் மகனும் எல்லாரும் பிரதானியிடத்தில் போனார்கள். அந்தப் பிள்ளை வாயினாலேதானே நடந்த சேதியெல்லாம் பிரதானி மகா சந்தோஷமாய்க் கேட்ட பிற்பாடு கொலைசெய்த யூதனையும் அவன் வீட்டிலே இருந்த மற்றவர்களையும் முன் தீர்வை இட்டபடியே நெருப்பிலே சுடக் கட்டளை இட்டபடியினாலே சேவகர் அன்றைக்குத்தானே அவர்களை நெருப்பிலே தள்ளிச் சுட்டுப்போட்டார்கள். இந்தப் புதுமையி

ஞலே தேவமாதாவுக்கு வெகு தோத்திரமுங் கிறீஸ்துவர்களுக்கு வெகு சந்தோஷமும் ஆச்சுது.

கிறீஸ்துவர்களே, சமுத்திரத்திலே முத்துக் குளிக்கிறப்போலே இந்தப் புதுமையிலே ஞான முத்துகளை எடுக்கவேணும். மூர்த்தமுந்தத் தேவமாதாவின் பேரிலே தோத்திரஞ் சொன்னவனுக்கு நன்மையும் அதற்கு விக்கினம் பண்ணினவனுக்குப் பொல்லாப்பும் வந்ததென்று நீங்கள் அறிந்து தேவமாதாவின் பேரிலே தோத்திரம் பண்ணுகிறவர்களுக்கு நீங்கள் விக்கினம் பண்ணுதிருப்பதும் அல்லாமல் நீங்கள் தானே அந்த ஆண்டவளைக் குறித்து மகா பத்தியோடே அடிக்கடி தோத்திரம் பண்ணவேணும். அவள் பேரிலே ஞானப் பாட்டுகளைப் பாடுகிறதற்கு உங்களுக்குத் தெரியாதிருந்தாலும் பிறியதத்தமந்திரத்தைப் பராக்கில்லாமல் பத்தியோடே சொன்னுல் மோக்ஷராக்கினிக்கு மகா சந்தோஷமுந் தோத்திரமுமாகுமே.

இரண்டாவது. இப்போ சொல்லப்பட்ட புதுமையிலே ஒரு யூதன் அந்தப் பிள்ளைக்கு இனிப்புள்ள பழங்கள் வழியாகக் கபடமாய் மோசம் பண்ணினுனென்று நீங்கள் அறிந்து விசேஷமாய்ச் சிறுபிள்ளைகளுக்கு அந்த வழியாகத்தானே மோசம் வராதபடிக்கு எச்சரிக்கையாய் இருக்கவேணும். அதேனென்றல் சில சிறு பிள்ளைகளுக்கு முன் சொல்லப்பட்ட பிரகாரமாக மோசம் வந்ததென்று நாம் அறிந்திருக்கிறோம். சிலர் அதுகளைத் திருடித் துர்மார்க்கத்திலே அவர்களை வளர்த்து அவர்கள் ஆத்துமத்துக்கு மோசம் பண்ணுகிறுர்கள்.

மூன்றுவது. இப்போ சொல்லப்பட்ட யூதன் இரகசியமாய்க் கொலை செய்திருந்தாலும் அதைப் புறத்தியாரொருவரும் அறியாதிருந்தாலும் ஆண்ட

வர் கற்பனையின்படியே அவனுடைய பாவம் வெளிப் பட்டதென்று கேட்டீர்களே. ஆகையால் எங்கும் வியாபித்திருக்கிற ஆண்டவருக்குப் பயந்து நீங்கள் பாவஞ் செய்யாதிருக்கவேணும். அதேதென்றால் நீங்கள் உங்கள் எசமானுக்கும் அரண்மனையாருக் குந் தாய் தகப்பனுக்கும் பயந்து இவர்கள் அறியா மல் இரகசியமாய்ப் பாவஞ் செய்தாலும் அதை அவர்கள் கொஞ்ச நாள் அறியாதிருப்பார்கள். பிற் பாடு ஒருவரும் நினையாத வழியாக அது வெளிப் படுவதினால் உங்களுக்கு ஆக்கினை பொல்லாப்பு வரும்.

நாலாவது. அந்தக் கைம்பெண்சாதி கொலைக் களத்துக்குப் போகிறபோது தனக்குண்டான அத் தனை கஸ்திக்குள்ளே மகா பத்திச் சுறுசுறுப்போடே தேவமாதாவை வேண்டிக்கொண்டதினாலே மோக்ஷ • ராக்கினி பண்ணின புதுமையைக் கொண்டு அந்த ஆபத்திலே • அவளை இரட்சித்தாளென்று சொன் னோமே. ஆகையால் உங்களுக்கு வருகிற இக்கட்டு கஸ்தி நீங்கிப்போகத் தக்கதாக அப்படி வேண்டிக் கொள்ளக்கடவீர்கள். கோணங்கி குறி முதலான பசாசின் காரியங்களுந் தேவமாதா முதலான அர் ச்சியசிஷ்டவர்களின் பேரிலே முறைப்பாடுகளுந் தேவ கிருபைக்கு மெய்யான வழியல்லாததினாலே கஸ்திமேற் கஸ்தி வரும். முன் சொல்லப்பட்ட கைம்பெண்சாதியைப்போலே தேவமாதாவின் பே ரிலே நம்பிக்கையாய் இருந்து தக்கபடி அவளை வேண்டிக்கொண்டால் அந்தக் கஸ்திகள் நீங்கிப் போகுமென்று அறியக்கடவீர்களாக.

# ௲௨-ம் சனிக்கிழமைப்

## புதுமையாவது.

எளியவளான ஓர் கைம்பெண்சாதிக்கு
மரணநேரத்தில் தரிசனையான அற்புதமும் பசாசு ஓர்
ஆஸ்திக்காரனுடைய ஆத்துமத்தைப்
பறித்த அற்புதமுமாவன.

உத்திராதி இராச்சியத்திலே ஒரு மடத்திலே இரண்டு குருக்கள் இருக்கிறபோது ஒரு ஆஸ்திக்காரன் அவஸ்தையாய் இருக்கிறதை அவர்கள் அறிந்து வயதிலே மிச்சமாயிருக்கிற குரு அங்கே போனார். அந்தச் சமயத்திலே வேறொரு பிச்சைக்காரக் கைமபெண்சாதி அவஸ்தையாய் இருக்கிற சேதி அந்த மடத்திலே இருந்த வேறொரு குருவறிந்து அவளுடைய வீட்டுக்குப் போனார். அந்தக் கைம்பெண்சாதி பிச்சைக்காரியானதினாலே வேறே மனுஷர் உதவியில்லாமல் தனியே ஒரு குச்சு வீட்டிலே வைக்கோலின் மேலே படுத்துக்கொண்டிருந்தாள். அந்தக் குச்சுவாசற்படியிலே குருவானவர் சேர்ந்தவுடனே அவர் கண்ட காட்சியாவது: அவஸ்தையாய்க் கிடக்கிற பிச்சைக்காரியினுடைய தலைமாட்டிலே மோக்ஷத்துக்கு இராக்கினியானவள் எழுந்தருளி இருக்கிறதையுந் தம்முடைய கையிலிருக்கிற வெள்ளை வஸ்திரத்தினாலே அவஸ்தைக்காரி நெற்றியிலே வேர்க்கிற வேர்வையைத் துடைக்கிறதையும் அந்த வியாதிக்காரியைச் சுற்றி அநேகங் கன்னியாஸ்திரிகள் இருக்கிறதையுங் கண்டு ஆச்சரியப்பட்டுப் பயந்து உள்ளே போகாமல் அந்த வாசற் படியிலே தானே நின்றார். அப்போ தேவமாதா அவரைச் சங்

தோஷமாய்ப் பார்த்து அவர் உள்ளே வரவும் அவ ருடைய தொழிலை அவஸ்தைக்காரி இடத்திலே நிறைவேற்றவுங் கட்டளையிட்டாள். அந்தப் பிரகா ரமாய்க் குருவானவர் உள்ளே போய் அவளுக்குப் பாவசங்கீர்த்தனங் கொடுத்துத் தேவநற்கருணையுங் கொடுக்கிறபோது தேவமாதாவும் மற்றக் கன்னியா ஸ்திரிகளுந் தேவநற்கருணையைச் சாஷ்டாங்கமாக வணங்கினார்கள்.

பிற்பாடு குருவானவர் அவளுக்கு அவஸதைப பூசுதலுங் கொடுத்து அவஸ்தை மந்திரஞ் சொல்லு கிறபோது அவள் ஆத்துமம் பிரிந்தது. பிரிந்தவு டனே தேவமாதா அந்த ஆத்துமத்தைத் தமது திருக்கையினாலே வாங்கினாள். அங்கே இருந்த மோ ட்சவாசிகள் இன்பமான பாட்டுகளைப் பாடிக்கொ ண்டு மோக்ஷத்துக்குக் கூட்டிக்கொண்டு போனார் கள். இதுவெல்லாம அந்தக் குருவானவர் கண்டு எத்தனை சந்தோஷப்பட்டாரென்று வாக்கினாலே சொல்லக்கூடாது. இதல்லாமல் இந்தக் குருவான வர் தான் கண்ட காட்சி எல்லாம வயதிலே மிச்ச மாய் இருக்கிற குருவானவரிடத்தில் சொல்லத்தக் கதாக அவஸ்தையாய் இருக்கிற ஆஸ்திக்காரன் வீட் டிலே அந்தக் குரு இருக்கிறதினாலே இவர் அங்கே போனார். அங்கே சேர்ந்தவுடனே பயங்கரமான தெரி சனத்தைக் கண்டார். அதாவது: ஆஸ்தியையுடைய அவஸ்தைக்காரன் படுத்திருக்கிற பெரிய கட்டிலைச் சுற்றிப் பெரிய கறுப்பு நாய்கள் அகோரமாய் வாய் களைத் திறந்து பற்களை நெறுநெறுவென்று கடித் துக் கொட்டிக்கொண்டிருக்கிறதைக் கண்டார். அவ ஸ்தைக்காரன் ஊழியக்காரரைக் கூப்பிட்டு இந்த நாய்களை அப்பாலே துரத்துங்களென்று சொல்லு கிறதையுங் கேட்டார். ஆனால் அங்கே அந்த நாய்

கலை அவஸ்தைக்காரன் கண்டதே அல்லாமல் ஊழியக்காரர் காணுததினுலே பித்தவெறியினுலே இப்படிக் கூப்பிடுகிருனென்று நினைத்து அதைச் சட்டைபண்ணுதிருந்தார்கள்.

கடைசியில், ஒரு பசாசு ஒரு இராட்சதன் ரூபமாகவந்து அவஸ்தைக்காரன் குரல்வளையைப் பிடித்ததினுலேயும் நெரித்ததினுலேயுங் குத்தினதினுலேயுங் குத்துப்பட்ட பன்றி அலறுகிறுப்போலே அவன் அலறி ' ஐயையோ! சாகிறேனென்றும் பசாசு என்னைக் கொல்லுதென்றும்' நிர்ப்பாக்கியனுய்க் கெட்டுப்போனேனென்றுங் கூப்பிட்டான். இப்படிக் கூப்பிடுகிறபோது கட்டிலைச் சுற்றி நாய் ரூபமாக இருந்த பசாசுகள் அவனுத்துமத்தைப் பறித்து நரகத்துக்குக் கொண்டுபோச்சுது. இதுவெல்லாம் அந்தக் குருவானவர் கண்டு கஸ்தியினுலேயும் பயத்தினுலேயுஞ் சோர்ந்துபோய் மயங்கிக் கீழே விழுந்தார். பரலோகத்துக்கு இராக்கினியானவள் இந்தக் குருவானவர் பேரிலே பட்சமாய் இருந்தபடியினுலே அந்தச் சமயத்திலே அவருக்குக் காண்பித்து அவருக்குத் தேறுதல் சொன்ன பிற்பாடு நல்லவர்களுக்கு நம்பிக்கையும் பொல்லாதவர்களுக்குப் பயமும் வரத்தக்கதாகப் பிச்சைக்காரியாகிற கைம்பெண்சாதி வீட்டிலேயும் இந்த ஆஸ்திக்காரன் வீட்டிலேயுஞ் சம்பவித்த சேதிகளை எல்லாருக்கும் வெளிப்படுத்தென்று கட்டளையிட்டார்ள். அந்தப்படிக்கு அவர் அறிவித்தபடியினுலே 'புண்ணியவான்களுக்கு நம்பிக்கையும் பாவிகளுக்குப் பயமும் வந்தது.

கிறீஸ்துவர்களே, தோட்டக்காரன் நந்தாவனத்திலே புஷ்பங்களைப் பறிக்கிறுப்போலே இப்போது நீங்கள் கேட்ட புதுமையிலுள்ள ஞான புஷ்பங்களைப் பறிக்கவேணும். முந்தமுந்தக் குருவானவர்

கைம்பெண்சாதிக்குத் தேவநற்கருணை கொடுக்கிற போது அங்கே இருந்த தேவமாதாவுஞ் சில மோட்சவாசிகளுஞ் சாஷ்டாங்கமாகத் தேவநற்கருணையை வணங்கினார்கள் என்று சொன்னோமே. தேவநற்கருணையின் பேரிலே பத்தி இல்லாத கிறீஸ்துவர்கள் இந்தச் சேதி அறிந்து மகா வெட்கப்பட வேண்டியிருக்குது. ஐயையோ! சில கிறீஸ்துவர்கள் குருவானவர் தேவநற்கருணை கொடுக்கிறபோது கிட்டவிருந்தாலும் வணக்கம் இல்லாமல் சப்பாணிபோலே சும்மா உட்கார்ந்திருக்கிறார்கள். சிலர் பட்ட மரத்தைப்போலே நிற்கிறார்கள். ஒரு துரை முன்பாக எத்தனையோ வணக்கவொடுக்க பயபத்தியோடே இருப்பார்கள். தேவநற்கருணையில் இருக்கிற இராசாதிராசனாகிய சேசுநாதர் சமுகத்திலே வணக்கமில்லாதிருக்கலாமோ?

இரண்டாவது. முன் சொல்லப்பட்ட ஆஸ்திக்காரன் அவஸ்தையிலே பாவசங்கீர்த்தனம் பண்ணினாலும் ஆகாத பாவசங்கீர்த்தனத்தினாலேயோ பாவசங்கீர்த்தனம் பண்ணின பிறகு மனதிலே பாவத்துக்குச் சம்மதித்ததினாலேயோ என்ன முகாந்தரத்தைப் பற்றியோ நரகத்திலே போனான். ஆகையால், தம்பிமாரே, நீங்கள் நன்றாய் இருக்கிறபோது ஆகாத பாவசங்கீர்த்தனம் பண்ணுகிறதற்குப் பழக வேண்டாம். இந்தப் பழக்கம் உண்டானால் சாகிற சமயத்திலே மோசம் வரும்.

மூன்றாவது. முன் சொல்லப்பட்ட கைம்பெண்சாதி அவஸ்தையாய் இருக்கிறபோது பூலோகத்துக்கு ஆண்டவள் இவள் கிட்ட இருந்து இவளுக்கு உதவியாகத் தமது திருக்கையிலே இருக்கிற சேலையினாலே இவளுடைய நெற்றியிலே இருக்கிற வேர்வையைத் துடைத்தாளென்று சொன்னோமே. தேவ

ம ர்தாவுக்கு இத்தனை தயவும் பட்சமும் இருக்கி றதை அறிந்து அப்படிக்கொத்த ஆண்டவனுக்கு ஊழியம் பண்ணுகிறதற்கு ஆருக்கு மனது வராதி ருக்கும். இதினாலே நீங்கள் அவனுக்கு முழுமன தோடே ஊழியம் பண்ணவேண்டாமோ?

நாலாவது. தேவமாதாவின் உதவியினாலே அந்தக் கைம்பெண்சாதிக்கு நல்ல மரணம் வந்தது. இதி னாலே நீங்கள் நல்ல மரணம் அடையத்தக்கதாகச் சம்மனசுகளுடைய இராக்கினியின் பேரிலே உங்கள் பத்தியெல்லாம் வைத்து அவளைக் குறித்து நீங்கள் சாகுமட்டும அநேகம் புண்ணியங்களைப் பண்ண வேணும். சாகிறபோது பயமுங் கஸ்தியும் அவதியுஞ் சொல்லக்கூடாத சோதனைகளும் உண்டாயிருந்தா லுந் தமது பேரிலே பத்தி உள்ளவர்களை முன் சொன்ன பொல்லாப்பில் நின்று சத்தி உடையவ ளாகிற கன்னியர் அரசி இரட்சிப்பாள்.

கடைசியிலே சில பேர்கள் இப்போ சொல்லப் பட்ட புதுமையைக் கேட்டவுடனே, ஆஸ்திக்காரனு க்கு வந்த மரணம் எனக்கு வராமல் பிச்சைக்காரி அடைந்த மரணம் எனக்குக் கிடைக்க வேணுமெ ன்று வியர்த்தமாய்ச் சொல்லுவார்கள். அதேனென் றால் அவரவர் நடத்தைக்குத்தக்கது ஏறக்குறைய சாவுவருமென்கிறதினாலே ஆஸ்திக்காரன் பாவவழி யிலே நடந்தாப்போலே இப்போது நடக்கிறவர் களுக்கு ஆகாத சாவு வருமென்னத்தகும். கைம்பெ ண்சாதி புண்ணிய வழியிலே நடந்தாப்போலே நட க்கிறவர்களுக்கு நல்ல மரணம்வரும். சிந்துதேசத்து க்கு அப்போஸ்தலரான அர்ச். சவேரியார் நன்றாய் இருக்கிறபோது எப்போதுந் தேவமாதாவின் செப மாலையைக் கையிலே பிடித்துக்கொண்டு தேவமாதா வைப் பார்த்துத் தேவரீர் எனக்கு உம்மைத் தாயா

கக் காண்பியுமென்று சொன்னபடியே மோட்சுத் துக்கு இராக்கினியானவள் எப்போதுந் தம்மை அவருக்குத் தாயாராகக் காண்பித்து நல்ல மரணத் தைக் கட்டளையிட்டாளென்று அறியக்கடவீர்களாக.

## ௩௩-ம் சனிக்கிழமைப்

புதுமையாவது.

அர்ச். தாமாஸ் அருளப்பருக்கு அறுக்கப்பட்ட கை
தேவமாதாவின் வல்லமையினாலே மறுபடி
பொருந்தி ஒட்டிக்கொண்ட
அற்புதம்.

கர்த்தர் மனுஷாவதாரம பண்ணின எழுநூற்று முப்பத்தோராம் வருஷம் பதிதனான லெயோன் இசோரியனென்கிற கொனஸ்தாண்டினெப்போலி இராயன் சேசுநாதருடையவுந் தேவமாதாவுடைய வும் மற்ற அர்ச்சியசிஷ்டவர்களுடையவுஞ் சுரூபங் களை வணங்குகிறவர்களுக்குக் கனமான கலகம் பண்ணினதும் அல்லாமல் அப்படிப்பட்ட சுரூபங் களை எல்லாஞ் சுட்டுச் சாம்பலாக்கி இப்படி தன் னால் இயன்றமட்டும் நிர்மூலம் பண்ணிக்கொண்டு வந்தான். இதினாலே திருச்சபைக்கு வந்த அழுகை க்கும் உபத்திரியத்துக்குங் குறைச்சலில்லை. இப்படி இருக்கையிலே தமாஸ் என்கிற பட்டணத்து இரா சர்வான துலுக்கன்கிட்டப் பிரதானியாயிருந்த அரு

ளப்பர் உத்தம கிறீஸ்துவனாய் இருந்து திருச் சுரூபங்களின்பேரில் விசேஷ பத்தியாய் இருந்ததினாலே அந்தச் சேதியைக் கேட்டு மிகுந்த கஸ்திப்பட்டார்.

இதல்லாமல் அவர் மகா சாஸ்திரியாய் இருந்ததினாலே கிறீஸ்துவர்களுக்கு இதினால் ஆறுதலுந் துணிவும் வரத்தக்கதாகத் திருச்சுரூபங்களை வணங்குகிறது சேசுநாதருடைய அப்போஸ்தலர்கள் காலந் துவக்கி எப்போதும் புண்ணியமாக நடந்து வருகிறதென்று சாஸ்திரத்தின் ஞானங்களினாலே ஒப்பித்து அநேகங் கிறீஸ்துவர்களுக்குச் சீட்டெழுதி அனுப்பி அவர்களைத் திடப்படுத்தினார். அந்த லெயோனென்கிற இராயன் இந்தச் சேதிகள் எல்லாம் அறிந்து வெகு கஸ்திப்பட்டதும் அல்லாமல் முன் சொல்லப்பட்ட அருளப்பர் பேரிலே மிகுந்த கோபமாய் இருந்து அவரைப் பழிவாங்கவேணுமென்று நினைத்தான். ஆனால் அவர் வேறே இராசாவாகிய துலுக்கன் கிட்ட இருந்ததினாலே தாம் நினைத்த காரியம் முடியத்தக்கதாகக் கபடமாய் ஒரு உபாயம் பண்ணினான். அதாவது: அந்த அருளப்பர் கையெழுத்துப்போலே தன்னுடைய கணக்கருக்குள்ளே ஒருத்தனை எழுதச் சொல்லி அருளப்பர் இராயனுக்கு எழுதுகிற பாவனையாகக் கள்ளச் சீட்டாய் ஒரு சீட்டு எழுதுவித்தான். அதிலே எழுதினதாவது:

"இராயரே தமாஸென்கிற பட்டணத்தின்கிட்ட உம்முடைய பாளையம் இறங்கினால் நான் அதிலே பிரதானியாய் இருக்கிறதினாலே அந்தப் பட்டணமும் கோட்டையும் உமக்கு ஒப்புக்கொடுப்பேனென்று எழுதுவித்தான். இந்தக் கள்ளச் சீட்டு எழுதின பிற்பாடு அந்தச் சீட்டை அருளப்பருடைய எசமானாகிய துலுக்கனுக்கு அனுப்பித் தம்முடைய

ஸ்தானுபதி வழியாகத் துலுக்கனுக்குச் சொல்லிச் சொன்னதாவது: இதோ உம்முடைய பிரதானி உமக்குச் செய்த துரோகம். நாமும் நீரும் எப்போதுஞ் சமாதானமாய் இருக்கிறதினாலே நாம் அதற்கு இடங் கொடுக்கவில்லையென்று சொல்லச் சொன்னான். இயெசித் என்கிற துலுக்கனான இராசா இந்தச் சேதி அறிந்து இது மெய்யென்று நினைத்துத் தம்முடைய பிரதானிபேரிலே மிகுந்த கோபமாய் இருந்து அவனைப் பார்த்துச் சொன்னதாவது: நாம உனக்குப் பிரதானி பட்டமும் வெவ்வேறே பாக்கியங்களுங் கொடுத்த பிற்பாடு நீ நமக்குத் துரோகம் பண்ணலாமோ? துரோகி இந்தச் சீட்டை வாசித்து இது உன்னுடைய கை எழுத்தா பாரென்று சொல்லி அந்தச் சீட்டை அருளப்பர் கையிலே கொடுத்தான். அருளப்பர் அந்தச் சீட்டைக் கையிலே வாங்கிப் பார்த்த பிற்பாடு இராயன் வற்மத்தினாலே என்னுடைய குடியைக் கெடுக்கத்தக்கதாக இந்தக் கபடு பண்ணினானென்று நினைத்துப் பயப்படாமல் துலுக்கனாகிற இராசாவைப் பார்த்து இது கள்ளச் சீட்டு, இந்த எழுத்து என்னுடைய கையெழுத்துப்போலே இருக்கிறதல்லாதே நான் இந்தச் சீட்டு எழுதவில்லை. நான் உமக்குத் துரோகம் பண்ணவேணுமென்று கனவிலே முதலாய் நினைக்கவில்லையென்று சொன்னார். ஆனால் அந்த இராசா அருளப்பர் சொன்னதை விசுவசியாமல் அவரை மிகவும் வைது கோபித்துக்கொண்டு உன் வீட்டுக்குப் போவென்றான்.

அருளப்பர் வீட்டுக்குப் போன பிற்பாடு துலுக்கனாகிய இராசா ஊழியக்காரனை அனுப்பி அருளப்பருக்கு ஆக்கினையாக வலது கையை மணிக்கட்டோடே வாங்கிப்போடச் சொன்னான். அந்தப் பிர

காரமாய் அவர்கள் நிஷ்டூரத்தோடே அநியாயமாக அருளப்பருடைய வலது கையை வாங்கிப்போட்ட பிற்பாடு இராசாவின் கட்டளைப்படியே மற்றவர்களுக்குப் பயம் வரத்தக்கதாக அந்தக் கையைக் கொலைக்களத்திலே கட்டித் தூக்கினார்கள். அந்தப் பட்டணத்தார் அதைக் கண்டு நடந்த சேதி அறிந்து மகா கஸ்தி அநுபவித்ததும் அல்லாமல் அவருக்கு அநியாயமாய் இந்த ஆக்கினை இட்டார்கள், அவர் நல்ல புண்ணியவான், அவர் இந்தத் துரோகம் பண்ணவில்லையென்று நினைத்தார்கள்.

இப்படியிருக்கையிலே அந்தக் காயத்தினாலே அருளப்பர் வெகு கஸ்தி அநுபவித்தாலும் புண்ணியவானாய் இருந்ததினாலே முறைப்படாமல் மகா பொறுமையோடே இருந்தார். அன்று சூரியன் அஸ்தமித்த பிற்பாடு இராசாவாகிய துலுக்கன் கோபம் அமர்ந்திருக்குமென்று நினைத்து அருளப்பர் இராசாவிடத்தில் ஆள் அனுப்பிக் கேட்ட மன்றாட்டாவது: வாங்கிப்போட்ட கை அங்கே தூக்கி இருக்குமட்டும் எனக்குக் கஸ்தி அமராது. பிற்பாடு அதைத் திரும்ப எனக்குக் கொடுக்க உத்தரவு பண்ணவேணுமென்று மன்றாடினார். இந்த வார்த்தையை இராசா கேட்டுச் சற்றிரக்கம் வந்து அந்தக் கையை அவருக்கு அனுப்பச் சொன்னான். அருளப்பர் அந்தக் கையை அழுகையோடே வாங்கிக்கொண்டு தன்னுடைய அரண்மனையில் இருக்கிற கோயிலுக்குள்ளே போய்த் தேவமாதாவின் சுரூபத்து முன்பாகச் சாஷ்டாங்கமாக வணங்கி மகா அழுகையோடேயுந் தாழ்ச்சியோடேயும் வேண்டிக்கொண்டதாவது:

தேவமாதாவே உமது திருக்குமாரனுடையவும் உம்முடையவுஞ் சுரூபங்களை வணங்க வேணுமென்று நான் எழுதினதினாலே இந்தக் கை வாங்கப்

பட்டதென்று தேவரீர் அறிந்திருக்கிறீர், ஆனால் இந்தக் கையினாலேதானே அந்தக் காரியத்திலே நான் அதிக ஊழியம் பண்ணத்தக்கதாக இந்தக் கை பழையபடியே பொருந்திப் போகும்படியாக நான உம்மை மன்றாடுகிறேனென்று வேண்டிக்கொண்ட வுடனே தனக்கு நித்திரை வருகிற அடையாளம போலே கண்டு பீடத்தின் மேலே தானே தலைசாய்ந்து நித்திரைபோனார். அந்தச் சமயத்திலே தேவமாதா காண்பித்து மகா சந்தோஷத்தோடே அவரைப்பார்த்துத் திருவுளம் பற்றினதாவது: அருளப்பா நீ அழாதே, நீ கேட்ட வன்றாட்டு உனக்குக் கட்டளையிட்டோம். இதோ உன்னுடைய வேதனை எல்லாம் முடிந்தது, உன்னுடைய கை முன்னே யைப் போலே ஒட்டிப் போச்சுது. நீ வார்த்தைப் பாடு கொடுத்தபடியே நம்மையும் நமது திருக்குமாரனையுங் குறித்து ஊழியம் பண்ணென்று சொல்லித் தேவமாதா காணாமல் மறைந்துபோனாள். அப்போ அருளப்பர் முழுதும் விழித்துக்கொண்டு தம்முடைய வலதுகை முன்னேயைப் போலே நன்றாய் இருக்கிறதைக் கண்டு சொல்லப்படாத சந்தோஷப் பட்டதினாலே அந்த இராத்திரிதானே தமது அரண்மனையில் இருக்கிற சகலரையும் அழைப்பித்துத் தமது வலது கையைக் காண்பித்தார். இந்த அதிசயத்தை அவர்கள் கண்டு மகா சந்தோஷம் அடைந்து அவர்களும் விசேஷமாய் அருளப்பருந் தேவமாதா செய்த இந்த உபகாரத்துக்குத் தோத்திரம பண்ணுவதில் அந்த இராத்திரி முழுதுஞ் செலவழித்தார்கள்.

மறுநாள் அந்தப பட்டணத்தார இந்தப புதுமையை அறிந்தபோது விசேஷமாய்க் கிறீஸ்துவர்கள் அதை விசுவசித்துச் சந்தோஷப்பட்டார்கள் ஒழிய

துலுக்கர் அதை விசுவசிக்கவில்லை. ஆகையால் அந்தத் துலுக்கருக்குள்ளே சிலர் இந்தப் புதுமையைக் காணவும் அது மெய்யோ பொய்யோவென்று அறியத்தக்கதாகவும் அருளப்பருடைய வீட்டுக்குப் போய் அவருடைய வலது கை முன்னையைப் போலே இருக்கிறதைக் கண்டு இராசாவாகிய துலுக்கனிடத்திற்போய்ச் சொன்னதாவது: தேவரீர் அருளப்பனுடைய வலதுகையை வாங்கிப்போடக் கட்டளையிட்டது சரியே, ஆனால் உம்முடைய ஊழியக்காரர் நீர் சொன்னபடியே கேட்கவில்லை. அதேதென்றால் அருளப்பன் அவர்களுக்குக் கைக்கூலி கொடுத்துத் தனது வலது கையை வாங்க ஒட்டாமல் தன் அடிமையாகிற ஒருத்தனுடைய வலது கையை வாங்கிப்போட அவர்களைச் சம்மதிக்கப் பண்ணினான். அந்தப் பிரகாரத்துக்கு அவனுடைய அடிமைகளில் எசமான் பேரிலே பட்சமுள்ள ஒருத்தன் எசமானுக்கு அந்தக் கஸ்தி வாராதபடிக்குத் தன் கையை வாங்கச் சம்மதித்ததினாலே அந்த அடிமை கை வாங்கினார்களென்று சொன்னார்கள். அப்போ இராசா அருளப்பனை அழைப்பித்து அவருடைய வலது கையைப் பார்க்கிறபோது புதுமையாக வெட்டின மணிக்கட்டுச் சுற்றிலும் ஒரு சிவப்புக் கீற்று இருக்கிற அடையாளத்தைக் கண்டான். அப்போ இராசா ஆச்சரியப்பட்டுக் கெட்டிக்கார வயித்தியன் ஆர் இந்தக் கையை ஒட்டி வைத்தவனென்று அருளப்பனைக் கேட்டான். இதற்கு அவர் தேவமாதாவின் புதுமையாக இப்படிச் சம்பவித்ததென்று நடந்த வர்த்தமானமெல்லாஞ் சொன்னார்.

அப்போது இராசாவானவன் அருளப்பர் பேரிலே சாட்டின குற்றம் அவர் பேரில் இல்லையென்று நினைத்து அவரைப் பார்த்து உன் கையை வாங்கிப்

போடச் சொன்னதை அறியாமல் செய்தேன் என்று சொன்னதும் அல்லாமல் அவனை முன்னேயைப் போலே பிரதானி பட்டத்திலே வைத்து மிகுதியாய் வெகுமானம் பண்ணினன். ஆனல் அருளப்பர் அதற்கான ஆசாரம் இராசாவுக்குச் செய்து தாம் அங்கே இராமல் அப்புறம் போக இராசாவை உத்தாரங்கேட்டு இராசா கக்கிஷமாய் உத்தாரங் கொடுத்த பிற்பாடு தன் வீட்டுக்குப் போனர். அங்கே சேர்ந்தவுடனே தமது ஆஸ்தி எல்லாம் பிச்சைக் காரருக்குங் கோயிலுக்கும் உறவின்முறையார்களுக்குங் கொடுத்துப் பலெஸ்தீனென்கிற சீமைக்குப் போய் ஒரு மடத்திலே சந்நியாசம் பண்ணிச் சாகுமட்டுந் தமது கையினலே சுரூப வணக்கத்தின் பேரிலே அநேக தோத்திரங்களை எழுதிக் கடைசியாய் நல்ல மரணம் அடைந்தார். பிற்பாடு அவர் பண்ணின புதுமைகளினலே அவருக்கு அர்ச்சிய சிஷ்டப்பட்டம் வந்தது. தமாசென்கிற பட்டணத்திலே அவர் பிறந்ததினலே அர்ச். தமாஸ் அருளப்பரென்கிற பேர் அவருக்கு உண்டாயிற்று.

கிறீஸ்துவர்களே, ஓர் விருட்சத்திலே கனிகளைப் பறிக்கிறாப் போலே இந்தப் புதுமையிலே ஞானக் கனிகளைப் பறிக்கவேணும். முதலாவது. இப்பேர் சொல்லப்பட்ட அர்ச். அருளப்பர் தமக்குத் தேவமாதா கொடுத்த கையினலே தேவமாதாவுக்கு நன்றாய் ஊழியம் பண்ணினரென்று நீங்கள் அறிந்திருக்கிறீர்களே, சர்வேசுரன் தமக்கு ஊழியம் பண்ணத் தக்கதாக உங்களுக்கு இரண்டு கையையுங் கட்டளை இட்டாரென்று நினைத்து அந்தக் கைகளினலே ஆண்டவருக்குத் துரோகம் பண்ணுமல் அவருக்கேற்ற புண்ணியங்களைப் பண்ணவேணும்.

இரண்டாவது. அர்ச்சியசிஷ்டர்களுடைய சுரூபங்களையும் விசேஷமாய்ச் சேசுநாதர் பாடுபட்ட சுரூ

பத்தையும் அவருடைய திருத்தாயார் சுரூபத்தையுங் கண்டு அவர்களின் பேரிலே பத்தி வருமென்று பசாசு அறிந்து அந்தச் சுரூபங்களை வணங்குகிறது ஆகாதென்று பதிதர் வழியாகத் துர்ப்புத்தி சொல்லும். ஆகையால் உங்களுக்குப் பத்தி வரத்தக்கதாக இப்படிக்கொத்த திருச்சுரூபங்களையும் விசேஷமாய்ச் சேசுநாதர் பாடுபட்ட சுரூபத்தையுந் தேவமாதாவின் சுரூபத்தையும் வணங்குகிறதும் அல்லாமல் அதுகளைப் பத்தியோடே காணவேணும்.

கடைசியிலே அர்ச். அருளப்பர் தமது கை வாங்கின காயத்தினாலே கஸ்தியாய் இருக்கும்போது தேவமாதாவை வேண்டிக்கொண்டதினாலே அவள் வழியாகத் தமக்கு ஆறுதலுஞ் சந்தோஷமும் வந்தது. அப்படியே நீங்கள் கஸ்தியாய் இருக்கும்போது தேவமாதாவைப் பத்தியோடே வேண்டிக்கொள்ள வேணும். அவள் கஸ்திப்படுகிறவர்களுக்குத் தேற்றரவாய் இருக்கிறபடியினாலே அந்த உத்தம ஆண்டவளைத் தக்கவிதமாய் மன்றாடினால் உங்களுக்கு வந்த கஸ்தி அவள் வழியாக நீங்கி ஆறுதல் வருமென்று அறியக்கடவீர்களாக.



## ௲௬-ம் சனிக்கிழமைப்

### புதுமையாவது.

உயிரில்லாமல் செத்துப் பிறந்து புதைக்கப்பட்ட குழந்தையைத் தேவமாதா உயிர்ப்பித்து அதுக்கு ஞானஸ்நானம் பெறுவித்த அற்புதம்.

கம்பிராயியென்கிற பட்டணத்தின்கிட்டச் சந்திலாரியென்கிற ஊரிலே இருந்த பிர்மினுவென்கிற ஒரு பெண் தேவமாதாவின் பேரிலே மகா பத்தி உள்ளவளாய் அந்த ஆண்டவளுக்கு ஊழியம் பண்ணிக்கொண்டு வந்தாள்.

இப்படியிருக்கையிலே அந்தப் புண்ணியவதி ஒரு விசை கெற்பவதியாய் இருந்து பேறுகாலமான போது பிரசவிக்கமாட்டாமல் மகா கஸ்தி அநுபவித்த பிற்பாடு குழந்தை வயிற்றிலேதானே மடிந்து விழுந்தது. அந்தக் குழந்தை ஞானஸ்நானம் இல்லாமற் செத்ததென்று தாயானவள் நினைத்துச் சொல்லக்கூடாத கஸ்தி அநுபவித்தாள். அந்த வீட்டிலிருந்த அவளுடைய உறவின்முறையார் குழந்தையைக் கல்லறையிலே வைத்த பிற்பாடு அந்தக் குழந்தையினுடைய தாய்க்கு வேண்டிய மருந்துகளைக் கொடுத்து அவளுக்கு உதவியாயிருந்தார்கள். அவர்கள் எத்தனை மருந்து கொடுத்தாலுந் தன்னுடைய குழந்தை ஞானஸ்நானம் இல்லாமற் செத்தபடியினாலே மிகவுந் துக்கமாயிருந்தாள். இப்படியிருக்கையிலே அவள் தேவமாதாவின் பேரிலே

தன்னுடைய நம்பிக்கையெல்லாம் வைத்துத் தன க்குந் தன் குழந்தையினுடைய ஆத்துமத்துக் கும் உதவியாய் இருக்கத்தக்கதாக மகா பத்திச் சுறுசுறுப்போடே தேவமாதாவை வேண்டிக்கொண் டாள்.

இந்தப் பிரகாரமாய்ப் பதினைந்து நாள் வேண்டிக் கொண்ட பிற்பாடு தேவமாதாவின் உதவியினாலே புதுமையாகத் தன் குழந்தைக்கு உயிர் வருமென்று நம்பிக்கொண்டு தன் வீட்டிலே இருந்த உறவின் முறையானை அழைத்துக் குழந்தை உயிரோடே இருக்குதோ இல்லையோவென்று கல்லறையைத் திறந்து பார்க்கச் சொன்னாள். அவர்கள் அந்த வார் த்தையைப் பரியாசம் பண்ணி நீ சொன்னபடி 'நாங்கள் கேட்டால் எல்லோரும எங்களைப் பயித்தி யக்காரர் என்பார்களென்று அந்த வார்த்தைக்கு அவர்கள் சம்மதிக்கவில்லை. ஆனால் அந்தப் புண்ணி யவதி மெத்தக் கெஞ்சினதினாலே கடைசியாய் அவ ர்கள் சம்மதித்தார்கள். இதினாலே அந்த வீட்டிலே இருந்தவர்களுக்குள்ளே விசேஷமாய் முடியப்பனெ ன்கிற அந்தப் புண்ணியவதி புருஷன மண்வெட்டி எடுத்துக்கொண்டு கல்லறைக்குப் போய்க் கல்ல றையைத் திறக்கத் துவக்கினான். குழியின மண்ணை எடுத்துப் புறத்தியிலே போடுகிறபோது முந்த முந் தக் கால் பக்கத்தின் மண்ணை எடுத்துப் பார்க்கிற போது குழந்தையின் கால் சீவனுள்ள கால்போலே இருக்கிறதைக் கண்டு ஆச்சரியப்பட்டு மகா ஆசை யோடே மற்ற மண்ணெல்லாந் தள்ளி முகத்தைக் கண்டான். அந்த முகம் உயிருள்ளதாயிருக்கிறதை யும் இரண்டு உதடுகள் அசைகிறதையும் எல்லா ருங் கண்டு இது புதுமையென்று ஆச்சரியப்பட்டா ர்கள். விசேஷமாய் அந்தக் குழந்தையினுடைய தக

ப்பனுகிற முடியப்பனென்கிறவன் இதைக் கண்டு இரக்கத்தினுலேயுஞ் சந்தோஷத்தினுலேயும் அழு தான். உடனே சிலபேர்கள் சீக்கிரமாய்க் குழந்தை யினுடைய தாயிடத்திற்போய் இந்தச் சேதி சொன் னமாத்திரத்தில் அந்தப் புண்ணியவதி எம்மாத் திரஞ் சந்தோஷப்பட்டாள், தேவமாதாவுக்கு எம் மாத்திரந் தோத்திரம் பண்ணினுளென்று சொல்லக் கூடாது.

பிற்பாடு தாயானவள் அந்தக் குழந்தைக்குத் தா மதம் இல்லாமல் ஞானஸ்நானங் கொடுக்கிறதற் குக் குருவானவர் இருக்கிற ஸ்தலத்துக்கு அதைக் கொண்டுபோகச் சொன்னுள். உறவின் முறையார் அந்தக் குழந்தையை எடுத்துக்கொண்டார்கள். ஆ னல் குருவானவர் இருக்கிற ஊர் தூரமானதினுலே அன்றைக்குச் சூரியன் அஸ்தமித்த பிற்பாடு அங் கே சேர்ந்தார்கள். அப்போ தலைவாசற் கதவும் மற் றக் கதவுகளும் அடைத்திருந்தாலும் அந்தக் கதவு கள் புதுமையாகத் தானே திறந்ததினுலே குழந் தையை உள்ளே கொண்டுபோனுர்கள். குருவான வர் நடந்த சேதியையுந் தேவமாதாவினுலே சம்ப வித்த புதுமையையுங் கேட்டவுடனே ஆச்சரியப் பட்டுச் சர்தோஷத்தோடே உடனே குழந்தைக்கு ஞானஸ்நானங் கொடுக்க ஆயத்தம் பண்ணச் சொ ன்னுர். அப்போ குழந்தை மூக்கிலே இரத்தம் வந்த தினுல் சாகிறதற்கு அடையாளங் கண்டு தாமதம் இல்லாமல் ஞானஸ்நானங் கொடுத்தார்கள். ஞான ஸ்நானங் கொடுத்த பிற்பாடு அந்த இராத்திரிதானே குழந்தை செத்துப்போச்சுது. அந்தக் குழந்தை எந்த நேரத்திற் செத்துப்போச்சுதோ அந்த க்ஷண த்திலேதானே தூரமாயிருந்த தாய்க்கு முலைப்பால் வற்றிப்போச்சுது.

“கிறீஸ்துவர்களே, சமுத்திரத்திலே முத்துக் குளிக்கிறாப்போலே இப்போ கேட்ட புதுமையிலுள்ள ஞான முத்துகளை நீங்கள் கைக்கொள்ளவேணும். முந்த முந்த முன் சொல்லப்பட்ட குழந்தையினுடைய தாயானவள் குழந்தை செத்ததைப் பார்க்க ஞானஸ்நானம் இல்லாமல் செத்ததினாலே மகா கஸ்தி அநுபவித்துக் குழந்தை ஆத்துமத்துக்கு வந்த மோசம் நீங்கிப்போகத்தக்கதாகச் சுறுசுறுப்போடே தேவமாதாவை வேண்டிக்கொண்ட பிற்பாடு அந்தக் குழந்தை ஞானஸ்நானம் பெறுகிறதைக் குறித்துப் பூலோகத்துக்கு ஆண்டவள் இந்தப் புதுமை பண்ணினாளென்று கேட்டீர்களே. ஆகையால் குழந்தை ஞானஸ்நானம் இல்லாமற் சாகிறது கனமான பொல்லாப்பென்றுங் குழந்தை சாகிறதற்கு முந்தி ஞானஸ்நானம் பெறுகிறது கனமான நன்மையென்றும் இந்தப் புதுமையைக்கொண்டு நீங்கள் ஒத்துக்கொள்ளவேணும்.

ஐயையோ! இந்தக் காரியத்திலே சில பெண்பிள்ளைகளும் ஆண்பிள்ளைகளும் மெத்த அசட்டையாய் இருக்கிறதினாலே சில குழந்தைகள் ஞானஸ்நானம் இல்லாமல் இருந்து அந்தப்பிரகாரமாய்ச் சாகிறதுண்டு. இப்படிக்கொத்த குழந்தைகளுக்குத் தாயின் சோம்பலினாலே அல்லோ மோட்சபாக்கியம் வரவில்லை. இது கொஞ்சமான பொல்லாப்போ? அந்தப் பாவத்துக்குத் தாயானவள் சர்வேசுரனுக்குக் கடினமான கணக்குச் சொல்லவேணும். அதேதென்றால் பிறந்த குழந்தைக்குண்டான வியாதிக்கு மருந்து செய்யத்தக்கதாக வயித்தியர் தூரமாய் இருந்தாலும் தாய் அங்கே கொண்டுபோவாள். ஆகையால் குழந்தையின் சரீரம் பிழைக்கிறதற்கு நடை வெயில் பாராமல் பிரயாசப் படுகிறாள். அல்லது

அனுப்புவாள். ஆனால் குழந்தை ஆத்துமம் ஞானஸ்நானத்தின் வழியாகப் பிழைக்கிறதற்குக் குருவானவர் கிட்ட இருந்தாலுந் தூரத்திலே இருந்தாலும அங்கே கொண்டுபோகாமல் இருக்கிறார்கள். ஆனபடியினாலே தீங்கைமாரோ, குழந்தைகளுக்குச் சீக்கிரமாய் ஞானஸ்நானங் கொடுப்பிக்கப் பிரயாசப்படவேணும்.

இரண்டாவது. முன் சொல்லப்பட்ட புதுமையிலே தாயானவள் செத்த குழந்தைக்கு உயிர் வரத்தக்கதாகத் தேவமாதாவினது அடைக்கலமாய்ப் போய்ப் பதினைந்து நாள் மகா பத்திச் சுறுசுறுப்போடே சம்மனசுகளுடைய இராக்கினியை வேண்டிக்கொண்டதினாலே அந்தக் குழந்தைக்குப் புதுமையாக உயிர் வந்ததென்று சொன்னோமே. ஆகையால் பாவியே நீ செய்த கனமான பாவத்தினாலே செத்துப்போன உன் ஆத்துமத்துக்கு ஞான உயிராகிற இஷ்டப்பிரசாதம வருகிறதற்குத் தேவமாதாவை மகா பத்திச் சுறுசுறுப்போடே மன்றாடவேண்டியிருக்கிறது. அதேதென்றால் செத்துப்போன சரீரத்துக்குப் புதுமையாக உயிர் வருகிறதைப் பார்க்கப் பாவியின் ஆத்துமத்துக்கு ஞான உயிராகிற இஷ்டப்பிரசாதம் வருகிறது பெரிய புதுமை என்று அர்ச். தோமாசு எழுதிவைத்தார். இதினாலே பாவிக்கு அடைக்கலமானவளை இது காரியத்தில் அடிக்கடி வேண்டிக்கொள்ளவேணும்.

மூன்றாவது. முன் சொல்லப்பட்ட குழந்தை கல்லறையிலே பதினைந்து நாள் இருந்த பிற்பாடு அந்தக் குழந்தையின் தாயினுடைய அழுகையுள்ள வேண்டுதல் சேர்ந்த நம்பிக்கையைத் தேவமாதா பார்த்துத் தம்முடைய வல்லபத்தினாலே அந்தக் குழந்தைக்கு உயிர் வரப்பண்ணினாள். ஆகையால்

பூலோகத்துக்கு ஆண்டவளுக்கு மகா வல்லபமும் இரக்கமும் விளங்குகிறதென்று நீங்கள் நினைத்திருக்கவேணும். இதினாலே உங்களுக்கு எந்தெந்தக் கனமான கஸ்தி வந்தாலும் அது நீங்கிப் போகத்தக்கதாகக் கோணங்கி மந்திரம் முதலான பசாசின் காரியஞ் செய்யாமல் மோக்ஷத்துக்கு இராக்கினியை நம்பிக்கொண்டு மகா அழுகையோடேயுஞ் சுறுசுறுப்போடேயும் இடைவிடாமல் நீங்கள் அவளை வேண்டிக்கொண்டால் அவளுடைய இரக்கத்தின் பெலத்தினாலே உங்களுக்கு வந்த கஸ்தி நீங்கிப்போமென்று அறியக்கடவீர்களாக.

## ௩௫-ம் சனிக்கிழமைப்

புதுமையாவது.



தேவமாதாவின் மன்றாட்டினால் மனந்திரும்பக் கெடு பெற்ற பாவி திரும்பத் திரும்பப் பாவத்தில் விழுந்ததினாலே அடைந்த நிர்ப்பாக்கியமான சாவு.

இஸ்பானியா இராச்சியத்திலே சின்ன ஊரிலே இருந்த மகா பத்தியுள்ள ஒரு கன்னியாஸ்திரி ஒரு சமயத்திலே தியானத்திலே இருக்கிறபோது கண்டதெரிசனமாவது: அந்த ஊரிலே இருந்த ஒருத்தனுக்குத் தனித்தீர்வை இடுகிறதற்குச் சேசுநாதர் மகா கோபத்தோடே எழுந்திருந்து அவனைத் தமது சன்னதியிலே கூட்டிவரச் சொன்னார். அவனிடத்திலே

அநேக பாவங்களும் விசேஷமாய் மோக பாவும் இருந்ததினாலே அவனுக்கு ஆக்கினையாக அவன் இருதயத்திலே குத்தெடுக்கிற வியாதி வரவும் அந்த வியாதியினாலே அவன் செத்துப்போன பிற்பாடு நரகத்திலே போகவுஞ் சேசுநாதர் அவனுக்குத் தீர்வையிட்டார். அந்தச் சமயத்திலே அங்கே தேவமாதா காண்பித்துத் தம்முடைய திருக்குமாரனை மன்றாடினதாவது: என் சேசுநாதரே உம்மாலே தீர்வை இடப்பட்ட அவன் தான் செய்த பாவத்தினால் நரகத்துக்குப் போகிறதற்குப் பாத்திரந்தானே, ஆனால் அவன் என்பேரிலே பத்தியாயிருந்து என்னுடைய கோயிலைச் சிலவிசைச் சேவித்து என்னுடைய சுரூபங்களை அலங்கரித்தான். இது முகாந்தரமாகத் தேவரீர் என்னைக் குறித்து அவன் பேரிலே இரக்கமாயிருக்க நான் உம்மை மன்றாடுகிறேனென்று சொன்னதற்குக் கர்த்தர் திருவுளம் பற்றினதாவது: உம்மைக் குறித்து அவன் இப்போ சாகவேண்டாம். அவனுடைய மனந் திரும்பத் தக்கதாக இன்னம் முப்பது நாள் அவன் சீவனோடே பூலோகத்தில் இருக்கட்டும். அந்தக் கெடுவுக்குள்ளாக அவன் திரும்பாமல் பாவ வழியிலே நடந்தால் முப்பதாநாள் முந்தி அவனுக்கு நாம் இட்ட தீர்வையின்படியே ஆகக்கடவதென்று திருவுளம்பற்றினார்.

இப்படிக் கர்த்தர் சொன்ன பிற்பாடு தெரிசனங் காண்கிற முன் சொல்லப்பட்ட கன்னியாஸ்திரியை ஆண்டவர் பார்த்துத் திருவுளம் பற்றினதாவது: நீ தாமதம் இல்லாமல் நம்முடைய சபையில் உட்பட்ட இன்னா குருவின் கிட்டப்போய் நீ கண்ட இந்தத் தெரிசனத்தைச் சொல்லு. அந்தக் குருதானே தீர்வையிடப்பட்ட பாவியின் கிட்டப்போய் அவன் மன்று திரும்பத்தக்கதாக நடந்த சேதியை அவனு

க்கு வெளிப்படுத்திப் புத்தி சொல்லவேணுமென்று திருவுளம் பற்றினர். அப்படியே அந்தப் புண்ணிய வதி தாமதம் இல்லாமல் குறிக்கப்பட்ட குருவிடத் திற் போய் நடந்த சேதியை வெளிப்படுத்தினள். ஆனல் குருவானவர் அவள் கனவு கண்டாளென்று நினைத்து அவள் சொன்ன சேதியை விசுவசிக்க வில்லே. பின்பு இரண்டாம் விசையுங் கர்த்தர் அந்தப் பெண்பிள்ளைக்குக் காண்பித்து அவள் சொன்ன சேதியைக் குருவானவர் விசுவசிக்கத்தக்கதாக அந் தக் குருவானவருடைய இரகசிய நினைவை அவரு க்கு அறிவித்து அந்தச் சேதியை அவருக்குச் சொ ல்லி முன நடந்த சேதியையுஞ் சொல்லக் கட்டளை இட்டார். இப்படி அந்தப் புண்ணியவதி சொன்னதி னலே அவளுடைய வார்த்தையைக் குருவானவர் விசுவசித்துத் தான் சொல்லுகிற புத்தியை அந்தப் பாவி கேட்கத்தக்கதாக ஒரு பூசையும பண்ணினர்.

அதற்குப் பிற்பாடு குருவானவர் அவனிடத்திற் போகிறசமயத்திலே அவன்தானே வலிய அவரிடத் தில் வந்தான். குருவானவர் தனியே அவனுக்கு நடந்த சேதிகளெல்லாஞ் சொன்ன பிற்பாடு அவன் மனந் திரும்புகிறதற்கான புத்திகளை எல்லாஞ் சொ ன்னர். அவன் தன்னுடைய இரகசிய பாவங்களைக் குருவானவர் வெளிப்படுத்தின படியினலே அவர் சொன்ன சேதியெல்லாம் மெய்யென்று விசுவசித் துத் தேவமாதா தனக்கு அந்தச் சமயத்திலே செய்த சகாயத்துக்கு ஆன தோத்திரம் பண்ணின தும் அல்லாமல் தான் செய்த பாவத்துக்கு மகா மனஸ்தாபமாய் இருந்து மனது திரும்பி அந்தக் குருவானவர் இடத்திலே தானே நல்ல பாவசங்கீர் த்தனம் பண்ணினன். அவன் தன்னுடைய வீட்டுக் குப் போன பிற்பாடு தான் செய்த மோகபாவத்துக்

குக் காரணமாகிற தன் உறவின் முறையாளானு ஒரு பெண்பிள்ளை அந்த வீட்டிலே இருந்ததினுலே கொஞ்ச நாளைக்குப் பிற்பாடு திரும்ப அந்தப் பாவ த்திலேதானே விழுந்தான். பின்னேயும் மனஸ்தாபப் பட்டு அழுதுகொண்டு இரண்டாம் விசையும் பாவச ங்கீர்த்தனம் பண்ணினுன்.

பிற்பாடு ஆகாத வழக்கத்தினுலே அந்தப் பாவத் திலேதானே அவன் சிலவிசை விழுந்ததும் அல்லா மல் திரும்பக் குருவானவரிடத்திற் பாவசங்கீர்த் தனம் பண்ண வெட்கப்பட்டதினுலே போகாமல் இருந்தான். ஆகிலுங் குருவானவர் அவனைக் கைவி டாமல் அவனுக்குப் புத்தி சொல்லத்தக்கதாக அவ னுடைய வீட்டுக்குப் போனுர். ஆனுல் அந்தப் பாவ த்தைவிட அவனுக்கு மனதில்லாததினுலே குருவா னவருக்கு இடங்கொடாமல் போகச் சொன்னுன். ஆகிலுங் குருவானவர் அவனுக்காகத் தினந் தேவ மாதாவைப் பார்த்து வேண்டிக்கொண்டதுமல்லா மல் முப்பதாநாளின் கெடுவன்றைக்கு அவனுடைய வீட்டுக்குப் போனுர். அவன் தம்முடைய பேச்சு க்கு இடங்கொடாமல் இருக்கிறதைக் கண்டு அவனு டைய ஊழியக்காரரைப் பார்த்துக் குருவானவர் சொன்னதாவது: உங்கள் எசமான் ஒன்றாய் இருந் தாலும் இராத்திரிக்குள்ளாக மயக்கம் அல்லது யாதொரு வியாதி வந்தால் உடனே தாமதம் இல்லா மல் ஓட்டமாய் வந்து நமக்கு அறிவியுங்கள் என்று சொல்லித் தம்முடைய மடத்துக்குப் போனுர்.

அன்றுதானே சூரியன் அஸ்தமித்து நாலைந்து நாழிகைக்குப் பிற்பாடு முன் தீர்வையிடப்பட்ட அந்தப் பாவிக்கு இருக்தாப்போலே நெஞ்சிலே இருதயத்துக்குச் செவ்வே குத்தெடுத்ததினுலே அ டிபட்ட பாம்புபோலே கிடந்து புரண்டான். ஊழி

யக்காரர் இதைக் கண்டு தங்களுக்குள்ளே ஒருவன் குருவிருக்கிற மடத்துக்கு ஓட்டமாய்ப்போய் நடந்த சேதியை அவருக்குச் சொல்லவே அவரும வெகு தீவிரமாய் வந்தார். அவர் வந்து சேர்ந்த உடனே சர்வேசுரனுடைய அளவில்லாத தயையை யுஞ் சேசுநாதர் பாடுபட்டதின் அளவற்ற பலனை யுந் தேவமாதாவினுடைய கிருபையையும அவஸ் தைக்காரனுக்கு வெளிபபடுத்தி அவன் நல்ல பாவ சங்கீர்த்தனம பண்ணப் புத்தி சொன்னார். ஆனால் அவன் நமபிக்கை இல்லாததினாலே குருவானவர் சொன்ன புத்திக்கு இடங்கொடாமல் போனான். கெடுபபடிக்கு முப்பதாநாள் நடுச்சாமத்திலே அவன் ஐயோவென்று கூப்பிட்டு அலறிச் சர்வேசுரன் கட்டளையிட்டதின்படியே இருதயத்தின் குத்தினாற் சாகிறேனென்று சொல்லி ஒரு பெரிய நாய் குத்துப் பட்டுச் செத்தாபபோலே நிர்ப்பாக்கியனாய்ச் செத் தான்.

கிறீஸ்துவர்களே, எசமான் நந்தவனத்திலே புஷ் பங்கள் எடுக்கிறாப்போலே நீங்கள் இப்போ கேட்ட புதுமையில் உள்ள ஞான புஷ்பங்களை எடுக்கவே ணும. முந்தமுந்த இப்போ சொல்லப்பட்ட பாவி தான் நரகத்திலே போகிறதற்குத் தேவமாதாவின் பேரிலே முறைபபட இடமில்லை என்று நீங்கள் கெட்டியாய் நினைக்கவேணும். அதேனென்றால் மோட்ச ராக்கினியைக் குறித்து அவன் பண்ணின சில புண்ணியங்களுக்காக அவனுடைய மனது திரும்பத் தேவமாதா தமது திருக்குமாரனை மன்றாடி அவன் அன்றைக்குச் சாகாமல் பின்னேயு முப்பதுநாள் இருக்கப் பண்ணிக் குருவின் வழியாகப் புத்தியுஞ் சொல்லிப்பார்த்து இது முதலான அநேகஞ் சகா யம் பண்ணினாளென்று கேட்டீர்களே. இதினாலே

நீங்கள் கேட்ட புதுமையைக்கொண்டு தேவமாதா வின் பேரிலே பத்தியும் பாவத்துக்குப் பயமும் உங் களுக்கு வரவேணும். அதேதெனென்றால் பூலோகத்து க்கு ஆண்டவளைக் குறித்து நீங்கள் சில புண்ணியங் களைப் பண்ணிக்கொண்டு வந்தால் நீங்கள் பாவத்தை விடவுந் தபசு பண்ணவும் அநேகம் வழியாய்த் தேவமாதா உங்களுக்கு உதவிசெய்வாள் என்கிறதற் குச் சந்தேகமில்லை. இதினாலே நீங்கள் மன்று பொருந்திச் சம்மனசுகளுடைய இராக்கினிக்கு ஊ ழியம் பண்ணவேணும்.

இரண்டாவது. நீங்கள் பாவத்தை விடுகிறதற்குத் தேவமாதாவின் உதவியினாலே உங்களுக்கு நல்ல நினைவு வந்தால் செவிடனுகை முன் சொல்லப்பட்ட பாவியைப்போலே அசட்டையாய் இராதேயுங்கள்.

மூன்றாவது. தம்பி, நீ செய்த கனமான பாவத்தி னாலே செத்து நரகத்திலே போக அநேக நாள் பாத் திரமாய் இருந்தாயே, ஆனால் தேவமாதாவைக் குறி த்து நீ சிலவிசை, சனிக்கிழமை ஒருசந்தியாய் இரு ந்ததினாலேயும் பிச்சை கொடுத்ததினாலேயும் வெவ் வேறே புண்ணியங்களைப் பண்ணினதினாலேயும் உ னைக் குறித்து மோட்ச இராக்கினியானவள் உன க்காகத் தமது திருக்குமாரனை மன்றாடினதினாலே நீ இன்னஞ் சீவனோடே இருக்கிறாய். சர்வேசுரன் உனக்குக் கொடுத்த இந்தக் காலம் நீ தபசு பண் ணக் கொடுத்ததேயல்லாமல் பாவஞ் செய்யக் கொடு த்ததல்ல. இதினாலே சர்வேசுரன் உனக்குக் குறித் திருக்கிற கேடு வருகிறதற்கு முன்னே பாவத்தை விட்டுத் தபசு பண்ணவேணும்.

நாலாவது. இப்போது நீங்கள் கேட்ட புதுமை யினாலே உங்களுக்குப் பாவத்தின்மேல் பயம் வர வேணுமென்று சொன்னோமே. முன் சொல்லப்ப

ட்ட பாவி எத்தனை புத்தி கேட்டாலும் பாவத்திலே பழகினதினாலே அதுகளைத் தள்ளாமற் கெட்டுப் போனான். இப்படிக்கொத்த கேடு உங்களுக்கு வராதபடிக்குச் சாவான பாவஞ் செய்யப் பழகவேண்டாம். விசேஷமாய் மோக பாவத்தின் பழக்கமாகாது. அதினாலே மனது ஒரு கல்லுப்போலே கெட்டியாய்ப் போமென்கிறதினாலே அப்படிக்கொத்த பாவி திரும்புகிறது கஷ்டமென்கிறதுக்குச் சந்தேகமில்லை. கடைசியிலே நீங்கள் இப்போ கேட்ட புதுமையிலே பாவத்துக்கும் பிராணத்தின் முகாந்தரத்துக்கும் விசேஷமாய் பாவத்தின் கிட்டின சமயத்துக்கும் நீங்கள் மிகவும் பயந்து நடக்கவேணும். இதினாலே நீங்கள் மோட்சக் கரை ஏறத்தக்கதாகப் பாவத்தையும் பாவத்துக்குக் கிட்டின தறுவாய்களையும் விடவேணும். ஆதலால் தங்களுக்குள் பாவப் பழக்கமுள்ளவர்கள் ஒரே வீட்டிலே வாசமாய் இருக்கலாகாதென்று நன்றாய் அறியக்கடவீர்களாக.



## ௩௬-ம் சனிக்கிழமைப்

### புதுமையாவது.

தேவமாதாவின் சுரூபத்துக்குப் பூமாலையைச் சூட்டிவந்த இடைச்சியின் மரணத்திலே கிடைத்த அற்புதமான தரிசனம்.

உத்திராதி இராச்சியத்திலே இடையர் கோத்திரத்திலே பிறந்த ஒரு பெண்பிள்ளை மகா சவுந்தரியமுள்ளவளாய் இருந்தாள். அவள் நல்ல புண்ணியவதியாய் இருந்தபடியினாலே அவளுடைய சரீரத்திலிருந்த அலங்காரத்தைப் பார்க்க அவள் ஆத்துமத்திலே அதிக அலங்காரமுள்ளவளாய் இருந்தாள். அதெப்படியென்றால் அந்தப் புண்ணியவதி தன் தகப்பன சொற்படிக்கு ஆடுகளை மேய்த்தாலும் மோட்சராக்கினி பேரிலே மகா பத்தியாய் இருந்ததினாலே காட்டிலே ஆடுகளை மேய்க்கிறபோதுதானே கையினாலே தேவமாதாவை மன்றாடச் செபமாலையைப் பிடித்துச் செபம் பண்ணிக்கொண்டு வருவாள். இதல்லாமல் காட்டுக்குள்ளே ஆடுகளை மேய்க்கிற ஸ்தலத்திலே பழசாயிருந்த ஒரு கோயிலிலே பீடத்தின் பேரிலே இருந்த தேவமாதாவின் சுரூபத்தைக் கண்டு மகா சந்தோஷப்பட்டதும் அல்லாமல் அந்தக் கோயிலிலே அடிக்கடி போய் அந்தச் சுரூபத்தின் முன்பாக முழுங்காலிலே இருந்து மகா புத்தியோடேயும் வணக்கத்தோடேயும் பூலோகத்தின் ஆண்டவளைத் தோத்திரித்து அநேக நேரம் வேண்டிக்கொள்ளுவாள். ஆனால் இந்தச் சந்தோஷத்துக்குள்ளே அவள் மனதிலே ஒரு கஸ்தி இருந்தது.

அதாவது: இராசாங்கம் பண்ணுகிற அந்த இராக்கினிமேலே விலையேறப்பெற்ற வஸ்திரங்களும் வெகு நேர்த்தியான உடைமைகளும் இருக்கையிலே மோட்சவிராக்கினியின் சாயலாகிய இந்தச் சுரூபத்தின் மேலே நல்ல வஸ்திரங்களும் உடைமைகளும் இல்லாதிருக்கலாமோவென்று கஸ்தி அடைந்துகொண்டிருந்தாள். இந்தக் குறை தீரத்தக்கதாகத் தன் கையினாலேதானே நூல் நூற்று அதினாலே ஒரு வஸ்திரம் உண்டாக்கவேணுமென்று அந்த வேலை செய்யத் துவக்கினாள். ஆனால் அதினாலே நாட செல்லுமென்று நினைத்து அந்த வேலையை விட்டு வேறே ஒரு நல்ல நினைவு எடுத்தாள். அதேதென்றால் என் ஆண்டவளுடைய சுரூபத்தை நவரத்தினங்களினாலே அலங்கரிக்கிறதற்கு என்னாலே கூடாததினாலே நல்ல புஷ்பங்களைக் கொண்டு சிங்காரிப்பேனென்று நினைத்த பிரகாரம் அங்கே சுற்றித் திரிந்து நல்ல புஷ்பங்களைப் பறித்து அதினாலே மாலை கட்டிக்கொண்டு போய்ச் சுரூபத்தின் முன்பாகச் சாஷ்டாங்கமாக வணங்கி வேண்டிக்கொண்டதாவது:

என் ஆண்டவளே, தேவரீருடைய அடியாள் உம்முடைய திருப்பாதத்திலே இதோ வந்தேன். தேவரீர் பூலோகத்துக்கு ஆண்டவளாய் இருக்கையிலே உம்முடைய சுரூபம் உடைமை இல்லாதிருக்கிறதைக் கண்டு சொல்லக்கூடாத கஸ்தி அநுபவிக்கிறேன். இது முகாந்தரமாக நான் ஆஸ்திக்காரியாய் இருக்க ஆசைப்படுகிறேன். ஆனால் எனக்கு வகையொன்றும் இல்லாததினாலே இந்தப் புஷ்பங்கள் அல்லாமல் வேறே உடைமை சம்பாதிக்க இடமில்லை. தேவரீர் உம்முடைய தயவினாலே இந்தக் காணிக்கையின் பேரில் பட்சமாயிருக்கவேணுமெ

ன்று சொல்லி எழுந்திருந்து பீடத்தின்மேலேறி மகா ஒடுக்க வணக்கத்தோடே அந்த மாலையைத் தேவமாதாவின் கழுத்திலே போட்டாள். பிற்பாடு சாஷ்டாங்கமாக வணங்கி மகா சந்தோஷத்தோடே அப்பாலே போனாள். இப்படி அந்த மாலை வாடிப் போன பிற்பாடு வேறே மாலை கட்டிப் போட்டுக் கொண்டு வருவாள்.

இப்படி இருக்கையிலே அவளுக்குக் காய்ச்சல் வந்து அந்தக் காய்ச்சலினாலே கொஞ்ச நாளைக்குள்ளே அவஸ்தையாச்சுது. அந்தச் சமயத்திலே அர்ச். பிராஞ்சீஸ்கு சபையில் உட்பட்ட இரண்டு சந்நியாசிகள் பயணம போகிறபோது வழியில் ஒரு மரத்தின் நிழலிலே இளைபபாறிக்கொணடிருந்தார்கள். அவர்களுக்குள்ளே ஒருத்தர் நித்திரைபோகவே வேறே ஒருத்தர் செபம பண்ணினார். இபபடி இருக்கையிலே செபம பண்ணுகிற சநநியாசியார் தாங்கள் இருக்கிற மரத்தோரமாய் மகா மகிமையுள்ள ஒரு பெரிய இராக்கினியும அவள் பிறகே சில கன்னியாஸ்திரிகளும் போகிறதைக் கண்டு ஆச்சரியப்பட்டு அவர்கள் கிட்டப்போய் நீஙகளார்? எஙகே போகிறீர்களென்று கேட்டார். இதற்கு அவர்களுக்குள்ளே மகிமையுள்ள அந்த இராக்கினி அந்தச் சநநியாசியாரைப் பார்த்து நாம சர்வேசுரனுடைய மாதாவாய் இருக்கிறோம். நம்மோடே கூட்வருகிறவர்கள் கன்னியாஸ்திரிகள். இதோ கிட்டத்திலே ஒரு குச்சிலே நமக்குப் பிரியமுள்ள ஒரு இடைச்சி அவஸ்தையாய் இருக்கிறாள். அவள் நன்றாயிருக்கிறபோது நம்முடைய சுரூபத்தை அடிக்கடி பார்க்கவந்தாள். நாமிப்போ அவளைப் பார்க்கப் போகிறோமென்று சொல்லி அப்புறம் போனார்கள்.

அப்போது அந்தச் சந்நியாசியார் நித்திரை போகிற வேறே சந்நியாசியாரை உடனே எழுப்பினார்.

அவர் விழித்தவுடனே தன்னை எழுப்பினவனைப் பார்த்து முறைப்பட்டாப்போலே சொன்னதாவது: என்னை ஏன் எழுப்பினீர்? நான் இந்த மரத்தோரமாய் அலங்காரமுள்ள ஒரு இராக்கினியுஞ் சில கன்னியாஸ்திரீகளுங் கூட்டமாய்ப் போகிறதைத் தெரிசித்தேனென்றார். அப்போது அந்தச் சந்நியாசியார் நடந்த சேதியெல்லாம் வெளிப்படுத்தி நீர் நித்திரை போகாமல் விழித்திருந்தால் நான் கண்ட தெரிசனமெல்லாம் நீரும இப்போது கண்ணாலே காணலாமெனறு சொன்னார். பிற்பாடு இந்த இரண்டு சந்நியாசிகளுமெ எழுந்திருந்து தேவமாதாவுங கன்னியாஸ்திரீகளும போன திசையிலே போய் மோக்ஷத்துக்கு இராக்கினியானவள் சொன்ன அந்த இடைப் பெண்பிள்ளையைத் தேடினார்கள். இப்படி அநேகநேரந் தேடிச் சுற்றிப்பார்த்த பிற்பாடு ஒரு சின்ன குச்சுக்குள்ளே வைக்கோலின் மேலே கொஞ்ச வயதுள்ள ஒரு பெண்பிள்ளை படுத்துக்கொண்டிருக்கிறதையும அவளிடத்திலே உண்டான அவஸ்தை அடையாளத்தையுங் கண்டார்கள்.

இதல்லாமல் அவளிடத்திற் பூலோகத்துக்கு ஆண்டவள் தன் கையிலே புஷ்பத்தினாலே உண்டாக்கப்பட்ட ஒரு நல்ல முடி வைத்திருக்கிறதையுஞ் சுற்றி இருக்கிற கன்னியாஸ்திரீகளுக்குள்ளே ஒரு கன்னியாஸ்திரீ வெள்ளைச் சேலையினாலே அந்த அவஸ்தைக்காரியினுடைய நெற்றியிலே வேர்க்கிற வேர்வையைத் துடைக்கிறதையும் மற்றக் கன்னியாஸ்திரீகள் அவளுக்குச் சேசு மரியாயி சூசையென்கிற திருநாமத்தை அடிக்கடி சொல்லுகிறதையுங் கண்டார்கள்.

இப்படியிருக்கையிலே அந்த மோட்ச வாசிகள் நல்ல பாட்டுகளைப் பாடினார்கள். அப்போது அந்த

அவஸ்தைக்காரி தேவமாதாவை மகா சந்தோஷத்தோடு அண்ணார்ந்து பார்த்துக்கொண்டிருக்கிறபோது நல்ல ஆயத்தத்தோடே பாக்கியமான மரணமடைந்தாள். அந்தச் சமயத்திலே சம்மனசுகளுடைய இராக்கினியானவள் தமது கையிலே இருக்கிற புஷ்பத்தின் முடியை அந்த அவஸ்தைக்காரி தலைமேலே வைத்து அவள் ஆத்துமம் பிரிந்தவுடனே அந்த ஆத்துமத்தைத் தமது திருக் கையினாலே பிடித்துக் கன்னியாஸ்திரீகள் கூட்டத்தோடே மோக்ஷவிராச்சியத்துக்குக் கூட்டிக்கொண்டு போகிறதை இந்த இரண்டு சந்நியாசிகளுங் கண்டார்கள்.

கிறீஸ்துவர்களே, தேனீயானது புஷ்பங்களிலே இருக்கிற இரசங்களை எடுத்துத் தேன் கூட்டுகிறாப்போலே இப்போ நீங்கள் கேட்ட புதுமையிலுள்ள பற்பல ஞானப் பிரயோசனமாகிற இரசங்களை நீங்கள் எடுத்து உங்கள் ஆத்துமத்திலே ஞானத் தேன் உண்டாக்கவேணும். முந்த முந்த இந்தப் புதுமையிலே சொல்லப்பட்ட இடைப் பெண்பிள்ளை காட்டிலே இருந்தாலும் நல்ல புண்ணியங்களைப் பண்ணினாளென்று கேட்டீர்களே. அந்தப் பிரகாரமாய் நீங்களும் நடக்கவேணும். புண்ணியம் பண்ணாதவர்கள் சொல்லுகிற போக்காவது: எப்போதும காட்டிலே வேலை செய்கிறேன், பாளையத்திலே திரிகிறேன், பயிரிடுகிறேன், வீட்டு வேலை திரளாய்ச் செய்கிறேன், இதினாலே செபம் பண்ணவும் வெவ்வேறே புண்ணியங்களைச் செய்யவும் நேரமும் அதற்கானவிடமும் இல்லையென்பார்கள். இப்படிக்கொத்த போக்குச் சொல்ல இடமில்லை. அதேதென்றால் நல்ல மனது உண்டானால் அந்தத் தொழிலிலே அந்த ஸ்தலத்திலே முன் சொன்ன இடைப் பெண்

பிள்ளையைப்போலே செபமும் மற்றப் புண்ணியங்களும் பண்ணலாம்.

இரண்டாவது. முன் சொல்லப்பட்ட அந்தப் பெண்பிள்ளை தேவமாதாவின் சுரூபத்தைப் பார்க்கத் தக்கதாக அவளுடைய கோயிலுக்கு அடிக்கடி போனதினாலே அந்தப் பெண்பிள்ளை அவஸ்தையாய் இருக்கிறபோது மோட்சராக்கினி அவளுடைய குச்சுக்குள்ளே போய் அவளுக்கு அநேகஞ் சகாயம் பண்ணினாளென்று சொன்னோமே. ஆகையால் நீங்கள் அவஸ்தையாய் இருக்கும்போது சம்மனசுகளுடைய இராக்கினியானவள் உதவி உங்கள் வீட்டுக்கு வரத்தக்கதாக நீங்கள் நன்றாய் இருக்கிறபோது தேவமாதாவினுடைய கோயிலிலே அடிக்கடி போய் அவள் சுரூபத்தை மகா பத்தியோடே தெரிசனை பண்ணவேணும்.

மூன்றாவது. முன் சொல்லப்பட்ட பெண்பிள்ளை பூலோகத்துக்கு ஆண்டவளுக்கு அநேக ஊழியம் பண்ணின பிற்பாடு அவளுக்கு லோகத்தினுடைய நன்மை வராமல் காய்ச்சலுஞ் சாவும் வந்தாலும் அவள் முறைப்படாமல் பொறுமையாய் இருந்தாள் அல்லோ? அதினாலே மேலான நன்மைகள் அவளுக்கு வந்தது. ஆனால் ஐயையோ! தேவமாதாவைக் குறித்துக் கொஞ்சம் புண்ணியம் பண்ணின சிலபேர்கள் தங்களுக்கு இக்கட்டு கஸ்திவந்த சமயத்திலே நான் அநேகமுறை தேவமாதாவைக் குறித்துச் செபம் பண்ணி ஒருசந்தி முதலான மற்றப் புண்ணியங்களைச் செய்திருக்க எனக்கு இந்த இக்கட்டு கஸ்தி வரலாமோ? தேவமாதாவுக்குக் கண்ணில்லையோ என்று சொல்லி முறைப்படுவார்கள். இப்படிக்கொத்த தேவ தூஷணஞ் சொல்லுகிறவர்க்கு முழுதும் அறுபடுகிறதற்கு அவர்கள் பாத்திரந்தானே

என்கிறதற்குச் சந்தேகமில்லை நீங்கள் இப்படிக் கொத்தவர்களைப் போலே நடவாமல் எந்தெந்தக் கஸ்தி வந்தாலும் முன் சொல்லப்பட்ட பெண்பிள் ளையைப போலே முறைப்படாமல் பொறுமையாய் இருக்கவேணும்.

கண்டசியிலே சமமனசுகளுடைய இராக்கினியா னவள் தமமைக் குறித்து முன் சொல்லப்பட்ட பெண்பிள்ளை பண்ணின புண்ணியஙகளுக்குப் பல னுக அழிந்துபோகிற நன்மைகளை அவளுக்குக் கொ டாமல் அழியாத பாக்கியமாகிற நல்ல மரணமும மோட்சபாக்கியமுங கட்டளையிட்டாள் இப்படி நீங்கள் அழிந்துபோகிற பாக்கியத்தின் பேரிலே ஆசை வையாமல் அழியாத பாக்கியத்தின் பேரிலே ஆசைவைக்கிறதுந் தவிர மனது பொருந்தித் தேவ மாதாவுக்கு நல்ல ஊழியம பண்ணவேணும. அதே தென்றால் இப்படிக்கொத்த பெரிய ஆண்டவளைக் குறித்து நீங்கள் புண்ணியஙகளைப் பண்ணினுல் அவ ளவழியாக முன் சொல்லப்பட்ட பெண்பிள்ளைக்கு வந்த மெய்யான பாக்கியம உஙகளுக்கும வருமெ ன்று நம்பிக்கையாய் இருக்கக்கடவீர்களாக.



## ௩௭-ம் சனிக்கிழமைப்

புதுமையாவது.



தேவமாதாவின் பேரை முழுதும்
விடாததைப்பற்றி ஒருத்தி பசாசின் வசத்திலே
நின்று இரட்சிக்கப்பட்ட
அற்புதம்.

கர்த்தர் மனுஷாவதாரம் பண்ணி ஆயிரத்து நானூற்று அறுபத்தைந்தாம் வருஷத்திலே குயல் திரியாவென்கிற நாட்டிலே ஒரு சின்ன கிராமத்திலே ஜில்பேர்த்தென்றொரு குருவானவர் இருந்தார். அவர் ஒருநாள் தம்முடைய தமையன் மகளாகிற மரியாயி என்கிறவளைப் பார்த்துச் சொன்னதாவது: நீ இன்று சந்தைக்குப்போய் நமக்கு வேண்டிய இன்னின்ன வஸ்து வாங்கிக்கொண்டுவா, ஆனால் அங்கேதானே சூரியன் அஸ்தமித்தால் இருட்டிலே வராதே, இராத்திரிக்கு அங்கே இருக்கிற உன்னுடைய அத்தைவீட்டிலே இருந்து நாளைக்கு இங்கே வாவென்று சொன்னார். அந்தப் பிரகாரமாய் மரியாயி என்கிறவள் சந்தைக்குப் போய்ச் செலவுவாங்கின பிற்பாடு சூரியன் அஸ்தமித்ததைக் கண்டு தன்னுடைய அத்தை வீட்டிலே போனாள். அன்றைக்கு அவளுடைய அத்தை புறத்தியாரோடே சண்டைபண்ணிக் கோபமாய் இருந்தபடியினாலே மரியாயி என்கிறவளைத் தன் வீட்டுக்கு வரவிடாமல் தள்ளினாள். அந்த மரியாயி என்கிற பெண்பிள்ளை இதைக் கண்டு இருட்டிலேதானே தன்னூருக்குப்போக ஏற்பட்டுச் சில தூரத்திலே வழிதப்பிப்போய்க் காட்டுக்குள்ளே அந்த ராத்திரியிலே ஒரு மரத்தின் கீழே இருந்தாள்.

அங்கே இருந்த பயத்தனாலயுந் துக்கத்தினாலேயும் அழுகிறபோது காட்டுக்குள்ளே ஆராகிலு மனுஷரு ண்டோவென்று கூப்பிட்டாள். இவள் எத்தனை கூப் பிட்டழுதாலும் ஒருத்தரும் வராதிருக்கிறதைக் கண்டு பசாசு தந்திரத்தினாலே கெட்டியாய்ச் சொன் னதாவது: பசாசாகிலும் எனக்குத் துணையாயிருக்க இங்கே வந்தால் மெத்த நல்லதென்றாள்.

அந்த வார்த்தைச் சொன்னவுடனே ஒரு பசாசு நாடகமாடுகிறவன் ரூபமாக அவளுக்குக் காண்பி த்து ஏனழுகிறாய், உனக்கேன் இந்தக் கஸ்தியென்று கேட்க, அப்போது அந்தப் பெண்பிள்ளை நடந்த சேதிகளை ஒழுங்கோடே சொன்னாள். அதற்குப் பசாசு சொன்னது: நீ கஸ்திப்படாதே, நான் உனக் குத் துணையாயிருப்பேன், என்னோடே கூட வா, நீ உன் வீட்டிலே இருந்ததைப் பார்க்க என்னோடே கூடவிருந்தால் நன்றாய் இருப்பாயென்று சொல்லி ற்று. அதற்கு அந்தப் பெண்பிள்ளை நல்லதென்று சம்மதித்த பிற்பாடு சிநேகத்தின் அடையாளமாகப் பசாசு அவளுடைய கையைப் பிடித்து அவளைப் பார்த்து உன் பேரென்ன என்று கேட்டது. அதற் கவள் தன் பேர் மரியாயியென்று சொன்னாள். பசாசு அந்தப் பேரைக் கேட்டவுடனே முகஞ் சுண்டிப் போய் முகத்திலே துக்கத்தினுடைய அடையாளங் காண்பித்து அந்தப் பேரை நிந்தித்து இந்த ஆகாத் பேரைக் கஸ்தியில்லாமல் நான் கேட்கமாட்டேன்; என்னோடேகூட நீ வரவேணுமானால் அந்தப் பே ரைத் தள்ளி உனக்கு வேறே பேரிட வேணுமென்று சொல்லிற்று.

இதற்கவள் சம்மதியாமல் அந்தப் பேர் தேவமாதா வின் பேரென்று அதின்பேரிலே வெகு தோத்திரஞ் சொல்லி அதைக்குறித்துத் தேவமாதா எனக்கு

அநேகஞ் சகாயஞ் செய்தாள். இதினாலே என்னு டைய கண்களைப் பார்க்க அந்தத் திருநாமத்தை நேசித்து அதின் பேரிலே அதிக பட்சமாயிருக்கிறே னென்று சொல்லி எதினாலே அந்த நல்லபேர் உன க்குப் பொருந்தாதென்று கேட்டாள். அதற்குப் ப சாசு வேறே பேச்சுப்பேசாமல் இந்தப்பேர் எனக்கு ஆகாது. இதை நீ தள்ளுகிறதற்குச் சம்மதியாதிரு ந்தால் உன்னைத் தனியே விட்டு நான் அப்பாலே போவேன். இதினாலே உன்னை இந்நேரத்திலே இந்தக் காட்டிலே இருக்கிற மிருகங்கள் உன்னைக் கொன்று தின்றுபோடுமென்று சொல்லிற்று. அவள் தேவ மாதாவின் திருநாமத்தின் பேரிலே மகா பத்தியாய் இருந்ததினாலே அந்த ஆண்டவளுடைய உதவியைக் கொண்டு அப்படிப்பட்ட பயங்களைச் சட்டை பண் ணாமல் மரியாயியென்கிற தன் பேரைத் தள்ளுகிற தற்குச் சம்மதிக்கவில்லை. பசாசு அதைக் கண்டு வேறே உபாயம் பண்ணிற்று. அதாவது: அந்தப் பெண்பிள்ளையைப் பார்த்து நீ இந்தப் பேரின்பேரிலே மெத்தப் பட்சமாய் இருக்கிறதினாலே அந்தப் பேரின் முந்தின எழுத்துமாத்திரம் உனக்குப் பேராயிருக் கட்டும், மற்ற எழுத்தைமாத்திரந் தள்ளவேணும், அதினாலே உன்னை மாவென்று கூப்பிடவேணும் என்று சொல்லிற்று.

அதற்கு அந்தப் பெண்பிள்ளை புத்திக்குறைச்ச லினாலே நல்லதென்று சம்மதித்து இரண்டு பேரும் ஆன்வேரென்கிற பட்டணத்திற்குப் போனார்கள். அங்கே இரண்டு பேரும் ஒரு வீட்டிலே இருந்து எத்தனைப் பாவங்களைக் கட்டிக்கொண்டார்களென்று வாக்கினாலே சொல்லக் கூடாது. ஆனால் மோட்ச ராக்கினியானவள் இதைப் பாராமல் தன்னுடைய பேரை அந்தப் பெண்பிள்ளை முழுதுந் தள்ளாத

பத்தியைக் குறித்து அவளுக்கு ஒரு நல்ல சகாயம் பண்ணினாள். அதாவது: அவள் முந்திச் சந்தைக் குப்போன நீமேகென்கிற பட்டணத்திலே பூலோகத்தினுடைய ஆண்டவனைக்குறித்து ஒரு நாடகங் கொண்டாட ஆயித்தம் பண்ணுகிறார்களென்று இந்தப் பெண்பிள்ளை காதில் விழுந்தது. தேவமாதாவின் உதவியினால் அவளுக்கு அங்கே போக ஆசை வந்தது. மனுஷரூபமாய் இருக்கிற அந்தப் பசாசை உத்தாரங் கேட்டாள். இதற்குப் பசாசு சம்மதியாதிருந்தாலும் அவள் ஒரு பிடியாய்ப் பிடித்து என்ன வந்தாலும் அங்கே போகவேணுமென்று துணிந்தாள். பசாசு இதைக் கண்டு நல்லதென்று சம்மதித்து இருவரும் போனார்கள்.

அங்கே போய் அந்த நாடகம் பார்க்கிறபோது நாடகம் ஆடுகிறவர்கள் மோட்சவிராக்கினியின்பேரிலே தோத்திரமாக நாடகத்தைக் காண்பிக்கிறபோது இந்தப் பெண்பிள்ளை தேவமாதாவின் உதவியினாலே தான் செய்த பாவத்துக்கு உத்தம மனஸ்தாபப்பட்டு அழுதாள். பசாசு அதைக் கண்டு அவளை மெத்தக் கோபித்துக்கொண்டு உன்னுடைய அழுகைச் சத்தத்தினாலே இங்கே இருக்கிறவர்கள் உன்னை ஆச்சரியத்தோடே பார்க்கிறார்கள். அழாதேயென்று சொல்லிற்று. ஆனால் அவள் முன்னையைப் பார்க்க அதிகமாய் அழுது தேவமாதா தன் பேரிலே இரக்கமாயிருக்க வேண்டிக்கொண்டாள். பசாசு இதைக் கண்டு அவளுடைய கையைப் பிடித்துக் கட்டாயமாய் இழுத்து வெளியே வாவென்று கூப்பிட்டது. ஆனால் அவள் அப்புறம் போகாமல் இருந்ததினாலே இராசாளியானது கொக்கை இருஞ்சி ஆகாசத்திலே கொண்டுபோகிறாப்போலே பசாசு அவளைப் பிடித்து நாடகமாடுகிற அந்த ஸ்தலத்

திக்குமேலே ஆகாசத்திலே தூக்கிக்கொண்டு போச்சுது. அப்படித் தூக்கிப்போய் வெகு உயரத்திலே போன பிற்பாடு பசாசு அவளை விட்டுவிட்டதினாலே எல்லாருங் காண நாடகமாடுகிற ஸ்தலத்தினடுவே விழுந்தாள். அத்தனை உயரத்திலிருந்து விழுந்ததினாலே அவள் சாகவேண்டியிருந்தாலும் அர்ச். மரியாயியுடைய உதவியினாலே சாகவில்லை. ஆனால் அவளுக்குக் கனமான காயமாச்சுது.

அங்கே இருந்தவர்கள் அதைக் கண்டு நாடகத்தை விட்டு அவளுக்குச் சகாயமாய் இருந்தார்கள். அவர்களுக்குள்ளே அவளுடைய சிறிய தகப்பனாராகிய முன் சொல்லப்பட்ட குருவானவர் அவளைக் கண்டு தன்னுடைய தமையன் மகள் முன் காணாமற்போன சேதியை நினைத்து அவளுடைய அடையாளங்களைக் கண்டு தனது வீட்டுக்குக் கூட்டிக்கொண்டு போன பிற்பாடு அவள் வாயினாலேதானே நடந்த சேதியை ஒழுங்கோடே கேட்டார். இந்த அதிசயத்தை எத்தனை பேர் கேட்டார்களோ அத்தனைபேருக்குந் தேவமாதாவினுடைய திருநாமத்தின் பேரிலே பத்தி வந்தது. பிற்பாடு அவர்கள் தானே அவளை உரோமையென்கிற பட்டணத்திலே கூட்டிக்கொண்டு போகவே அவள் அர்ச். பாப்பு இடத்திலேதானே பாவசங்கீர்த்தனம் பண்ணின பின்பு அர்ச். பாப்பானவர் அவளுக்கு அபாராதமாக ஆன தபசு பண்ணக் கட்டளையிட்டார். பிற்பாடு அவள் தன் ஊருக்கு வந்து தான் செய்த பாவத்துக்குத் தபசாக உலோகத்தை வெறுத்து அர்ச். மரியமதலேனென்கிற மடத்திலே போய்ச் சாகுமட்டுந் தேவமாதாவின் உதவியினாலே அதிலிருந்து தபசு பண்ணி இந்த ஆண்டவளுடைய திருநாமத்தின் பேரிலே தோத்திரம் பண்ணினதுமல்லாமல் கடைசியிலே நல்ல மரணத்தை அடைந்தாள்.

கிறீஸ்துவர்களே, பெற்ற பிள்ளையானது தாயிட த்திற் பால் குடிக்கிறாப்போலே நீங்கள் இந்தப் புது மையைக் கொண்டு எல்லாருக்குந் தாயாகிய தேவ மாதாவின் பத்தியென்கிற ஞானப் பால் குடிக்கவே ணும். முந்த முந்த முன் சொல்லப்பட்ட பெண்பி ள்ளை காட்டிலே இருக்கிறபோது தனக்கு உதவியா கப் பசாசைக் கூப்பிட்டதினாலே பசாசு மனுஷ ரூப மாக வந்து அவளுக்குக் கனமான மோசம பண்ணி னதென்று கேட்டீர்களே, இப்படிக்கொத்த கேடுக ளுக்குள்ளே நீங்கள் அகப்படாதபடிக்கு எந்தெந் தப் பெரிதான ஆபத்துகள் உங்களுக்கு வந்தாலும உங்களுக்கு உதவியாகச் சேசு மரியாயியென்கிற திருநாமங்களைப் பத்தியோடே கூப்பிட்டு மன்றாட வேண்டியதே அல்லாமல் பசாசென்கிற பெயரைக் கூப்பிட வேண்டாம். சிலபேர் சொல்லுகிறது மன தோடே நான் கூப்பிடவில்லை. கோபத்தினாலே பசாசெனறு கூப்பிட்டேனென்பார்கள். இதுவுமா காது. அதேதென்றால் அந்தப் பெண்பிள்ளை அப் படிக் கூப்பிட்டதினாலே அவளுக்குப் பலத்த மோ சம் வந்தது.

இரண்டாவது. இந்தப புதுமையிலே சொல்லப் பட்ட பெண்பிள்ளை தனக்கு உண்டான மரியாயி யென்கிற பெயரிலே எவ்வளவாகிலுந் தள்ளுகிறத ற்குச் சம்மதித்ததினாலே பசாசு அவளுக்குக் கனு த்த சேதம் வருத்துவித்ததற்கு இடங்கொடுத்தாள். ஆகையால் பசாசு உங்களைக் கெடுக்கத்தக்கதாகத் தேவமாதாவின் பேரிலே உங்களுக்கு உண்டான புத்தியை முழுமையாகிலுங் கொஞ்சமென்கிலும் விடுவிக்கிறதற்கு எண்ணப்படாத உபாயங்களைப் பண்ணும். இது காரியத்திலே நீங்கள் எச்சரிக்கை யாயிருந்து சீவன் போனாலுந் தேவமாதாவின்

பேரில் உண்டான பத்தியை விடுகிறதில்லையென்று துணிந்திருக்கவேணும்.

மூன்றுவது. அர்ச். கன்னிமரியாயி தம்முடைய திருநாமத்தில் ஒரு எழுத்துமாத்திரம் முன் சொல்லப்பட்ட பெண்பிள்ளைக்கு இருந்ததினாலே பசாசின் கையிலே அகப்பட்ட பொல்லாப்பில் நின்று அவளை இரட்சித்தாளென்று சொனனோமே. ஆகையால் தேவமாதாவின் திருநாமத்தைத் தரித்துக்கொண்டிருக்கிறவர்களே, நீங்கள் இதை அறிந்து மகா சந்தோஷப்பட்டுப் பாக்கியமாகிற இந்தப் பேர் உங்களுக்கு வந்ததினாலே தேவமாதாவுக்கு ஆன தோத்திரம் பண்ணுவதும அல்லாமல் அப்படிக்கொத்த திருநாமத்தின் பேரிலே மகா பத்தியாய் இருக்கவேணும். ஆகையால் பாவத்தினுடைய நிழல் முதலாய் அணுகாத ஆண்டவளுடைய பேர் உங்களுக்கு இடப்பட்டிருக்கிறபடியினாலே நீங்களும் பாவத்தைச் செய்யாதிருக்கப் பிரயாசப்படவேணும். கடைசியிலே கிறீஸ்துவர்களே, சர்வேசுரன் உங்களுக்குப் பிள்ளைகளைக் கட்டளையிட்டால் நீங்கள் தேவமாதாவின் திருநாமத்தை அவர்களுக்கிட்டால் மெத்த நல்லது. அதைக்குறித்து மோக்ஷராக்கினி ஆனவள் உங்களுடைய குழந்தைகளுக்கு அநேக நன்மைகளைக் கட்டளை இடுவாளென்று அறியக் கடவீர்களாக.

## ௩௮-ம் சனிக்கிழமைப் புதுமையாவது.



தேவமாதா தாம் எப்போதுங் கன்னிமையாய் இருந்ததை யூதருக்கு ஒப்பிக்கத் தர்க்கித்திருந்த ஓர் பிறவிக்குருடனுக்குப் பார்வையை வருவித்த அற்புதம்.

கர்த்தர் மனுஷாவதாரம் பண்ணின ஐந்நூற்று எட்டாம் வருஷம் உரோமை என்கிற பட்டணத்திலே இருந்த கிறீஸ்துவர்களுக்கும் யூதர்களுக்குஞ் சேசுநாதர் பிறந்த பரமரகசியத்தின் பேரிலே தர்க்கம் வந்தது. அதெப்படியென்றால் இஸ்பிரீத்து சாந்துவினாலே கெற்பமாக உற்பவித்துக் கன்னிமரியாயி இடத்திலே நின்று சேசுநாதர் பிறந்தாரென்றுந் தேவமாதா எப்போதுங் கன்னியாஸ்திரியாய் இருந தாளென்றுங் கிறீஸ்துவர்கள் சொன்னார்கள். இதற்கு யூதர் சம்மதியாமல் சொன்னதாவது: மரியாயி கூசையிடத்திலே மற்ற மனுஷரைப்போலே சேசுநாதர் பிறந்தாரென்றும் தேவமாதா எப்போதுங் கன்னியாஸ்திரீயாய் இருக்கவில்லை என்றுங் கன்னியாஸ்திரீ வயிற்றிலே கெற்பந்தரிக்கக் கூடாதென்றும் யூதர் சொன்னார்கள்.

அதற்குக் கிறீஸ்துவர்கள் இது மனுஷராலே கூடாதென்கிறது மெய்தான். சர்வேசுரனுடைய அளவில்லாத பலத்தினாலே புதுமையாகக் கூடும். அதைப் பற்றி கபிரியேலென்கிற சம்மனசு தேவமாதாவுக்கு மங்கள வார்த்தை சொல்லுகிறபோது தேவமாதா அவரைப் பார்த்து நான் எப்போதும்

பரிசுத்தக் கன்னியாஸ்திரீயாய் இருக்கையிலே எப்படி பிள்ளை பிறக்குமென்று கேட்குமிடத்தில் சர்வேசுரனுக்குக் கூடாத காரியமில்லையெனகிற வார்த்தை சம்மனசு சொன்னுரென்று இது முதலான வேத ஞாயங்களைக் கிறீஸ்துவர்கள் யூதருக்குச் சொல்லிக் காட்டினார்கள். இப்படிக்கொத்த ஞாயங்களை யூதர்கள் ஒத்துக்கொள்ளாதிருந்ததைக் கிறீஸ்துவர்கள் கண்டு அந்தப் பட்டணத்திலிருந்த யூதரொல்லாரையும் அப்பாலே துரத்துகிறதற்கு யோசனை பண்ணினார்கள்.

இப்படி இருக்கையிலே அந்தப் பட்டணத்திலே பிறவிக்குருடனாய் இருந்த ஒருத்தன் வழியாக இந்தக் காரியத்தைத் தீர்க்கிறதற்காகத் தேவமாதா சித்தமாயிருந்தாள். அதெப்படி என்றால் அந்தக் கண் தெரியாதவன் ஒருக்காலும் படிக்கத் தெரியாதவனாய் இருந்தாலும் புத்திமானாய் இருந்ததினாலே வேதத்தின் புஸ்தகத்தையுங் குருக்கள் சொன்ன ஞானப் பிரசங்கங்களையுஞ் சத்திய வேதத்தின் மற்றநேக காரியங்களையுங் கேட்டு அறிந்திருந்தான். இதினாலே அவன் தேவமாதாவின் பேரிலே மகா பத்தியாய் இருந்தான். தேவமாதாவினுடைய கன்னிமையின் பேரிலே யூதர் சொன்ன தேவ தூஷணங்களை அவன் கேட்டு உரோசப்பட்டுத் தன்னுடைய நம்பிக்கை யெல்லாந் தேவமாதாவின் பேரிலே வைத்து இது காரியத்திலே யூதரோடே தர்க்கம பண்ணினான். அந்தத் தர்க்கத்திலே இவன் சொன்ன நல்ல ஞாயங்களுக்கு யூதர்கள் மறுவுத்தாரஞ் சொல்ல மாட்டாமல் சபைமுன்பாக வெட்கப்பட்டுப் பேசாமல் இருந்தார்கள்.

இது முகாந்தரமாக யூதர் கண் தெரியாதவனைப் பார்த்து ஒன்றும் அறியாதவனே ஒருகாலும் பள்ளிக்

கூடத்தில் இராதவ்னே வேதத்தின் காரியத்திலே நீ தர்க்கம் பண்ணலாமோ? ஆங்காரமுள்ளவனே எங்களுடைய வேதத்தில் உண்டான சாஸ்திரங்களைப் பார்க்க நீ அதிக சாஸ்திரம் அறிந்திருக்கிறாயோ? பாவியானவனே உன்னுடைய பாவத்தினாலே இரண்டு கண்ணுந் தெரியவில்லையென்று பற்பல தூஷணவார்த்தைகளைச் சொன்னார்கள். இதற்கவன் அவர்களைப் பார்த்துத் தூஷணஞ் சொல்லாமல் அந்தக் காரியத்திலே எத்தனை விசை தர்க்கம் பண்ணினானோ அத்தனை விசையும் யூதரைச் செயங்கொண்டான். அவர்கள் இதைக் கண்டு கண் தெரியாதவனைப் பார்த்துச் சொன்னதாவது: நீ சொல்லுகிற மரியாயியென்கிறவள் எப்போதுங் கன்னியாயிருக்கிறாளென்று நீ விசுவசித்தால் பயித்தியக்காரனாய் இருக்கிறதற்குச் சந்தேகமில்லை. அதேனென்றால் அவளுடைய மகனாகிய சேசுவென்கிறவர் தன்னுடைய தாய் எப்போதுங் கன்னியாய் இருக்கப் பண்ணினதைப் பார்க்க உன்னுடைய இரண்டு கண்ணுந் தெரியப்பண்ணுகிறது கொஞ்சக் காரியந்தானே. இதைச் செய்கிறதற்கு அவருக்குப் பலம் பற்றாதிருக்கையிலே தன்னுடைய தாயைக் கன்னியாஸ்திரீயாய் இருக்கப் பண்ணினது எப்படி என்றார்கள். அதற்குக் கண் தெரியாதவன் இஸ்பிரீத்து சாந்துவினுடைய அநுக்கிரகத்தினாலே சொன்னதாவது:

'சேசுநாதர் என் கண்ணுக்குப் பிரகாசங் கட்டளையிட்டால் அப்போ நீங்கள் என்ன செய்வீர்கள்? கன்னிமரியாயி இடத்திலேநின்று அவர் பிறந்தாரென்று விசுவசிப்பீர்களோ? என்று கேட்டான். அதற்கு அவர்கள் ஆமென்று சொல்லி மீளவுஞ் சாதித்ததாவது: ஆனால் சேசுவென்கிறவர் உன் கண்ணுக்குப் பிரகாசங் கொடுக்கக் கூடாது. அதேனென்றால் எங்

களுடைய கோத்திரத்திலே முந்தி இருந்தவர்கள் சேசுவென்கிறவரைச் சிலுவையில் அறைந்த பிற்பாடு தனக்கு வந்த சாவிலே நின்று தன்னை இரட்சிக்கமாட்டாதவர் உனக்கு வந்த பொல்லாப்பில் நின்று உன்னை இரட்சிப்பாரென்று பயித்தியக்காரா நீ விசுவசிக்கிறாயோ என்றார்கள். அதற்கு அவன் நான் விசுவசிக்கிறதும் அல்லாமல் நீங்கள்தானே உங்கள் கண்ணினாலே காண்பீர்களென்றான். அப்போது அவர்கள் சொன்னதாவது: நாங்கள் கண்டால் சேசுநாதரை மெய்யான தேவனென்று விசுவசிப்பதற்கு வார்த்தைப்பாடு கொடுக்கிறோமென்றார்கள்.

அதற்குக் கண்தெரியாதவன் சொன்னது: நீங்கள் இப்போ கொடுத்த வார்த்தைப்பாடு செலுத்தாதிருந்தால் உங்களுடைய உடைமைகளெல்லாம் அரண்மனையார் கொள்ளையிட்டு நீங்களும் பட்டணத்தில் இராமல் அப்புறம் போகிறதென்றான். இதற்குச் சாட்சி வைத்து அவர்கள் சம்மதித்த பிற்பாடு கண் தெரியாதவன் அவர்களைக் கூட்பிட்டு யூதரே இதற்கு மூன்றுநாள் தேவமாதா கர்த்தரைக் கோயிலிலே ஸ்தாபித்த திருநாளல்லவோ? அன்றைக்கு நீங்கள் பந்தையோனென்கிற தேவமாதாவின் கோயிலிலே வாருங்களென்று சொன்ன பிற்பாடு அந்தக் கூட்டங் கலைந்துபோச்சுது. பிற்பாடு கண் தெரியாதவன் அர்ச். பாப்புவின் கிட்டப்போய் நடந்த சேதி எல்லாஞ் சொல்லவே அர்ச். பாப்பும் மகா சந்தோஷப்பட்டு அவன் தேவமாதாவின் பேரில் நம்பிக்கையாய் இருக்கப் புத்தி சொன்னதும் அல்லாமல் சகல யூதர்களையுங் குறித்த கெடுவுக்கு அந்தக் கோயிலிலே வரக் கட்டளையிட்டார். கண் தெரியாதவன் இதற்குள்ளாகச் சுற்றித்திரியாமல் தன் வீட்டிலே

தானே இருந்து தேவமாதா தனக்கு உதவியாய் இருக்கத்தக்கதாக அந்த மூன்றுநாளும் ஒருசந்தியாய் இருந்து செபம் பண்ணுகிறதிலே செலவழித்தான்.

இதல்லாமல் அதற்குள்ளாக அவன் தேவமாதா எப்போதுங் கன்னியாஸ்திரீயாய் இருந்த மகிமையின் பேரிலே சில பாட்டுகளை உண்டாக்கி அதை நன்றாய்ப் படித்தான். பிற்பாடு மூன்றுநாள் தேவமாதாவின் திருநாள் அன்றைக்குக் குறித்த கோயிலிலே யூதர் எல்லாரும் வந்ததல்லாமல் அந்தப் பட்டணத்தில் இருந்தவர்களும் இந்தச் சேதி அறிந்து பார்க்கத்தக்கதாக வெகு சனங்களும வந்து கூடினார்கள். அந்தக் கோயில் பெரிய கோவிலாய் இருந்தாலும் எள்ளு முதலாய் விழ இடமில்லாமல் சனங்கள் நிறைந்திருந்தார்கள்.

இப்படி இருக்கையிலே கண் தெரியாதவனைக் கண் காட்டியாகிய ஒருவன் ஒரு கையைப்பிடித்துக் கூட்டிவரவே கண் தெரியாதவன் வேறே கையில் தடி பிடித்து ஊன்றிக்கொண்டு மெள்ள மெள்ள வந்து கோயிலிலே சேர்ந்தான். அவன் கோயில் நடுவிலே யூதர் இருக்கிற ஸ்தலத்திலே வந்து சேரத்தக்கதாக மனுஷருடைய நெருக்கத்தினாலே மெத்தப் பிரயாசப்பட்டுச் சேர்ந்த பிற்பாடு தான் முழுதுங் கண் தெரியாதவன் என்று யூதர் அறியத் தக்கதாக முகத்தை நன்றாய் அவர்களுக்குக் காண்பித்த பிற்பாடு அங்கேயிருந்த குருக்கள் திருநாளைக் குறித்துக் கெட்டியாய்ச் செபம் பண்ணுகிறபோது இந்தக் கண் தெரியாதவன் முழங்காலிலே இருந்து மோட்சராக்கினியானவள் தான் முப்பொழுதுங் கன்னியாஸ்திரீயாய் இருந்ததை ஒரு புதுமையினாலே காண்பிக்கத்தக்கதாக மிகுந்த விசுவாசமுள்ள பத்திச்

சுரூசுறுப்போடேயுங் கெட்டி நம்பிக்கையோடேயும் அந்த ஆண்டவனை வேண்டிக்கொண்டான். குருக்கள் செபம் பண்ணி முடிந்த பிற்பாடு கண் தெரியாதவன் எழுந்திருந்து தன்னைத் தேவமாதாவின் சுரூபத்துக்குக் கிட்டக் கூட்டிப்போகச் சொல்லிக் கண் காட்டியோடே சொன்னான். அப்படியே அவன் சுரூபத்தின் கிட்டச் சேர்ந்தவுடனே அங்கே நின்றுதான் முந்தித் தேவமாதாவின் கன்னிமையின் பேரிலே படித்த பாட்டுகளை மகா சந்தோஷத்தோடேயுஞ் சத்தத்தோடேயும் பாடினான். அந்தப் பாட்டுகளையெல்லாம் பாடி முடித்தவுடனே அவனுடைய குருட்டாட்டந் தீர்ந்தது.

அதெப்படியென்றால் அந்த க்ஷணத்திலே தேவமாதாவின் புதுமையினாலே அவனுடைய இரண்டு கண்ணுக்கும் பிரகாசம் வந்தது. அவன் தன்னுடைய இடது கையினாலே பிடித்திருந்த கண் காட்டியையுந் தள்ளி வலது கையிலே இருந்த கம்பையும் எறிந்துபோட்டுத் தன்னைச் சுற்றி இருக்கிற சனங்களைச் சந்தோஷத்தோடே நன்றாய்ப் பார்த்ததும் அல்லாமல் யூதர்களைக் கிட்ட வரச்சொல்லி இதோ என்னுடைய கண்ணுக்குப் பிரகாசம் வந்ததை நன்றாய்ப் பாருங்களென்றான். அங்கே இருந்தவர்கள் இந்த ஆச்சரியமான புதுமையைக் கண்டு அர்ச். கன்னிமரியாயி கர்த்தரைப் பெறு முன்னேயும் பெறும்போதும் பெற்ற பிற்பாடும் எப்போதுங் கன்னிகையாய் இருந்ததின் பேரிலே மகா உறுதிவிசுவாசமாய் இருந்ததும் அல்லாமல் அவர்கள் அநுபவித்த வெகு சந்தோஷத்தினாலே எல்லாரும் ஒருமிக்கக் கூப்பிட்டுத் தேவமாதாவைத் தோத்திரம் பண்ணினார்கள். யூதருக்குள்ளே ஐந்நூறு பேர் மந்திரம் முந்தின வார்த்தைப்பாடு செலுத்தத்தக்கதாக

ஞானஸ்நானம் பெற்ருர்கள். மற்றவர்கள் வார்த்தைப்பாடு செலுத்தாததினுலே தங்கள் ஆஸ்தியெல்லாம் இழந்து உரோமையென்கிற பட்டணத்திலிராமல் அப்புறம் போனுர்கள்.

கிறீஸ்துவர்களே, சமுத்திரத்திலே முத்துக் குளிக்கிறுப்போலே நீங்கள் இப்போது கேட்ட புதுமையிலுள்ள ஞான முத்துகளைக் கைக்கொள்ளவேணும். முந்த முந்தத் தேவமாதா கன்னியாஸ்திரீயாயிருந்து கர்த்தரைக் கெற்பத்திலே தரித்துக்கொண்டதெப்படியென்று பசாசின் தந்திரத்தினுலே உங்களுக்கு நினைவு வந்தால் அதற்கு இடங்கொடாமல் திருச்சபை படிப்பிக்கிறுப்போலே நீங்கள் உறுதியாய் விசுவசிக்கவேணும்.

இரண்டாவது. சர்வேசுரன் தமது மாதாவுக்கு அப்படிக்கொத்த மகிமை பண்ணினதற்காக அவரை அடிக்கடி தோத்திரம் பண்ணவேணும்.

மூன்ருவது. அர்ச். கன்னிமரியாயி அப்படிக்கொத்த மகிமையின் பேரிலே மெத்தப் பிரியமாயிருக்கிற சேதியை நீங்கள் அறிந்து கற்பென்கிற புண்ணியம் உங்களிடத்தில் எப்போதும் இருக்கத்தக்கதாக நீங்கள் பிரயாசப்படுவதுந் தவிரத் தேவமாதாவுக்கு உண்டான இந்த மகிமையைக் குறித்து அந்தப் புண்ணியம் உங்களிடத்திலே விளங்கத் தக்கதாக அடிக்கடி அவளை வேண்டிக்கொள்ளவேணும். கடைசியிலே ஆத்துமத்திலே குருடாய் இருக்கிற பாவிகளே, இந்தப் புதுமையிலே சொல்லப்பட்ட கண் தெரியாதவன் பிரயாசப்பட்டுத் தேவமாதாவை வேண்டிக்கொண்டதினுலே அவனுடைய சரீரத்தின் கண்ணுக்குப் பிரகாசம் வந்தாப்போலே நீங்களும் பிரயாசப்பட்டுப் பூலோகத்தின் ஆண்டவளை

வேண்டிக்கொண்டால் உங்கள் ஆத்துமத்துக்கு ஞானப்பிரகாசம் வருமென்று அறியக்கடவீர்களாக.

## கூசுஅ-ம் சனிக்கிழமைப்

புதுமையாவது.

தேவமாதா தமது பேரிலே
பத்தியாயிருந்த ஓர் சந்நியாசியாருக்குத்
தமது திருக்குமாரனோடே
தரிசனையான
அற்புதம்.

பிலாந்திறென்கிற இராச்சியத்திலே புறுக்செலென்கிற பட்டணத்திலே ஒரு கிறீஸ்துவன் பொனிப்பாசென்கிறவன் இருந்தான். அவன் பண்ணின புண்ணியங்களுக்குள்ளே தேவமாதாவின் பேரிலே பத்தியென்கிற புண்ணியம் அவனிடத்திலே மிகவும் விளங்கிற்று. இந்தப் பெரிய ஆண்டவனுடைய உதவியினாலே அவர் உலோகத்தை வெறுத்து ஓர் சந்நியாச சபையில் உட்பட்டார். அவர் சரீரத்திலே அநேகம் வியாதி அடைந்ததினாலே வெகு நாள் சொல்லக்கூடாத வேதனை அநுபவித்தார். அவர் அந்தக் கஸ்தி எல்லாம் மகா பொறுமையோடே அநுபவித்ததும் அல்லாமல் அவரிடத்திலே தாழ்ச்சியென்கிற புண்ணியமும் விளங்கினதினாலே இந்த வியாதிகள் தான் செய்த பாவத்துக்காக வந்ததென்றுந் தன் பாவத்துக்கு இது பற்றாதென்றும் அடிக்

,கடி சொல்லுவார். அவருக்கு ஒருநாள் வியாதிகள் கடினமானபோது அதுகள் மாறத்தக்கதாக மோட்சத்துக்கு இராக்கினியானவள் பேரிலே தியானம் பண்ணி அவளை மன்றாடினார். அப்போது அந்த வலி அமர்ந்தது.

அதற்குப் பிற்பாடு மார்கழி மாதம் கர்த்தர் பிறந்த திருநாளின் இராத்திரி நடுச்சாமத்திலே அவர் இருந்த மடத்துக் குருக்கள் எல்லாருஞ் செபம் பண்ணவும் பூசை பண்ணவுங் கோயிலிலே போனார்கள். வியாதியாயிருந்த குருவானவர் அவர்கள் எல்லாருங் கோயிலிலே போனார்களே, நான் இந்த வியாதியினாலே அங்கே போகாதிருப்பேனோவென்று நினைத்து மகா கஸ்தி அநுபவிக்கிறபோது அவருக்கு வந்த விசாரமாவது: கர்த்தர் பிறந்த திருநாளின் இராத்திரி எல்லாருக்கும் ஞான சந்தோஷம் இருக்கையிலே எனக்கு அதிலே பங்கில்லையோவென்று அர்ச். கன்னிமரியாயி இந்த 'இராத்திரியிலே குழந்தை சேசுநாதனைப் பெற்றபோது பிறவித் துன்பமில்லாமல் இருந்ததுமன்றி மிகுந்த சந்தோஷத்தை அநுபவித்தாளே. ஆனால் அந்த ஆண்டவள் என் பாவத்தினாலே என்னை நினையாதிருந்தால் இந்த இராத்திரி நான் கஸ்தி அநுபவிக்கிறதே அல்லாமல் கொஞ்சச் சந்தோஷமாகிலும் எனக்கு இல்லையென்று இப்படி யொனிப்பாசென்கிற சந்நியாசியார் கஸ்தியோடே நினைக்கிறபோது தானிருந்த அறையில் உண்டான இருட்டெல்லாம் நீங்கிப் பகலைப் பார்க்க அதிக பிரகாசமாச்சுது. அதற்குப் பிற்பாடு மோக்ஷத்துக்கு இராக்கினியானவள் மகா சந்தோஷத்தோடேயும் மகிமைப் பிரதாபத்தோடேயும் அங்கே காண்பித்துத் தமது திருக்கையில் ஏந்தியிருக்கிற குழந்தை சேசுநாதனை அந்தச் சந்நியாசியா

ருடைய கட்டிலின் மேலே வைத்தாள். வியாதியா யிருக்கிற சந்நியாசியார் வியாதி முகாந்தரமாக எழுந்திருக்கவும் அசையவுங் கூடாததினாலே கிடந்த கிடையிலேதானே தனக்கு அந்த இராத்திரி வந்த பாக்கியத்தை நினைத்துத் தேவமாதாவின் திருமுகத்தைக் காண்கிறபோது மிகுந்த சந்தோஷத்தை அடைந்தார். ஆனால் தாழ்ச்சியுள்ளவராய் இருந்ததினாலே சேசுநாதருடைய திருமுகத்தைக் காண்கிறதற்குத் தான் பாத்திரம் அல்லவென்று நினைத்து அந்தத் திருமுகத்தைக் காண்பிக்கச் சொல்லிக் குழந்தை சேசுநாதரையுந் தேவமாதாவையும் மன்றாடவில்லை.

அவர் இந்தக் கஸ்தியோடே இருக்கிறபோது கட்டிலின்மேலே கிடத்தப்பட்டிருக்கிற குழந்தை சேசுநாதர் தாமே தமது சின்ன கையால் தமது திருமுகத்திலிருக்கிற சேலையைத் தள்ளி அந்தச் சந்நியாசியாரைச் சந்தோஷத்தோடே பார்த்தார். அவர் குழந்தை சேசுநாதருடைய அலங்காரமுள்ள திருமுகத்தைக் கண்டு வாக்குக்கெட்டாத சந்தோஷம் அநுபவித்ததும் அல்லாமல் அவர் சொன்னதாவது: எனக்கு எல்லாத்தையும் பார்க்க மிகவும் பிரியமுள்ள நல்ல சேசுவே, மோட்ச இராச்சியத்திலே உம்முடைய அலங்காரமுள்ள இந்தத் திருமுகத்தைக் காண்கிறதும் அல்லாமல் வேறே பாக்கியம் இல்லாதிருந்தாலும் அதை அடையத் தக்கதாகப் பூலோகத்திலே இருக்கிற கஸ்தி அவமானமெல்லாம் அநுபவிக்க வேண்டியிருந்தாலும் அநுபவிக்கத் துணிந்திருக்கிறேனென்றார். சற்றுநேரத்துக்குப் பிற்பாடு குழந்தை சேசுநாதருந் தேவமாதாவுங் காணாமல் மறைந்து போனார்கள்.

கிறீஸ்துவர்களே, உடையவர்தன் நந்தவனத்திலே நல்ல புஷ்பங்களை எடுக்கிறாப்போலே இப்போ நீங்

கள் கேட்ட புதுமையிலுள்ள ஞானப் புஷ்பங்களைக் கைக்கொள்ளவேணும். முந்த முந்தப் பொனிப்பா சென்கிறவர் அநேகம் புண்ணியங்களைப் பண்ணின தும் அல்லாமல் தேவமாதாவுக்கு ஊழியம் பண்ணிக்கொண்டு வருகையிலே வியாதி அவருக்கு வந்து அநேகநாள் கஸ்தி அநுபவித்தாரென்று சொன்னப் போலே ஆச்சுது. ஆகையால் தம்பீ, நீ இந்தச் சேதி அறிந்து பூலோகத்தின் ஆண்டவனைக் குறித்து அநேகம்விசை ஒருசந்தியாய் இருந்து பிச்சைகொடுத்துத் தருமங்களைப் பண்ணின பிற்பாடு யாதொரு கஸ்தி வியாதி உனக்கு வந்தால் நான் புண்ணியங்களைப் பண்ணிக்கொண்டு வருகையிலே எனக்கிந்த வியாதி கஸ்தி வரலாமோவென்றும் அந்தப் புண்ணியத்தினாலே எனக்குப் பிரயோசனம் என்னவென்றும் இப்படிக்கொத்த ஆகாத பேச்சுகளைப் பேசாதே, முறையிடாதே. உன்னுடைய பத்தி விளங்கத் தக்கதாக அந்த வியாதி அந்தக் கஸ்தி உனக்கு வந்தது. அதை நீ பொறுமையோடே அநுபவித்தால் அது நல்ல புண்ணியந்தானே. அதினாலேயும் நீ பண்ணின மற்றப் புண்ணியங்களினாலேயும பூலோகத்திலேயும் பரலோகத்திலேயும் உனக்குப் பிரயோசனம்வரும்.

இரண்டாவது பொனிப்பாசென்கிறவருக்கு உண்டான தாழ்ச்சியென்கிற புண்ணிய முகாந்தரமாக மோட்சத்துக்கு இராக்கினியானவள் தமது குழந்தை சேசுநாதரோடேகூட அவருக்குக் காண்பித்தாளென்று நீங்கள் நினைத்து உங்களுக்குத் தேவமாதாவின் வழியாக நன்மை வரத்தக்கதாக நீங்கள் தாழ்ச்சியென்கிற புண்ணியத்துக்கு உடையவர்களாய் இருக்கவேணும். ஆங்காரத்தினாலே பொல்லாப்புவருகிறதே அல்லாமல் நன்மை வருகிறதில்லை.

இதை நீங்கள் கண்டு பிடிக்கத்தக்கதாக இப்போது சொல்லப்போகிற உவமையை நன்றாய்க் கேளுங்கள்.

மழைபெய்தால் தண்ணீர் மேட்டிலே நில்லாது, பள்ளத்திலே நிற்குமே. அப்படிப்போலே பரமண்டலங்களிலே இருக்கிற பிதாவாகிய சர்வேசுரன் கொடுக்கிற நன்மைகள் மேடுபோலே இருக்கிற ஆங்காரிகளிடத்திலே இராமல் பள்ளம்போலிருக்கிற தாழ்ச்சி உள்ளவர்களிடத்தில் இருக்கும். நான் ஆகாத பாவி என்று சிலர் சொல்லுகிற படியினாலே தங்களுக்குத் தாழ்ச்சி என்கிற புண்ணியம் உண்டென்று நினைத்திருக்கிறார்கள். ஆனால் இப்படிக்கொத்தவர்களுக்குப் புறத்தியாராலே யாதொரு குறையானாலும் நிந்தையான வார்த்தை என்கிலும் வந்தால் அநேக நாளாய்ப் போகாமல் இருக்கிறதும் அல்லாமல் கடைசியாய்ப் புறத்தியாரை நிந்திப்பார்கள். இப்படிக்கொத்தவர்களுக்கு மெய்யான தாழ்ச்சி என்கிற புண்ணியம் உண்டென்று நீங்கள் கனவிலே முதலாய் நினைக்கவேண்டாம்.'

மூன்றாவது. மோட்சத்திலே சேசுநாதருடைய அலங்காரமுள்ள திருமுகத்தை நீங்கள் எப்போதும் பார்க்கத் தக்கதாக இங்கே எந்தெந்தக் கஸ்தி வந்தாலும் பொறுமையோடே அநுபவிக்கவேணும். கடைசியாய் இந்தப் புதுமையிலே சொல்லப்பட்ட சந்நியாசியார் அநுபவித்த கஸ்தியைத் தேவமாதா கண்டு அவர் பேரிலே இரக்கமாய் இருந்து அவருக்கு வெகு சந்தோஷம் வருத்துவித்தாளென்று கேட்டீர்களே. இதினாலே பஞ்சம் படை வியாதி இது முதலானதுகளினாலே நீங்கள் அவதிப் படுகிறபோது உங்களுடைய பத்தி நம்பிக்கை தேவமாதாவின் பேரிலுண்டானால் அவள் தயையுள்ள தாயாராய்

இருக்கிற படியினாலே அப்படிப்பட்ட ஆண்டவள் உங்களுக்குச் சந்தோஷம் வருத்துவிப்பாள் என்று கெட்டி நம்பிக்கையாய் இருக்கவேணும் என்று அறி யக்கடவீர்களாக.

---

## சம-ம் சனிக்கிழமைப்

### புதுமையாவது.

கலிசிய தேசத்திலே தேவமாதாவின் பேரிலே பத்தியாய் இருந்த நூஸ்பயியென்கிறவளுக்குக் கிடைத்த அற்புதமான நன்மைகள்.

கலிசியவென்கிற இராச்சியத்திலே துரை மகளா கிய நூஸ்பயியென்கிறவள் அர்ச். தொமினிக்கு நூற் றைம்பதுமணிச் செபத்தியானத்தின் பேரிலே தனக்குச் சொன்ன புத்தியைக் கேட்டு அந்தச் சபை யிலே தன்னுடைய பேரெழுதி வைத்துச் சபையின் கற்பனைப்படி தினந்தினம் ஐம்பதுமணிச் செபம பண்ணிக்கொண்டு வருவாள். அவளுக்குப் பதினறு வயது நடக்கையில் தாய் தகப்பன் சொன்ன பிரகா ரத்துக்குக் கிறெனுதென்கிற பட்டணத்தில் இருந்த ஒரு துரைமகன் அவளைக் கலியாணம் பண்ணி அவ ளோடே அங்கே தானே இருந்தான்.

சில நாளைக்குப் பிற்பாடு அவள் கெற்பவதியாய் இருக்கிறபோது அவளுடைய புருஷன் துலுக்க ரோடே சண்டை பண்ணி அந்தச் சண்டையிலே செத்தான். இந்தக் கஸ்தியைப் பார்க்க அவளுக்குக்

கொஞ்ச நாளைக்குப் பிற்பாடு வேறே கனமான கஸ்தி வந்தது. அதாவது: அவளுஞ் சில ஊழியக் காரரும அந்த ஊரிலே இருந்து வேறே ஊருக்குப் பயணம் போகிறபோது வழியிலே இருந்தாப்போலே துலுக்கரான சில குதிரைச் சேவகர்கள் வந்தார்கள். அவர்கள் கையிலே இந்தப் புண்ணியவதி அகப்பட்டாள். அந்தத் துலுக்கருக்குள்ளே எசமானாகிறவன் அவளுடைய சவுந்தரியத்தைக் கண்டு அவள்பேரில் ஆகாத ஆசையினாலே அவளைத் தன்னுடைய சீமைக்குக் கூட்டிடப்போனான்.

அங்கே சேர்ந்த பிற்பாடு அவள் பேரிற் கொண்ட பொல்லாத இச்சைக்கு அந்தப் புண்ணியவதி யம மதிக்கத்தக்கதாக அநேகம் உடைமைகளைக் கொடுத்து வெகு பட்சத்தைக் காண்பித்தான. ஆகிலும அந்தப் புண்ணியவதி சம்மதியாமல் இருக்கிறதினாலே அவள்பேரில் துலுக்கனுக்கிருந்த பட்சமெல்லாம் நீங்கிப்போய் மகா வற்மமாய் இருந்தான். இதினாலே அவள் கெற்பவதியாய இருக்கிறதையும பெலவீனமுள்ளவளாய் இருக்கிறதையுந் துரைமகள் என்கிறதையும் பாராமல் தன் அரண்மனையைப் பெருக்கவும் விறகு கொண்டுவரவும இப்படியே நீசமான ஊழியம் பண்ண அவளுக்குக் கட்டளையிட்டான். „அவள் அந்த ஊழியமெல்லாங் குறைவில்லாமல் மகா தாழ்ச்சி பொறுமையோடே செய்தாலும அதற்குக் கூலியாக அடியும் வசையுங் கொடுத்து அந்த எசமான் கொடுமையாய் நடத்துவான. இந்தக் கனமான கஸ்திகளுக்குள்ளே அவள் தேவமாதாவை வேண்டிக்கொண்டு தினம் ஐம்பதுமணிச் செபம் பண்ணுகிறதல்லாமல் அவளுக்கு வேறே ஆறுதலில்லை.

இப்படி இருக்கையிலே மார்கழிமாதம் இருபத்தைந்தாந் தேதி கர்த்தர் பிறந்த திருநாளன்றையிடா

த்திரிதானே அவளுக்குப் பேறுகாலம் ஆச்சுது. இவள் இருக்கிறதற்கு வேறே ஸ்தலம் இல்லாததினாலே அந்தத் தொழுவக்கனுடைய குதிரைலாயத்திலே தனியே இருந்தாள். அதிலே இருக்கிறபோது வரவர அவளுக்கு வலி அதிகமானதினாலேயும் அவளுக்கு அது தலைப்பேறானதினாலேயும் அதற்குச் செய்யவேண்டிய காரியம் அவளுக்குத் தெரியாததினாலேயும் அந்தச் சமயத்திலே தேவமாதா தனக்குச் சகாயமாய் இருக்கத்தக்கதாகத் தன்னுடைய செபமாலையை எடுத்து நூற்றைம்பது மணிச் செபம் பண்ணத் துவக்கினாள். அந்த இராத்திரி நடுச்சாமங் கர்த்தர் பிறந்த நேரத்திலே மோட்சத்துக்கு இராக்கினியானவள் பரலோகத்திலே இருந்து சூரியனைப்பார்க்க மிகுந்த பிரகாசத்தோடே அந்தப் புண்ணியவதி இருந்த குதிரைலாயத்திலே காண்பித்து அவளுக்குச் சந்தோஷமான வார்த்தை சொல்லுகிறபோது அவளுடைய கஸ்தி அமர்ந்திருந்ததும் அல்லாமல் உடனே ஒரு நல்ல ஆண்பிள்ளை பிறந்தது. அப்போ தேவமாதா தம்முடைய திருக்கையிலே அந்தக் குழந்தையை ஏந்திச் சீலையினாலே சுற்றி அங்கேயிருந்த வைக்கோலின் மேலே கிடத்தினாள்.

பிற்பாடு சேசுநாதர் பரமண்டலங்களிலே இருந்து ஆயிரஞ் சம்மனசுகளோடே அந்தக் குதிரைலாயத்திலே வந்து பிறந்த குழந்தைக்குத் தம்முடைய திருக் கையினாலே ஞானஸ்நானங் கொடுத்தார். ஞானஸ்நானங் கொடுக்கிறபோது ஞானத்தாயார்போலே தேவமாதா அந்தக் குழந்தையைத் தமது திருக் கையிலே தூக்கிக்கொண்டிருந்ததுமல்லாமல் சேசுநாதர் தம்முடைய திருத்தாயாருடைய திருநாமத்தைக் குறித்து அந்தக் குழந்தைக்கு மரியானென்கிற பெயரிட்டார். இது முடிந்த பிற்பாடு

கர்த்தர் நூஸ்பயியென்கிற அந்தப் பெண்பிள்ளை யைப் பார்த்துத் திருவுளம் பற்றினதாவது: நீ முன் னேயைப்போலே நம்முடைய திருத்தாயாருக்கு ஊழியம் பண்ணு. அதேனென்றால் அவளுடைய வேண்டுதலினாலே உனக்கு இத்தனை பாக்கியம் வந்ததென்று சொன்னார். பிற்பாடு தேவமாதா அந் தக் குழந்தையைத் தாயிடத்தில் கொடுக்கிறபோது அவளைப் பார்த்து என் பிரியமுள்ளவளே உன்னு டைய குழந்தையை வாங்கிக்கொள், இந்தக் குழந் தைக்குப் புத்திவந்த பிற்பாடு நம்முடையபேரிலே பத்தியாய் இருக்கத்தக்கதாகப் புத்திசொல்லு, அவ னுடைய நடக்கைகளை அவனுடைய பேருக்குச் சரி யாய் இருக்கப்பண்ணு, அப்படியே நாம் அந்தக் குழ ந்தைக்கும் உனக்கும் எப்போதுஞ் சகாயமாய் இரு ப்போம் என்று சொன்னவுடனே கர்த்தரும் அவரு டைய திருத்தாயாரும் சம்மனசுகளும் மறைந்து போனார்கள். அந்தச் சமயத்திலே அவளடைந்த மகா சந்தோஷத்தினாலே சொன்னதாவது: இந்தத் துலு க்கன் கிட்ட நானிருக்கிற அடிமைத்தனம் எனக் குப் பாக்கியம் பெறுவித்தது. இந்தக் கஸ்தி வழியாக எனக்கெத்தனை நன்மைகள் வந்தது. என் அரண்ம னையில் இருந்தால் எனக்கு இந்த நன்மை வாராதே ன்று நினைத்துக் கர்த்தரையுந் தேவமாதாவையுந் தோத்திரம் பண்ணிச் சந்தோஷத்தின் மிகுதியினா லே அழுதாள்.

மறு நாள் இவளுக்குப் பிள்ளை பிறந்த சேதி துலுக்கன் அறிந்து அவள் பேரிலே இந்தத் துலுக்க னுக்கு உண்டான வற்மம் எல்லாம் நீங்கித் தேவமா தாவின் புதுமையினாலே அவள் பேரில் இரக்கமாய் இருந்து முன்னேயைப்போலே அவள் ஊழியம் பண்ண வேண்டாமென்று சொன்னதும் அல்லாமல்

தினம் அவளுக்குச் சாப்பாடு கொடுத்து நன்றாய் விசாரித்தான்.

அந்தக் குழந்தை பிறந்த நாற்பதாம் நாள் தேவமாதா கர்த்தரைக் கோயிலிலே ஸ்தாபித்த திருநாளன்று. தானே ஒரு சம்மனசு அந்தப் புண்ணியவதிக்குக் காண்பித்துச் சொன்னதாவது: திருச்சபை ஆசாரத்தின்படியே நீ இன்றைக்குக் கோயிலிலே வந்து உன்னுடைய நாற்பதாம நாள் சடங்கு முடிக்க வேணுமென்றார். இதற்கவள் இந்தச் சீமை துலுக்கன் சீமையானதினாலே இங்கே கோயிலும் குருவுமில்லை என்றாள். அப்போ சம்மனசு இதினால் விக்கினம் இல்லை எழுந்திருந்து உன் குழந்தையை எடுத்துக்கொள்ளென்று ஒரு மெழுகுத்திரியை அவளுக்குக் கொடுத்துப் பயப்படாமல் என் பிறகாலே வாவென்றார். அப்படியே அவள் சம்மனசுவின் பிறகேபோய்க் கோயிலிலே சேர்ந்தாள். அந்தக் கோயிலிலே இருந்த தேவமாதா இவளைப்பார்த்து நாற்பதாநாள் சடங்கு முடிக்க உள்ளே வாவென்று அழைத்தாள். அவள் உள்ளே போனவுடனே அநேகஞ் சம்மனசுகள் நல்ல பாட்டுகளைப் பாடுகிறபோது சேசுநாதர் அங்கே காண்பித்துப் பூசை பண்ணத் துவக்கினார். காண்பித்த கர்த்தர் அப்போது தானே நாற்பதாநாள் சடங்கை இவளிடத்திலே நிறைவேற்றினார். பூசை முடிந்த பிற்பாடு பூலோகத்துக்கு ஆண்டவள் அந்தப் புண்ணியவதியைப் பார்த்துச் சொன்னதாவது: நமக்குப் பிரியமுள்ளவளே, சந்தோஷமாய்ப்போ, அதேதென்றால் இன்றைக்கு நம்முடைய திருநாள் முடியுமுன்னே உன்னுடைய அடிமைத்தனம முடிவதும அல்லாமல் நீ பிறந்த வீட்டிலே சேருவாய். நாம உனக்குச் செய்த சகாயத்தை மறந்து போகாதே. முன்னையைப்போலே நம

முடைய பேரிலே பத்தியாயிரு. உன்னுடைய குழந் தையாகிற மரியானென்கிறவனை நம்முடைய மகனை ப்போலே வளர்த்துக்கொள். நீ அவனுக்குப் பால் கொடுக்கிறப்போலே நம்முடைய பேரிலே பத்தி யாய் இருக்கிற ஞானப்பாலைப் புகட்டென்று திருவு ளம் பற்றினாள்.

தேவமாதா சொன்ன பிரகாரத்துக்கு அன்பிராக் திரிதானே சம்மனசுகள் கிரிகையினாலே நிறைவேற் றினார்கள். அந்தப் புண்ணியவதி தான் பிறந்த கொம்போஸ்தலெல்லென்கிற பட்டணத்திலே இருக்கிற அர்ச். பாகப்பாருடைய பெரிய கோயிலிலே தானும் தன்னுடைய குழந்தையும் இருக்கிறதை மிகுந்த ஆச்சரியத்தோடே கண்டாள். அதிலேதானே தே வமாதாவுக்கான தோத்திரம் பண்ணின பிற்பாடு தன் அரண்மனையிலே போனாள். அவளுடைய உற வின்முறையாரும் மற்றவர்களும் எத்தனைபேர் நட ந்த சேதியைக் கேட்டார்களோ அத்தனைபேரும் மோட்சராக்கினிக்கு ஆனதோத்திரஞ் சொன்னதும் அல்லாமல் அப்படிக்கொத்த நல்ல ஆண்டவளுக்கு ஊழியம பண்ணுகிறதற்கு மிகுந்த ஆசையாய் இரு ந்தார்கள். இதல்லாமல் அந்தப் புண்ணியவதி அநே கவருஷஞ் சீவனோடே இருந்து தன்னுடைய குழந் தைக்குத் தேவமாதாவின் பேரிலே பத்திவரத்தக்க தாக அடிக்கடி புத்திசொல்லி மகா பிரயாசப்பட் டதுந் தவிர பூலோகத்தின் ஆண்டவளைக் குறித்து அநேகம்வகைப் புண்ணியம் பண்ணுகிறதிலே கால ஞ்செலவழித்துக்கொண்டுவந்தாள். பிற்பாடு அவள் அவஸ்தையாய் இருக்கிறபோது கர்த்தனைக் கோயி லிலே தேவமாதா ஸ்தாபித்த திருநாளிலே மோட் சத்துக்கு இராக்கினியானவள் அவளுக்குக் காண் பித்து அவள் நல்ல ஆயத்தத்தோடே மாணக்கை

அடைந்தவுடனே அவளுடைய ஆத்துமத்தை மோட்ச ராச்சியத்திலே கூட்டிக்கொண்டு போனாள்.

கிறீஸ்துவர்களே, நீங்கள் உங்கள் விருட்சத்திலே கனிகளைப் பறிக்கிறாப்போலே இப்போ கேட்ட புதுமையிலே ஞானக் கனிகளைப் பறிக்கவேணும். முந்தமுந்த நாம சொன்ன புண்ணியவதி துலுக்கர் வழியாகத் தனக்கு வருகிற அடி அவமான வசையினாலே உண்டான கஸ்தியைப்பார்க்க மோகபாவத்திலே இருக்கிற பொல்லாப்பு மிகவும் அதிகமென்று நினைத்து அதைத் தான் செய்யாதபடிக்கு முன் சொல்லப்பட்ட கஸ்தி தனக்கு வரச் சமமதித்திருந்தாள். அந்தப் பிரகாரமாய் நீங்கள் நினைத்துக் கனமான பாவத்திலே விழாதபடிக்கு எந்தெந்தக் கஸ்தியும அநுபவிக்கத் துணிந்திருக்கவேணும.

இரண்டாவது. உங்களுக்குவந்த கஸ்தி நீங்கிப் போகத்தக்கதாக முன் சொல்லப்பட்ட புண்ணியவதியைப்போலே உங்கள் விசுவாச நம்பிக்கையெல்லாந் தேவமாதாவின் பேரிலே வைத்து அந்த ஆண்டவளைத் தினந்தினம வேண்டிக்கொண்டால் உங்களுடைய கஸ்தி முடியும.

மூன்றாவது. மோட்சத்துக்கு இராக்கினியானவள் பேரிலே உங்களுடைய பிள்ளைகளுக்குப் பத்திவரத் தக்கதாக நீங்கள் பிரயாசப்பட்டுப புத்தி சொன்னால் தேவமாதாவுக்கு மகா சந்தோஷம வரும்.

நாலாவது. அந்தப் புண்ணியவதி மோட்சத்துக்கு இராக்கினியானவள் பேரிலே வைத்த பத்திமுகாந்தரமாக அவளுக்கு அத்தனை பாக்கியம வந்ததென்று சேசுநாதர்தாமே திருவுளம்பற்றினார். அந்தப் பிரகாரமாய் உங்களுடைய பத்தி எல்லாம் பூலோகக்காக்கும் ஆண்டவள் பேரிலே வைத்துத் தின

தினந் தப்பாமல் ஐம்பதுமணிச்செபம் பண்ணிக் கொண்டு வந்தால் உங்களுக்கு அநேகம் நன்மைகள் வருமென்று அறியக்கடவீர்களாக.

---

## சகம் சனிக்கிழமைப்

புதுமையாவது.

உரோமையில் அலங்கார கத்தரீனாள்
செபமாலை மாதாவின் சபையிலுட்பட்டு அதைச்
செபித்ததினால் சேசுநாதர் அவளுக்குத்
தரிசனையாகி அவளை நல்ல
வழியிலே திருப்பின
அற்புதம்.

உரோமை என்கிற பட்டணத்திலே அர்ச். தொமினீக்கு காலத்திலே கத்தரீனென்கிற ஒரு பெண்பிள்ளை இருந்தாள். அவள் தன் முகத்தின் அலங்காரம் மற்றப் பெண்பிள்ளைகளுடைய சவுந்தரியங்களில் அதிகரித்திருந்தபடியினாலே அவளுக்கு அலங்கார கத்தரீனென்று பேராச்சுது. அவள் மோக பாவத்தின் வழியாகப் பசாசின் கையிலே அகப்பட்டதும் அல்லாமல் அவளிடமாக அநேகம் பேர்கள் பசாசுக்கு அடிமையாய்ப் போனார்கள். இப்படி இருக்கையிலே ஒரு நாள் அர்ச். தொமினீக்கு நூற்றைம்பதுமணிச் செபத்தின்பேரிலே சொல்லுகிற ஞானப் பிரசங்கங் கேட்கத்தக்கதாகத் துரைமக்க

ளும் பெரியவர்களும் வெகுசனங்களும் போகிறதை அவள் கண்டு அவளும் அங்கே போனாள். அந்தப் பிரசங்கத்திலே இந்த நூற்றைம்பதுமணிச் செபத்தின் வழியாகத் தேவமாதா அநேகம் புதுமைகளையும் உபகாரங்களையும் பண்ணிக்கொண்டு வருகிறாளென்று சொல்லுகிறதை அவள் கேட்டு அதின் பேரிலே ஆசையாய் இருந்து ஞானப்பிரசங்க முடிந்தபிற்பாடு துரைமக்களும் பெரியவர்களுந் தங்கள் பேரை அந்தச் சபையிலே எழுதிவைக்கிறதை அவள் கண்டு தன்னுடைய பேரையும் எழுதிவைத்தாள். பிற்பாடு செபமாலை வாங்கித் தினம் ஐம்பது மணிச்செபம் பண்ணுகிறபோது அர்ச். தொமினீக்குப் படிப்பித்த பிரகாரத்துக்கு அந்தந்தத் தேவ இரகசியத்தின் பேரிலே தியானம் பண்ணுவாள். ஆனால், இப்படிக்கொத்த செபம் பண்ணினாலும் பாவ நடக்கையை விட்டவளல்ல. அந்த ஆகாத நடக்கையிலே அவள் துரைமக்களை மாத்திரந் தன்னிடத்திற் சேர்க்கிறதல்லாமல் வேறே மனுஷர் எத்தனை பணங் கொடுத்தாலுஞ் சம்மதிக்கிறவளல்ல.

இப்படி இருக்கையிலே ஒரு நாள் மகா மகிமையோடே அவள் பட்டணத்தின் தெருவீதியிலே போகிறபோது அவள் ஒருகாலுங் காணாத துரைமகன் அவள் எதிரே வருகிறதைக் கண்டு அவன்பேரிலே அவள் இச்சை வைத்து அவனுக்கு நல்ல வார்த்தை சொன்ன பிற்பாடு இன்னவிடத்திலே தன் அரண்மனை இருக்குதென்று அடையாளஞ் சொல்லி இன்றிராத்திரிக்குத்தானே நீர் அங்கே வந்திருந்தால் பாக்கியம் வருமென்று சொன்னதற்கு அந்தத் துரைமகன் சம்மதித்ததினாலே தான் முன்னே போய் ஆயத்தம் பண்ணினாள். அன்றுதானே சூரியன் அஸ்தமித்த பிற்பாடு அந்தத் துரைமகன்

அவளுடைய அரண்மனையிலே போய்ச் சேர்ந்தவுடனே அவள் பட்சத்தின் ஆசாரங்களெல்லாந் துரைமகனிடத்தில் குறையில்லாமல் காண்பித்த பிற்பாடு பற்பல பேச்சுகள் பேசிக்கொண்டிருந்தார்கள். இந்த இரண்டுபேரும் இராத்திரி கூடச் சாப்படுகிற போது அவள் துரைமகனுடைய அலங்கார முகத்தை அடிக்கடி பார்த்ததினாலே வரவர அவளுக்கு அவன்பேரிலே சொல்லக்கூடாத பட்சமாச்சுது. இதல்லாமல் துரைமகன் கையினாலே தொடப்பட்ட பதார்த்தங்களெல்லாம் இரத்தம் பட்டாப்போலே இருக்கிறதைக் கண்டு கத்தரீனென்கிறவள் ஆச்சரியப்பட்டுத் துரைமகனைப் பார்த்துச் சுவாமீ உம்முடைய கையிலே சூரிகத்தி பட்டதோவென்று கேட்டதற்குத் துரைமகன் இல்லையென்றான். அதற்கு அவள் இந்த வஸ்துகள்மேலே பட்டிருக்கிற இரத்தம் ஏதென்றாள். அப்போது துரைமகன் அவளைப் பார்த்துச் சேசுநாதருடைய திருவிரத்தம் பூசப்பட்ட கறி கிறீஸ்துவர்கள் சாப்படுகிறது நல்லதென்று உனக்குத் தெரியாதோவென்றான். அவள் ஒருகாலுங் கேளாத இந்த நல்ல புத்தியை ஆச்சரியத்தோடே கேட்டு இவர் மற்றத் துரைமக்களைப்போலல்லவென்று நினைத்துத் தேவரீரார்? எங்கேயிருந்து இந்தப் பட்டணத்துக்கு வந்தீரென்று கேட்டாள். இதற்குத் துரைமகன் சாப்பாட்டு முடிந்த பிற்பாடு நானும் நீயும் ஒரு அறையிலே தனியே இருக்கிறபோது நாம் ஆரென்று உனக்குச் சொல்லுவோமென்றான்.

அப்படியே இரண்டுபேருஞ் சாப்பட்டு முடிந்த பிற்பாடு கத்தரீனென்கிறவள் துரைமகனை இரகசியமாக அறையிலே கூட்டிப்போனாள். அங்கே இரண்டுபேரு மாத்திரம் இருக்கிறபோது துரைமகன்

இருந்தாப்போலே மகா அலங்காரமுள்ள ஒரு சின்ன குழந்தையைப்போலே காண்பித்தார். கத்தரீனென்கிறவள் இதைக் கண்டு ஆச்சரியத்தினாலே பேசாமலிருந்தாள். சற்று நேரத்துக்குப் பிற்பாடு அந்தக் குழந்தை தாமே இருந்தாப்போலே பெரிய ஆளாய் முப்பத்திரண்டு வயது ரூபமாய் இருக்கிறதையும் அவருடைய தலையிலே முண்முடி இருக்கிறதையுங் கைகால் திருவிலாவிலே நின்று இரத்தந் திரளாயோடுகிறதையும் அவள் கண்டவுடனே மகா இரக்கத்தோடே சுவாமீ தேவரீரார்? தேவரீருக்கு இந்தக் காயம் எந்த நிஷ்டூரமுள்ளவன் வருத்துவித்தானென்று கேட்டாள். அப்போது அவளைப் பார்த்து நாம் உன்னை இரட்சித்த சேசுநாதர்தாமே. நீ செய்த பாவத்தினாலே இந்தக் காயங்களெல்லாம நீதானே வருத்துவித்தாய். நாம உனக்காக இத்தனை கஸ்தி இத்தனை காயம் அநுபவித்திருந்தாலும் நன்றி அறியாதவளே நீ நம்மைச் சிநேகிக்கிறதற்குப் பதிலாக நீ செய்த பாவத்தினாலே நம்மைத் திரும்பச் சிலுவையிலே அறைந்தாயே. கத்தரீனென்கிறவளே நமக்கு ஏறாத பாவங்களை விட்டுவிடு. உன்னுடைய மனதைத் திருப்பி நாம் உனக்குக் காண்பித்த அளவில்லாத பட்சத்துக்குப் பிரதியாக உன்னுடைய பட்சத்தை வரப்பண்ணென்றார். இப்படி சேசுநாதர் சொல்லுகிறபோது அவள் திரளாய் அழுததும் அல்லாமல் தான் செய்த பாவத்துக்குப் பட்ட மனஸ்தாபத்தினாலே சாகிற தறுவாயாயிருந்தாள்.

இப்படியிருக்கையிலே பாடுபட்ட சுரூபமாய்க் காண்பித்த கர்த்தர் இருந்தாப்போலே சூரியனைப் பார்க்க மகா காந்தியாய் மகா சந்தோஷத்தோடே இருக்கிறதை அவள் கண்டாள். அப்போ ஆண்டவர் அவளைப் பார்த்துச் சொன்னதாவது: நீ பாவ

மாகிற மரணத்தைவிட்டு நம்மோடே கூட உயிர்த்தெழுந்திருக்கிற காலம் வந்தது.' உன்னுடைய பாவத்தினாலே அநேகம் பேர்களுடைய ஆத்துமங்களுக்கு நீ மோசம் வருத்துவித்தாய். இப்போ நமது உதவியைக்கொண்டு நீ பண்ணப்போகிற தபசினாலே அநேகம் பேர்களுடைய ஆத்துமங்களுக்குப் புண்ணியமாதிரிகையாயிரு. நம்முடைய தாயார்பேரிலே நீ பத்தியாயிரு. அதேனென்றால் நாம உனக்குக் காண்பித்த காரியம் அவளுடைய வேண்டுதலினாலே உனக்கு வந்தது. நீ நூற்றைம்பது மணிச் செபம பண்ணுகிறபோது சந்தோஷத் துக்க மகிமையாகிய இந்த மூன்றுவகைத் தேவ இரகசியங்களின்பேரிலே தியானம் பண்ணு. அதினிமித்தம் நாம் இப்போ உனக்குக் குழந்தையும் பாடுபட்ட முகமும் மகிமைச் சந்தோஷத்தின் சாயலும் ஆக இந்த மூன்று வகையான ரூபமுங் காண்பித்தோமென்று சொன்ன பிற்பாடு சேசுநாதர் காணாமல் மறைந்துபோனார்.

மறுநாள் கத்தரீனென்கிறவள் அர்ச். தொமினீக்கு இடத்திற் போய் நடந்த சேதி எல்லாஞ் சொன்ன பிற்பாடு அவரிடத்திலே பாவசங்கீர்த்தனம பண்ணினாள். பிற்பாடு தன்னுடைமையெல்லாம விற்றுப் பிச்சைக்காரருக்குக் கொடுத்துத் தான் செய்த பாவத்துக்காகச் சாகுமட்டுங் கடின தபசு பண்ணினாள். இதினாலே தேவமாதா அவள்பேரிலே பட்சமாயிருந்து சிலவிசை அவளுக்குக் காண்பித்தாள். இதன்றியே சேசுநாதர்தாமே அர்ச். தொமினீக்கென்பவருக்குக் காண்பித்து அறிவித்ததாவது: கத்தரீனென்பவள் பண்ணுகிற தபசினாலே அவள் நமக்கும் நமது தாயாருக்கும் பிரியமுள்ளவள்தானேயென்றார்.

கிறீஸ்துவர்களே, தேனீயானது அந்தந்தப் புஷ்பங்களிலே இருக்கிற இரசங்களை யெடுத்துத் தேன்

உண்டாக்குகிறதுபோலே நீங்கள் இப்போ கேட்ட பதுமையிலே அந்தந்த ஞானப் பிரயோசனமாகிற இரசங்களை எடுத்து உங்கள் ஆத்துமத்திலே ஞானத் தேனை உண்டாக்கவேணும். முந்த முந்தச் சேசுநாதர் கத்தரீனென்பவளுக்குக் காண்பித்து உன்னுடைய பாவத்தினாலே நீ திருமப நம்மைச் சிலுவையிலே அறைந்தாயென்றார். அதெதென்றால் அப்போஸ்தலரான அர்ச். சின்னப்பர் சொன்னபடியே பாவிகள் தங்கள் பாவத்தினாலே சேசுநாதரைத் திருமபச் சிலுவையிலே அறைகிறார்களென்கிறதினாலே கிறீஸ்துவர்களே நீங்கள் அப்படிப்பட்ட நிஷ்டூரம் சேசுநாதரிடத்திலே செய்யாதபடிக்குப் பாவஞ் செய்யாதிருக்கவேணும.

இரண்டாவது. முன் சொல்லப்பட்ட பெண்பிள்ளை மகா பாவியாய் இருந்தாலும் கர்த்தருடைய காயங்களைக் கண்டு அவருடைய உதவியினாலே பாவத்தைவிட்டு மனந்திருமபினாள். அப்படியே உங்களுக்குள்ளே யாதொரு பாவி இருந்தால் பாடுபட்ட சுரூபத்திலிருக்கிற காயங்களைப் பராக்கில்லாமல் உற்றுப்பார்த்து அந்தக் காயங்களுக்கு மற்றப் பாவிகளோடே தாங் காரணமென்று பத்தியோடே நினைத்தால் ஆண்டவருடைய உதவியினாலே அந்தப் பாவி மனந்திரும்புவான்.

மூன்றாவது. நாம் இப்போது சொன்ன பெண்பிள்ளை தினம் ஐம்பது மணிச் செபம் பண்ணுகிற போது பராக்கில்லாமல் அந்தந்தத் தேவ இரகசியத்தைத் தியானித்ததினாலே தேவமாதாவின் வழியாக அவளுக்கு அநேக ஞான நன்மைகள் வந்ததென்று கேட்டீர்களே. ஆகையால் அப்படிக்கொத்த ஞான நன்மைகள் உங்களுக்கு வரத்தக்கதாகச் சம்மனசுகளுடைய இராக்கினியைக் குறித்துத் தினந்

தின்ந் தபபாமல் ஐம்பது மணிச் செபம் பண்ணுகி றபோது பராக்கில்லாமல் அந்தந்தத் தேவ இரகசிய த்தைத் தியானிக்கவேணும். சிலர் அப்படிக்கொத்த செபம பண்ணுகிறபோது தங்களுடைய பிழைப்பா கிற பயிர் ஆடுமாடுகளின்பேரிற் பற்பல விசாரங் களை நினைப்பார்கள். இப்படியாகாதென்று அறியக் கடவீர்களாக.



## சஉ-ம் சனிக்கிழமைப்

புதுமையாவது.



### தாயாருடைய மன்றாட்டைக் கேட்டுத் தேவமாதா மகளை இரட்சித்த அற்புதம்.

பிரபானென்கிற சீமையிலே அல்செத்தென்கிற ஊரிலே ஏர்மர்ன் எலிசபெத்தென்கிற புருஷன் பெ ண்சாதி, இருவர் இருந்தார்கள். இவர்கள் தங்கள் மகளாகிய செர்த்துருத்தென்கிறவளைப் பார்த்துச் சொன்னதாவது: காட்டுக்குள்ளே மேய்கிற இரண்டு பசுக்களை வீட்டுக்கு ஓட்டிக்கொண்டு வாவென்று அ னுப்பினார்கள். அந்தப்பிரகாரமாய்ச் செர்த்துருதெ ன்கிறவள் காட்டுக்குள்ளே போகிறபோது இராட்ச தனைப்போலே உயர்ந்த மனுஷன் உடம்பெல்லாம் நீ ளரோமமாய்த் தலையிலே இரண்டு கொம்புள்ளவனா ய்க் கைகால் நகமெல்லாம் நீளமாய் வளர்ந்திருக்கிற தைக் கண்டு இது பசாசென்று நினைத்து மிகுந்-

பயத்தோடே ஓடப்பார்க்கிறபோது அவன் அவளைப் பிடித்தான். அவள் எத்தனைக் கண்ணீர்விட்டு அழுதாலுங் காட்டுக்குள்ளே அழைத்துக்கொண்டு போனான். அப்போ செர்ந்துருதென்கிறவளுக்குப் பதின்மூன்றுவயதாம் இருந்தாலும் இந்தக் கொஞ்சவயதிலே அவளிடத்திற் பத்தியும் புத்தியும் இருந்ததனாலே தன்னைப் பிடித்துக்கொண்டு போகிறவன் வழியாகத் தனக்கு மோசம் வாராதபடிக்கு ஒரு உபாயம் நினைத்தாள்.

அதாவது: காட்டுக்குள்ளே ஒரு சிலுவை நாட்டி இருந்தது. அதை இவள் கண்டு இருந்தாப்போலே குதித்து அந்தச் சிலுவையை எட்டிப் பிடித்தாள். அப்போது இராட்சதன் ரூபமான அந்தப் பசாசு அவளைத் திருமபப் பிடிக்கிறதற்குச் சிலுவைக்குப் பயந்து கிட்டப் போகமாட்டாதிருந்தாலும் எட்டி நின்று அவளை வாச்சொல்லிற்று. அவள் வாராமலிருக்கிறதைக் கண்டு தின்கிறவஸ்துகளாகிற நல்ல கனி பதார்த்தங்களை அவளுக்குக் காண்பித்து இதைத் தின்ன வாவென்று கூப்பிட்டது. ஆனால் அவள் பசாசின் கபடத்தைக் கண்டு பிடித்துச் சிலுவையை விட்டு ஒரு அடியாகிலும் அப்புறம் வைத்தவளல்ல.

இப்படி இருக்கையிலே அவளுடைய தாய் தகப்பன் சூரியன் அஸ்தமித்துப் போனதைக் கண்டு தங்கள் மகள் வரவில்லையென்று மகா கஸ்தியோடேயும் விசாரத்தோடேயும் நாலுபக்கமுந் தேடினார்கள். அப்படி அவளைத் தேடிக் காணாததினாலே வெகு துக்கத்தோடே இருந்தார்கள். மறுநாள் வெள்ளிக்கிழமையிலே எங்குஞ் சுற்றி விசாரித்தாலுங் காணமாட்டாதே போனார்கள். மறுபடி சனிக்கிழமை செர்த்துருதென்கிறவளுடைய தாயானவள் தேவமாதாவைப் பார்த்து அழுகையோடே வேண்டிக்கொண்டதா

வது: கஸ்திப்படுகிறவர்களுக்கு ஆறுதலுள்ளவளே, தேவரீராலே என்னுடைய மகள் செர்த்துருதென்கிறவளைக் கண்டோமானால் பொயிலெக்கென்கிற பட்டணத்திலிருக்கிற உம்முடைய கோயிலுக்கு வேண்டுதலாகப் போவேனென்று வார்த்தைப்பாடு கொடுத்தாள். இப்படி வேண்டிக்கொண்ட பிற்பாடு அவள் தேவமாதாவின் பேரிலே கெட்டி நம்பிக்கையாய் இருந்தபடியினாலே அவளுடைய கஸ்தி சற்றும் அமர்ந்திருந்தது. இந்த மூன்று நாளுஞ் செர்த்துருதென்கிறவள் சிலுவையைப் பிடித்தபடியே விடாமலுஞ் சாப்படாமலும் இருந்ததன்றியே பசாசுங் கிட்டக் காத்துக்கொண்டிருந்தது.

இப்படியிருக்கையிலே தயையுள்ள அர்ச். கன்னிமரியாயி எலிசபெத்தென்கிற அந்தப் புண்ணியவதி வேண்டுதலைக் குறித்து ஞாயிற்றுக்கிழமை அதிகாலமே மகா மகிமையோடே செர்த்துருதென்கிறவளுக்குக் காண்பித்து ஆறுதலான வார்த்தை சொன்ன பிற்பாடு அங்கே காத்துக்கொண்டிருந்த பசாசை மகா கோபத்தோடே பார்த்து இக்ஷணமே அப்பாலே போவென்று சொன்ன உடனே பசாசு ஓடிப்போச்சுது. பிற்பாடு தேவமாதா தம்முடைய திருக்கையினாலே' செர்த்துருதென்கிறவளுடைய கையைப் பிடித்து அவளுடைய வீட்டுக்குக் கூட்டிக்கொண்டு போனாள். அந்தச் சமயத்திலே அங்கே அவளுடைய தாய் தகப்பன் ஒருத்தரும் இல்லாததினாலே வீட்டிலே சேர்ந்தபிற்பாடு பூலோகத்தின் ஆண்டவள் "செர்த்துருத்தென்கிறவளைப் பார்த்துத் திருவுளாம் பற்றினதாவது: நீ மூன்று நாள் சாப்பாடில்லாமலும் நித்திரை இல்லாமலும் இருந்தபடியினாலே மெத்த இளைப்பாய் இருக்கிறாயே. இதினாலே கட்டிலின் மேலே படுத்துக்கொண்டு நித்திரை பண்

ணென்று பட்சமுள்ள தாயாரைப்போலே சொல்லிக் காணுமல் மறைந்து போனுள்.

அப்படியே செர்த்துருத்தென்கிறவள் நித்திரை போனுள். மத்தியான நேரத்திலே அவளுடைய தாய் எலிசபெத்தென்கிறவள் வீட்டுக்குள்ளேவந்து கட்டிலின் மேலே நித்திரை பண்ணுகிற மகளைக் கண்டு ஆச்சரியப்பட்டு அநுபவித்த சந்தோஷத்தினுலே இது எப்படி ஆச்சுது என்று கெட்டியாய்க் கூப்பிட்டாள். அந்தச் சத்தத்தினுலே அவளுடைய மகள் விழித்துக்கொண்டதும் அல்லாமல் அந்த வீட்டுக்குச் சுற்றிலும் இருந்தவர்கள் இந்தச் சத்தம் ஏதென்று பார்க்க வந்தார்கள். இவர்கள் எல்லாருங் கூடிச் செர்த்துருத் என்கிறவளை நடந்த சேதி ஏன்ன? மூன்று நாளும் எங்கே இருந்தாய் என்று கேட்டதற்கு அவள் மூன்று நாளாய் ஒன்றும் சாப்படாததினுலே எனக்கு இளைப்புந் தவிப்புமாயிருக்குது. சாப்பட்ட பிற்பாடு சொல்லுகிறேன் என்றுள். அந்தப் பிரகாரமாய் அவள் சாப்பட்ட பிற்பாடு இளைப்பாறி நடந்த சேதிகளை ஒழுங்கோடே சொன்னுள். இதைக் கேட்ட எல்லாரும் விசேஷமாய் அவளுடைய தாய் தகப்பன் மாரும் தேவமாதா செய்த இந்தக் கனமான சகாயத்துக்காக வெகு சந்தோஷத்தோடே பூலோகத்தின் ஆண்டவளைத் தோத்திரம் பண்ணினுர்கள். மறுநாள் செர்த்துருத் என்கிறவளும் அவளுடைய தாய் தகப்பனும் வேண்டுதலை செலுத்தத் தக்கதாக முன் குறித்த தேவமாதாவின் கோயிலிலே போய்க் காணிக்கை கொடுத்து நல்ல மனதோடே மோட்சராக்கினியை ஸ்துதித்தார்கள்.

கிறீஸ்துவர்களே, பெற்ற பிள்ளையானது தாயித்திலே பால் குடிக்கிறுப்போலே நீங்கள் இந்தப் புதுமையைக் கண்டு எல்லாருக்குந் தாயாகிற

தேவமாதாவின் பத்தி என்கிற ஞானப் பாலைக் குடிக்க வேணும். முந்தமுந்த இப்போ சொல்லப்பட்ட செர்த்துருத் என்கிறவள் சிலுவையைக் கொண்டும எல்லாருக்குந் தாயாகிற தேவமாதாவின் பத்தியைக் கொண்டும் பசாசைச் செயித்தாள் என்று கேட்டீர்களே. இந்தப் பிரகாரமாய் நீங்கள் பசாசின் கையிலே அகப்படாத படிக்குச் சிலுவையின் பேரிலேயுங் காத்தருடைய பாடுகளின் பேரிலேயும மகா பத்தியாய் இருக்கவேணும். அதேதெனென்றால் அடபடிக்கொத்த புண்ணியத்துக்குப் பசாசு மெத்தவும் பயந்து இருக்கிறதென்று அர்ச். பெரிய அந்தோனியார் தமது சீஷருக்கு அறிவித்தார்.

இரண்டாவது. செர்த்துருத் என்கிறவள் காணமற் போனபிற்பாடு அவளுடைய தாயானவள் தேவமாதாவை வேண்டிக்கொண்டதினாலே காரியம் அநுகூலமாச்சுதென்று சொன்னோமே. ஆகையால் தம்பி தங்கைகமாரே ஒரு சமயத்திலே உங்களுக்கு யாதொரு கஸ்திவந்தால் தத்தளியாமல் வேண்டுதல் வழியாகத் தேவமாதாவின் அடைக்கலமாய்ப் போய் அவள் பேரிலே தக்க பத்தி நம்பிக்கை எல்லாம வைத்தால் காரியம் அநுகூலமாகுமென்று நினைக்கத்தகும.

மூன்றாவது. இந்தப் புதுமையிலே சொன்ன காரியம அநுகூலமான பிற்பாடு அந்தப் பிள்ளையினுடைய தாய் தகப்பன் தாமதம இல்லாமல் வேண்டுதல் செலுத்தினார்கள். அந்தப் பிரகாரமாய்த் தேவமாதாவின் உதவியினாலே உங்கள் காரியம அநுகூலமான பிற்பாடு பூலோகத்தின் ஆண்டவளுக்குத் தோத்திரஞ் சொல்லி நன்றியறிந்த மனதோடே உங்கள் வேண்டுதல் செலுத்தவேணுமென்று அறியக்கடவீர்களாக.

## ௪௨-ம் சனிக்கிழமைப்

## புதுமையாவது.



*தாயார் மன்றாட்டைப் பற்றித் தேவமாதா*
*பசாசின் வசத்தினின்று மகனை*
*இரட்சிப்பித்த*
*அற்புதம்.*

இத்தாலியாதேசத்திலே ஒரு சேவகனுடைய பெண்சாதி மோட்சராக்கினியின்பேரிலே மிகவும் பத்தியாய் இருந்ததினாலே அப்படிக்கொத்த பத்தி தான் பெற்ற மகனுக்கும் வரத்தக்கதாக அவனுக்குப் புத்தி சொல்லிப் பிரயாசப்பட்டாள். அவள் பட்ட பிரயாசத்தினாலே மகன் தாயைப்போலே தேவமாதாவின் பேரிலே மகா பத்தியாயிருந்து தினந்தப்பாமல் அந்த ஆண்டவளைக் குவித்து அநேகஞ் செபம் பண்ணுவான்.

இப்படி இருக்கையிலே அவளுடைய புருஷன் பாளையத்தில் இருக்கிறபோது சண்டையிலே செத்தான். அவன் செத்துக் கொஞ்ச நாளைக்குப் பிற்பாடு ஒரு சேவகன் அவளுடைய வீட்டுக்கு வந்து அவள் புருஷன் செத்த சேதியை அவளுக்கு அறிவித்தான். அவளும் அவள் மகனும் வெகு கஸ்திப்பட்டு எம்மாத்திரம் அழுதார்களென்று வாக்கினாலே சொல்லக் கூடாது. வந்த சேவகன் அவர்களுக்கு ஆறுதலான வார்த்தை சொன்னதும் அல்லாமல் பின்னையும் அவளுக்கு அறிவித்ததாவது: உன்னுடைய புருஷனுக்கும் எனக்கும் மெத்தச் சிநேகம் இருந்ததினாலே அவன் அவஸ்தையாய் இருக்கிற

போது என்னைப்பார்த்துச் சொன்னதாவது: நீ என்னுடைய வீட்டுக்குப்போய் என்னுடைய பெண்சாதியையும் பிள்ளையையும் உன்னுடைய அடைக்கலமாகப் பட்சத்தோடே விசாரித்துக்கொள்ளென்று வார்த்தைப்பாடு கொடுவென்றான். அதற்கு நான் நல்லதென்று வார்த்தைப்பாடு கொடுத்தேன். அதைச் செலுத்தத்தக்கதாக இங்கே வந்தேன். அப்படியே நான் எப்போதும் இங்கே இருந்து உன்னையும் உன் மகனையும் நன்றாய் விசாரிப்பேனென்றான். அந்தக் கைமபெண்சாதி இந்தச் சேதியைக் கேட்டதினாலே அவளுக்குக் கஸ்தி அமர்ந்திருந்தது. வந்த சேவகன் தான் நல்ல புண்ணியவான் என்று காண்பிக்கத்தக்கதாக அவளறிய அடிக்கடி செபம் பண்ணுவதுந்தவிரத் தினம் அவளுக்குச் சொல்லுவதாவது: உன்னுடைய மகனை நான்தானே தேவமாதாவின் கோயிலுக்குக் கூட்டிக்கொண்டு போகிறேனென்று சொன்னதற்கு அவள் சம்மதித்ததினாலே வெளியிலே கூட்டிப்போனான். ஆனால் அந்தப் பிள்ளையைக் கோயிலுக்குக் கூட்டிக்கொண்டு போகாமல் இருந்ததும் அல்லாமல் அவனுக்கு அடிக்கடி துர்ப்புத்திசொல்லி அவனைக் கெடுத்தான்.

இதினாலே அந்தப்பிள்ளை தாய் சொன்ன புத்தியைக் கேளாமல் அவளை வைது திட்டுவான். அவன் செபம் பண்ணாமல் இருக்கிறதையும் முன் இல்லாத வேறே ஆகாத அடையாளங்களையும் புதுசாய் மகனிடத்திலே தாய் கண்டு ஆச்சரியப்பட்டுக் கஸ்தியோடே நினைத்ததாவது: என் மகன் முந்தி ஒரு சம்மனசு போலே நடந்தான். இந்தச் சேவகன் என்னுடைய வீட்டுக்கு வந்தயிற்பாடு என் மகன் ஒரு பசாசைப்போலே நடக்கிறான். அந்தச் சேவகன் செபம் பண்ணிப் புண்ணியவானைப்போலே காண்பித்தாலும்

அவளோடேகூட என் மகன் திரிந்த பிறபாடு என் மகனுக்கு இந்த ஆசாரகுணம வந்ததென்று யோசித்துத் தேவமாதாவின் கோயிலிலேபோய் அந்த ஆண்டவளுடைய சுரூபத்தின் முன்பாக முழங்காலிலே இருந்து தாழ்ச்சியோடே அழுதுகொண்டு தன்னுடைய சலிப்பெல்லாஞ் சொன்ன பிற்பாடு அவள் கேட்ட மன்றாட்டாவது: எனனுடைய மகன் ஆத்துமம நாகத்திலே போகாமல் முன்னையைப் போலே உமது பேரிற் பத்தியாய் இருக்கவும என் மகனுக்கு வந்த ஆசாரகுணத்துக்குக் காரணம் இன்னதென்று அறியவுந் தேவமாதாவை மன்றாடின பிற்பாடு அவள் தன்னுடைய வீட்டுக்குப் போய்ச் சேர்ந்தவுடனே வியாகுலமாதாவின் சபையிலுட்பட்ட ஒரு குருவானவர் அங்கே வந்தார். அவர் அவளைப் பார்த்துத் தங்கையே நீ ஏன் கஸ்திப்படுகிறுயென்று கேட்குமிடத்தில் அவள் தன்னுடைய கஸ்தி எல்லாம அவரிடத்திலே வெளிப்படுத்தினுள். அப்போது குருவானவர் நீ பூலோகத்தின் ஆண்டவளை வேண்டிக்கொண்டதினுலே அவள் பேரிலே நம்பிக்கையாயிரு. அவளுடைய உதவியினுலே காரியம் அநுகூலமாகும என்று சொன்ன பிற்பாடு சேவகனைத் தமது கிட்ட வரச்சொன்னுர்.

சேவகன் வந்த பிற்பாடு அவன் குருவானவரைக் கண்டு மெத்தவும் பயப்பட்டதும அல்லாமல் குருவானவரைப் பார்த்துத் தாழ்ச்சியோடே சொன்னதாவது: பிலிப்பென்கிறவரே நீர் எனக்கேன் கஸ்தி வருத்துவிக்கிறீர்? ஐயையோ நீரொப்பொதும் எனக்கு மெய்யான சத்துருதானே என்று சேவகன் சொன்னுன். அதற்குக் குருவானவர் அவனைப் பார்த்துச் சேசுநாதருடைய திருநாமத்தினுலே நீ ஆரொன்றும் எதுக்கு இந்த வீட்டிலே வந்தாய் என்றுஞ்

சொல்லென்று கேட்டார். அப்போ சேவகன் நான் மனுஷனல்ல, இவளையும் இவள் மகனையுங் கொன்று இரண்டு பேரையும் நரகத்திலே இழுத்துக்கொண்டு போகிறதற்கு நான் இங்கே வந்திருக்கிறேன். ஆனால் இவள் தேவமாதாவின் பேரிலே வைத்த பத்தியினால் இந்தமட்டும் என் கையிலே அகப்படாமல் தப்பினா ளென்று சொல்லிற்று. அப்போ குருவானவர் சாபிக்கப்பட்டவனே இப்போதானே நீ காணமற் போகிறதும் அல்லாமல் இனிமேல் இந்த வீட்டிலே வாராதேயென்று சொன்னவுடனே, பசாசு இடிமுழக்கம் போலே சத்தித்து மின்னலைப் போலே காணாமல் ஒருக்ஷணத்திலே மறைந்து போச்சுது.

அந்தப் புண்ணியவதி இதைக் கண்டு ஆச்சரியப்பட்டுக் குருவானவரைப் பார்த்துத் தேவரீர் ஆரென்று கேட்டாள். அதற்குக் குருவானவர் நான் அர்ச். பிலீப்பு பெனிசியாரென்கிறவர். என்னுடைய சரீரந் தோதியென்கிறபட்டணத்திலே இருக்கிறது, நான் மோட்சத்திலே இருக்கிறேன். நம்முடைய ஆண்டவளாகிற அர்ச். கன்னிமரியாயிக்கு நீ நல்லமனதோடே அநேகம் நாள் ஊழியம் பண்ணினதினாலே மோட்சத்துக்கு இராக்கினியானவள் உனக்கு வந்த கஸ்தியை என்னைக்கொண்டு தீர்க்க இங்கே அனுப்பினாள். இதினால் தேவமாதா உனக்குச் செய்த சகாயத்துக்கு நீ தாழ்ச்சியோடே அவளைத் தோத்திரம் பண்ணுவதும் அல்லாமல் சாகுமட்டும் நீ அவளுக்கேற்க நடக்கவேணுமென்று சொன்னார். அப்போது அந்தப் புண்ணியவதி அர்ச். பிலீப்பு பெனிசியாரென்கிறவர் பாதத்திலே சாஷ்டாங்கமாக வணங்குகிறபோது அந்தக்ஷணத்திலே அவர் காணமல் மறைந்துபோனார்.

கிறீஸ்துவர்களே, சமுத்திரத்திலே முத்து குளிக்கிறாப்போலே இப்போது சொன்ன புதுமையிலே

நீங்கள் ஞான முத்துகளை எடுக்கவேணும். முந்த முந்த இந்தப் புதுமையிலே சொல்லப்பட்ட கைம்பெண்சாதியுடைய மகன் ஆத்துமத்துக்கு ஆகாத துணைவழியாக மோசம் வந்ததென்று கேட்டீர்களே. இதினாலே நீங்கள் உங்கள் மக்கள்மார்களும் மருமக்கள்மார்களும் நல்ல புண்ணியவான்களாய் இருந்தாலும இன்னார் இன்னார் ஆகாத துணையென்று அறிந்தால் அவர்களை விட்டு எத்தனை தூரம போவீர்களோ அத்தனைக்கு நல்ல புண்ணியவான்களாய் இருப்பீர்களென்று அவர்களுக்குக் கற்பியுங்கள். பிள்ளைகளுடைய தாய் தகப்பன்மாரே, உங்கள் பிள்ளைகள் அடிக்கடி ஆரோடே பழகுகிறார்கள் என்று விசாரித்துப் பொல்லாதவர்களோடே சேர்ந்திருந்தால் அதை அறிந்து அந்த ஆகாத துணையை விலக்கிப் பிள்ளைகளை நன்றாய்க் கண்டித்துப் புத்தி சொல்லவேணும். யாதொருத்தனுடைய மாடு வியாதியாய் இருந்தால் உன்னுடைய மாட்டை அந்த மாட்டோடே சேராதபடிக்குப் பத்திரமாய்ப் பார்ப்பாயே; சேர்ந்தால் அந்த வியாதி உன் மாட்டுக்கும் வருமே.

அந்தப் பிரகாரமாய் உன் பிள்ளைகள் ஆகாதவர்களோடு கூடிப் பழகினால் அவர்கள் ஆத்துமத்திலே இருக்கிற பாவவியாதி அவர்கள் துர்ப்புத்திவழியாக உங்கள் பிள்ளைகள் ஆத்துமத்துக்கும் வரும். அல்லாமலும் உங்கள் மக்கள் அவர்களுடைய ஆகாத நடக்கையைக் கண்டுபாவித்து நடப்பார்கள்.

இரண்டாவது. அந்தப் புண்ணியவதி தன் மகனுடைய ஆகாத நடக்கையைக் கண்டு அவனுக்குப் புத்தி சொன்னதும் அல்லாமல் அவனுக்காகத் தேவமாதாவை வேண்டிக்கொண்டாள். இந்தப் பிரகாரமாய் உங்கள் பிள்ளைகள் மட்டிலே நீங்கள் நடத்தவேணும்.

மூன்றாவது. பசாசு ஒரு சேவகன் ரூபமாய் வந்து அவர்களுக்கு மோசம்பண்ண நினைத்ததென்று கேட்டீர்களே. ஆகையால் அவரவருடைய ஆத்துமத்துக்குக் கேடு வருத்துவிக்கத்தக்கதாகப் பசாசு எண்ணப்படாத உபாயங்களைத் தேடுகிறதென்று நீங்கள் நினைத்து எப்போதும் எச்சரிக்கையோடே நடக்கவேணும்.

நாலாவது. அந்தப் புண்ணியவதி தேவமாதாவின் அடைக்கலமாய்ப் போய் வேண்டிக்கொண்டதினாலே அவளும் அவளுடைய மகனும் பசாசின் கையிலே அகப்படாதபடிக்குத் தப்பினார்கள். அந்தப் பிரகாரமாய் நீங்கள் பசாசின் கையிலே அகப்படாதபடிக்குக் கோழிக்குஞ்சுகள் தாயுடைய சிறகுகளுக்குள்ளே ஒதுங்கி வருகிறாப்போலே எல்லாருக்குந் தாயாகிற தேவமாதாவின் அடைக்கலத்துக்குள்ளே நீங்கள் இருக்கிறதற்குப் பிரயாசப்படவேணுமென்று அறியக்கடவீர்களாக.



## ௪௪-ம் சனிக்கிழமைப் புதுமையாவது.

### பொலோஞ் தேசத்தில் ஒருத்தன் தேவமாதாவை வேண்டிக்கொண்டதினால் ஆண்டவள் அவனுடைய பெண்சாதி பிள்ளைகளை உயிர்ப்பித்த அற்புதம்.

பொலோஞு என்கிற இராச்சியத்திலே லுப்ளின் என்கிற ஊரிலே ஆட்டுவாணிபஞ்கிற மர்த்தீனென்கிறவன் இருந்தான். அவனுக்கு இரண்டு பிள்ளைகள் இருந்தார்கள். அதில் ஒரு பிள்ளைக்கு நாலுவயதும வேறே பிள்ளைக்கு இரண்டுவயதுமாய் இருந்தது. இப்படி இருக்கையிலே ஒரு நாள் இரண்டு பிள்ளைகளையும வீட்டிலே வைத்துப புருஷன் பெண்சாதி இருவரும் ஒரு காரியமாக வெளியிலேபோய் இருந்தார்கள். அந்தச் சமயத்திலே மூத்தப்பிள்ளையானது தகப்பன் ஆடுகளைக் கழுத்திலே குத்திக் கொல்லுகிறதைத் தான் அநேகம விசை கண்டிருந்த நினைவு வந்தது இதினாலே அந்தப் பயல் சூரிக்கத்தியை எடுத்துத் தொட்டிலிலே தூங்குகிற தன் தம்பியிடத்தில் போய்த் தகப்பன் ஆடுகளைக் கொல்லுகிறாப்போலே தானும அந்தக் குழந்தையின் குரல்வளையிலே குத்திக் குழந்தையைக் கொன்றுபோட்டான் அந்தக் காயத்தின் வழியாகப் புறப்பட்ட இரத்தத்தை அவன் கண்டு தன் தாய் தகப்பன் வந்த பிற்பாடு தன்னை அடிப்பார்கள் என்று பயந்து ஒளிந்துகொள்ளத்தக்கதாக ஒரு இரகசியமான இடம் பார்த்தான். பார்க்கிறபோது தன்னுடைய வீட்டுக்குள்ளே

அப்பஞ் சுடுகிற குகையைக் கண்டு அதற்குள்ளே நுழைந்து ஒளித்திருந்ததும் அல்லாமல் காய்ந்து போன இலைசருகுக்கட்டாலே அந்தக் குகைவாசலை அடைத்துக்கொண்டான்.

கொஞ்ச நேரத்துக்குப் பிற்பாடு அந்தப் பயலுடைய தாயானவள் வீட்டிலேவந்து பிள்ளைகளெங்கே என்று பார்க்கிறதற்கு முன்னே யாதொரு அவசரத்தினாலே அந்தக் குகைவாசலிலே இருந்த சருகிலே நெருப்புவைத்து வேறே வேலையைப்பார்க்க அப்புறம் போனாள். நெருப்பு அதிகமாய்ப் பற்றிக் கொண்டதினால் அந்த நெருப்பின் புகையினாலே உள்ளேயிருந்த பயலுக்குப் பொறுக்கக்கூடாத கஸ்திவந்தாலுந் தாய்க்குப் பயந்து கூப்பிடாமல் இருந்தான். இதினாலே சற்றுநேரத்துக்குள்ளே நெருப்பினால் அதிலேதானே செத்தான். பிற்பாடு தாயானவள் அந்தக் குகைக்கிட்டப்போய்ச் சுடலை நாற்றம் வீசுகிறதைப்பற்றி இதேதென்று குகையிலே இருந்த நெருப்பை வெளியே தள்ளுகிறபோது தன்மகன் வெந்து செத்துக்கிடக்கிறதைக் கண்டாள். அப்போ ததை இரும்பினாலே செய்திருக்கிற எத்தனத்தைக் கொண்டு வெளியிலே இழுத்த பிற்பாடு முழுதும் செத்துப்போனானென்று கண்டு வெகு கூக்குரலாய் அழுதாள். இப்படி அழுகிறபோது வேறே குழந்தை எங்கே என்று நினைத்துத் தொட்டிலின் கிட்டப் போனாள். அங்கே குத்தினாலே அதுவுஞ் செத்துக் கிடக்கிறதைக் கண்டு அப்போதவள் பட்ட வியாகுலத்தினாலே ஒரு துக்கச் சமுத்திரத்திலே அமிழ்ந்தி இருந்தாள். அவளுடைய இரண்டு கண்ணிலேயும் இரண்டு ஆறுகள்போலே தண்ணீரோடிற்று. தலைமயிரை எம்மாத்திரம் பிய்த்துக்கொண்டாள், முகத்திலே எம்மாத்திரம் பீறிக்கொண்டாள்,

மார்பிலே எத்தனைவிசை அறைந்துகொண்டாளென்று சொல்லக்கூடாது.

அந்தச் சமயத்திலே அவளுடைய புருஷன் வந்து பிள்ளைகளுடைய பிரேதத்தைக் கண்டு தன் பெண்சாதி கோபக்காரியானதினாலே இப்படிப் பிள்ளைகளைக் கொன்றுபோட்டாளென்று நினைத்தான். பின்னையும் அவன் நினைத்ததாவது: இவள் தன்பேரிலே குற்றஞ் சாராதபடிக்கு இப்படி அழுகிறாளென்று இவன் தன் நிஷ்டூரமுள்ள குணத்தினாலே ஒன்றும் விசாரியாமல ஒரு பெரிய தடியினாலே பெண்சாதியை அடித்தான். அவனை அடிக்கிறபோது நான் இப்படிச் செய்யவில்லையென்று பெண்சாதி சொன்னாலும் அவள் சொன்ன வார்த்தையைப் புருஷன் சட்டைபண்ணாமல் கோபமிகுதியால் அவன் அடித்த கடின அடி அவளுடைய தலையிலே பட்டதினால் அவளுஞ் செத்தாள். அவனுடைய கோபம அமர்ந்த பிற்பாடு அந்த மூன்று பிரேதத்தையும் அவன் காண்கிறபோது இந்தக் கொலையெல்லாம் அரண்மனையார் என்பேரிற் சாட்டி எனக்கு ஆக்கினையான சாவு கட்டளையிடுவார்களென்று நினைத்து மிகுந்த கஸ்தியை அநுபவித்தான். அப்போதவன் யோசித்ததாவது: யாதொரு துரைமகனுக்கு நான் சில பணங் கைக்கூலி கொடுத்தால் என்னை ஆதரித்துக்கொள்ளுவான். ஆனால் அப்படிக்கொத்த நிஷ்டூரமான வேலை செய்த என்னை யார் ஏற்றுக்கொள்ளுவார்கள். வேறே சீர்மைக்கு ஓடிப்போனால் என் தட்டுமுட்டுகளைக் கொண்டுபோகக் கூடாதென்று நினைத்து இப்படிப் பற்பல விசாரப்பட்ட பிற்பாடு கடைசியிலே அவனுக்கு வந்த விசாரமாவது:

சிளொம்பேர் என்கிற மலைமேலே இருக்கிற தேவமாதாவின் கோயிலிலே சுவிசேஷகரான அர்ச். லூக்

காவென்பவர் தமது கையினாலே எழுதின தேவமா தாவின் படமிருக்குதே. அந்தப் படத்திலே எழுதப் பட்ட ஆண்டவள் அநேகம் புதுமை செய்கிறதி னாலே நான் அங்கே போய்த் தேவமாதாவின் அ டைக்கலமாய் இருப்பேனென்று நினைத்தான். அப் படியே சூரியன் அஸ்தமித்த பிற்பாடு தன்னுடைய வண்டியின்மேலே அந்த மூன்று பிரேதத்தையும வைத்துத் தெரியாதபடிக்கு நன்றாய் மூடிக்கொண்டு போனான்.

அந்தக் கோயிலிலே போய்ச் சேர்ந்த பிற்பாடு மூன்று பிரேதத்தையும வாசலிலே வைத்து அவன் கோயிலுக்குள்ளே போய்த் தேவமாதாவின் படத் துக்கு முன்பாகச் சாஷ்டாங்கமாக வணங்கி அந்த ஆண்டவள் தன்பேரிலே இரக்கமாய் இருக்கிறதற்கு அநேக ஞாயங்களைத் தாழ்ச்சியோடேயும அழுகை யோடேயுஞ் சொல்லி வேண்டிக்கொண்ட பிற்பாடு கடைசியிலே மன்றாடினதாவது: என் ஆண்டவளே நான செய்த கொலையினாலே தேவரீர் இந்தச் சமய த்திலே அடியேனுக்குத் தயை உதவியாய் இருக்கிற தற்கு நான் பாத்திரமல்ல. ஆகிலுஞ் செத்துப் போன என்னுடைய மாசில்லாத இரண்டு குழந்தை கள்பேரிலே தேவரீர் இரக்கமாய் இருக்கவேணுமெ ன்று மன்றாடின பிற்பாடு எழுந்திருந்து வெளியிலே போகிறபோது தன்னுடைய பெண்சாதிக்கும பிள் ளைகளுக்குந் தேவமாதாவின் புதுமையினாலே உயிர் வந்திருக்கத் தன் பெண்சாதி ஒரு பிள்ளையை எடுத துக்கொண்டு வேறே பிள்ளையை நடத்திக்கொண்டு கோயிலுக்குள்ளே பிரவேசிக்கத் தனக்கு எதிராக வருகிறதைக் கண்டான். அவன் இவர்களைக் கண்ட வுடனே எம்மாத்திரஞ் சந்தோஷம் அநுபவித்தா னென்று நாம் சொல்லத் தேவையில்லை. உங்களுக் குத்தானே தெரியவரும.

இதுதவிரப் புருஷன் பெண்சாதி பிள்ளைகள் நாலு பேருங் கோயிலுக்குள்ளே போய்த் தங்களை இரட்சித்த ஆண்டவருக்கு ஆனதோத்திரம் பண்ணினார்கள். பின்னேயும் மூத்த பிள்ளை தனக்குந் தனக்குகந்த தம்பிக்குஞ் சாவு இன்னபடி வந்ததென்று சொன்ன பிற்பாடு தங்கள் ஊரிற் சேர்ந்து இந்த ஆச்சரியமான புதுமையை மற்றவர்களுக்கு அறிவித்ததினாலே இதைக் கேட்டவர்கள் எல்லாருக்குந் தேவமாதாவின் பேரிலே அதிக பத்தி விளங்கிற்று.

கிறீஸ்துவர்களே, எசமான் தன் நந்தாவனத்திலே நல்ல புஷ்பங்களை எடுக்கிறாப்போலே இந்த அதிசயமான புதுமையிலே நீங்கள் ஞான புஷ்பங்களை எடுக்கவேணும். முந்த முந்த இப்போ சொல்லப்பட்ட தாய் தகப்பன் இரண்டு சின்ன குழந்தைகளைத் துணையில்லாமல் தனியே விட்டதினாலே பெரிய மோசம் வந்தது. ஆகையால் உங்களுக்கு எத்தனை அவசரமானாலும் உங்கள் குழந்தைகளைத் துணையில்லாமல் தனியே விடாதேயுங்கள்.

இரண்டாவது. இந்தப் புதுமையைக்கொண்டு தாய் தகப்பன் செய்தபடி குழந்தைகளுஞ் செய்யுமென்று உங்களுக்குத் தோன்றியிருக்குதே. இதினாலே நீங்கள் பிள்ளைகள் முன்பாகப் புண்ணிய கிரியைகளைச் செய்யவேண்டியதே அல்லாமல், ஆகாத கிரியைகளைச் செய்யவேண்டாம். சில தாய் தகப்பனுடைய ஆகாத மாதிரிகைகளைக் கண்டு பிள்ளைகள் செய்த பாவத்துக்குத் தாய் தகப்பன் சர்வேசுரனுக்குக் கணக்குச் சொல்லவேணும்.

மூன்றாவது. முன் சொல்லப்பட்ட மர்த்தீனென்கிறவன் தன் பெண்சாதியை அடித்ததற்கு முன்னே அவளுக்குக் குற்றம் உண்டு இல்லையென்று நன்றாய் விசாரித்தால் அவனுக்குக் கொலை பாதகம் வராது.

விசாரியாததினுலேயுங் கோபத்தினுலேயும் இந்தப் பாவத்தை அவன் கட்டிக்கொண்டான். ஆகையால் உங்கள் கெட்ட சுபாவத்தினுலேயுங் கோபத்தின்படியேயும் நடவாமலிருப்பதும் அல்லாமல் யாதொருத்தனைத் தெண்டிக்கிறதற்கு முன்னே அவர்கள்பேரிலே குற்றமுண்டோ இல்லையோவென்று நன்றாய் விசாரிக்கவேணும்.

நாலாவது. தயையுள்ள அர்ச். கன்னிமரியாயி தமது அடைக்கலமாக வந்த மர்த்தீனென்கிறவனுக்குச் சகாயமாய் இருக்கத்தக்கதாகச் செத்துப்போன ஒரு சரீரத்துக்கு மாத்திரமல்ல, மூன்று சரீரத்துக்குத் தம்மாலே உயிர் வரக் கட்டளையிட்டாள். தேவமாதாவினிடத்திலே எத்தனை தயை இருக்கிறதென்று நீங்கள் நினைத்து இந்த நல்ல ஆண்டவளுக்கு நீங்கள் ஊழியம பண்ண உங்களுக்குள்ளே ஆசை வராதிருக்கிறதார். இதினுலே நீங்கள் முழுமனது பொருந்தி மோக்ஷத்துக்கு இராக்கினியானவளைச் சேவித்துக்கொண்டு வரவேணுமென்று அறியக்கடவீர்களாக.



## ௨௩-ம் சனிக்கிழமைப்

புதுமையாவது.



ஒரு பொய்க் கிறீஸ்துவனுடைய கபடத்தை
மறுக்கத் தேவமாதாவின் சுரூபம்
முகந் திரும்பின
அற்புதம்.

கர்த்தர் மனுஷாவதாரம் பண்ணி ஐந்நூற்றிருபத்தெட்டாம் வருஷங் கொன்ஸ்தாண்டிநோப்பொலி என்கிற பட்டணத்திலே இருந்த திபேரென்கிற இராயன் கிட்ட இருந்த ஒரு துரைமகன் அந்த அரண்மனைக்குள்ளே வேண்டிய காரியம் எல்லாம் விசாரித்துக்கொண்டிருந்தான். அவன் பண்ணின அநேகம் புண்ணியங்களுக்குள்ளே தேவமாதாவின் பேரிலே பத்தி அவனிடத்திலே மிகவும் விளங்கிற்று. அவன் ஒரு வர்த்தகனான அனத்தோலியனென்கிறவன் பேரிற் பட்சம்வைத்து அரண்மனை வாசலிலே அவன் காரியத்துக்கு எப்போதும் உதவியாய் இருப்பான். இப்படியிருக்கையிலே தேவமாதா ஒரு இராத்திரி அந்தத் துரை மகனுக்குக் காண்பித்துச் சொன்னதாவது: நீ ஏற்றுக்கொண்ட வர்த்தகன் புறத்தியிலே கிறீஸ்துவனைப்போலே காண்பித்தாலும் இரகசியத்திலே பசாசைக் கும்பிடுகிறான். இனிமேல் நீ அவனைச் சேர்த்துக்கொள்ளாதே. நம்முடைய திருக்குமாரனுடைய நேசமும் நமது சிநேகமும் உனக்கு வேணுமானால் அந்த வர்த்தகனுடைய சிநேகத்தை முழுதும் விட்டுவிடென்று சொல்லிக் காணாமல் மறைந்துபோனாள். மோக்ஷத்துக்கு இராக்கினியான

வள் சொன்ன பிரகாரத்துக்கு அந்தத் துரைமகன் அனத்தோலியன் என்கிறவனைக் கைவிட்டதும் அல்லாமல் அந்தப் பொய்யான கிறீஸ்துவன் வழியாக மெய்யான கிறீஸ்துவர்களுக்கு மோசம் வராதபடிக்குத் தேவமாதா அறிவித்த சேதியெல்லாந் துரைமகன் இராயனிடத்திலே சொன்னான்.

சத்தியவேதம் அந்த இராயனுக்குத் தன் கண்மணி போலே இருந்ததினாலே உடனே அந்த வர்த்தகனைப் பிடிக்கவும் அவனுடைய நடக்கையை நன்றாய்ச் சோதிக்கவுங் கட்டளையிட்டான். அப்படியே அவனைப் பிடித்து அவனுடைய நடக்கையை விசாரிக்கிறபோது அவன் பசாசுகாரியஞ் செய்து பசாசுக்கு மெய்யான அடிமையாய் இருந்ததினாலே இராயன் அவனுடைய ஆஸ்தியெல்லாம் எடுத்துக்கொண்டு அவனைக் காவலிலே போடக் கற்பித்தான். அந்த வர்த்தகன் தனக்கு வந்த கஸ்தி நீங்கிப்போகத் தக்கதாகக் கபடமாக ஒரு உபாயம் நினைத்தான்.

அதாவது: இராயனுந் தன்னை முந்தி ஏற்றுக்கொண்ட துரைமகனுஞ் சம்மனசுகளுடைய இராக்கினியின்பேரிலே மெத்தப் பத்தியாயிருக்கிற சேதியறிந்து அந்த வகைப் பத்தி தனனிடத்திலே நன்றாய் விளங்குகிறதென்று காண்பித்தால் அந்த வழியாகத் தன்னை விடுவார்களென்று நினைத்தான். இதினாலே இவன் தன்னிடத்திலே பத்தி விசுவாசமெல்லாம் பசாசின்பேரிலே வைத்திருந்தாலுந் தேவமாதாவின் பேரிலே பத்தியுள்ளவனென்று தன்னோடு கூடக் காவலிலே இருக்கிறவர்களுக்குக் காண்பிக்கத்தக்கதாக அநேக உபாயங்களைப் பண்ணினான். அதாவது: அவன் சிறையிலேயிருக்கிற சின்ன கோயிலிலே உண்டான தேவமாதாவின் சுரூபத்து முன்பாகத் தன் கையிலே செபமாலையைப் பிடித்துக்கொண்டு

அங்கேயிருக்கிற மறறக் குற்றக்காரரோடே கூடத் தினம் ஐம்பதுமணிச் செபம் பண்ணுகிறதும் அல்லாமல் ஒரு நாளைக்குள்ளே அடிக்கடி அந்தச் சுரூபத்தைச் சாஷ்டாங்கமாக வணங்குவான். சிலவிசை பத்தி உள்ளவனைப்போலே இரண்டு கையும் நெஞ்சிலே சிலுவையைப்போலே வைத்துக்கொண்டு சிலவிசை இரண்டு கையையும் உயரத் தூக்கிக் கும்பிட்டுச் சேசுமரியாயி என்கிற திருநாமத்தைச் சொல்லித் தேவமாதாவின் பேரிற் பத்தி உருக்கமுள்ளவன்போலே அழுகையோடு வேண்டிக்கொள்ளுகிறாப்போல் காண்பிப்பான். அந்தச் சிறைச்சாலையில் இருந்தவர்கள் அவனுடைய வேண்டுதலையுங் கண்ணீர்களையுங் கண்டு இவன் நல்ல கிறீஸ்துவன், அநியாயமாய் இவன் பேரில் கோள்சொன்னார்கள் என்று இவனைக் கொண்டாடினார்கள். இவனுடைய கீர்த்தி அந்தச் சிறைச்சாலையில் வெளிப்பட்டதும் அல்லாமல் மெள்ள அந்தப் பட்டணத்தார் அறிந்து எல்லோரும் அவனைக் கொண்டாடினார்கள். அந்த வர்த்தகன் இந்தச் சேதி அறிந்து கொஞ்ச நாளைக்குள்ளாக என்னுடைய கீர்த்தியெல்லாம் இராயன் காதிலே விழும், இந்தக் காரியம் அநுகூலமாகித் தன்னை விட்டுவிடுவார்கள் என்றீ நினைத்து மகா சந்தோஷமாய் இருந்தான்.

இப்படி இருக்கையிலே ஒரு நாள் அநேகஞ் சனங்கள் அந்தச் சுரூபத்தின் முன்பாக இருக்கிறதை அந்த வர்த்தகன் கண்டு தானும் அந்தச் சுரூபத்தின் முன்பாகப் போய்ச் சாஷ்டாங்கமாக வணங்கிப் பத்தியினுடைய அடையாளங்கள் எல்லாங் கபடாகத் தன்னிடத்திலே காண்பித்தான். அங்கே இருந்த தேவமாதாவின் சுரூபத்தின் முகம் முந்திப் பார்வைக்குச் சந்தோஷம் வருத்துவிக்கிறதாய் இருந்தாலும்

இவன் வந்தவுடனே மகா துக்கமுள்ள முகமாய்க் காண்பித்தது. அந்தச் சுரூபம் இந்தப் பொய்யான கிறீஸ்துவனைப் பாராதபடிக்குச் சுரூபத்தின் முகம் புதுமையாக முதுகுப்புறத்திலே திரும்பிற்று. இப்படியே எப்போதுமெப்போதும் இருந்தது. அங்கே இருந்தவர்கள் இதைக் கண்டு தங்கள்மேலே இடி விழுந்தாப்போலே மிகவும் பயந்தார்கள். அதினாலே அந்த வர்த்தகனுடைய கள்ளப் பத்தியுங் கபடமும் விளங்கிற்று.

கிறீஸ்துவர்களே, அந்தச் சமயத்தில் வர்த்தகனிடத்தில் நடந்த வர்த்தமானங்களைக் கொண்டு நீங்கள் ஞானப் பிரயோசனங்களைக் கைக்கொள்ளவேணும். முந்தமுந்த இப்போ சொல்லப்பட்ட புதுமையிலே பொல்லாத வர்த்தகனை ஏற்றுக்கொண்ட துரைமகனுக்குத் தேவமாதா காண்பித்து அவனுடைய சிநேகத்தை விடச் சொல்லிக் கட்டளையிட்டாளென்று கேட்டீர்களே. ஆகையால் பொல்லாதவர்களுக்குப் புத்திசொல்லத் தக்கதல்லாமல் நீங்கள் அவர்களைச் சேர்த்துக்கொள்ள வேண்டாம்.

இரண்டாவது. அந்த வர்த்தகன் பசாசின் காரியஞ் செய்ததினாலே அவன் பேரிலே தேவமாதா தமக்கிருந்த கோபத்தை அந்தத் துரைமகனுக்கு அறிவித்தாள். ஆகையால் உங்களிடத்திலே கொஞ்சமாகிலும் பசாசின் ஊழியத்துக்கும் பசாசுக்கும் அடுத்தகாரியம் உண்டானால் தேவமாதா உங்கள் பேரிலே வெகு கோபமாயிருப்பாள்.

மூன்றாவது. சர்வேசுரனுக்கும் அவருடைய தாயாருக்குங் கள்ளஞானம் பரிச்சேதம் பொருந்தாது என்று இந்தப் புதுமையைக்கொண்டு அறிந்துகொண்டீர்கள். இதினாலே நீங்கள் கள்ளஞானிகளாய் இருக்கவேண்டாம். ஐயோ, கிறீஸ்துவர்களுக்குள்ளே

சிலபேர் இப்படிக்கொத்த கள்ள ஞானிகளாய் இருக்கிறார்கள். அதெப்படி என்றால் சிலபேர் தங்களுக்கு உத்தியோகம் மாறிப் போகாதபடிக்குஞ் சிலர் அந்தந்த உத்தியோகந் தங்களுக்கு வரத்தக்கதாகவும் எசமான் தங்கள் பேரிலே பட்சமாய் இருக்கவும் வேஷமெடுத்து அவர்கள் அநேகம்வகைப் பாவங்களை இரகசியமாய்க் கட்டிக்கொண்டாலும் நாலுபேர் முன்பாகச் செபமாலையைத் தங்கள் கையிலே பிடித்துச் செபம் பண்ணி நல்லவர்களைப்போலே காண்பிக்கப் பிரயாசப் படுவார்கள்.

ஆனால் கள்ள ஞானிகளே, நீங்கள் மனுஷரை ஏய்த்துப் போட்டாலுஞ் சர்வேசுரனையும் அவருடைய மாதாவையும் ஏய்க்கமாட்டீர்கள். இதல்லாமல் சர்வேசுரன் கட்டளையிட்டபடியே உங்களுக்கு ஆக்கினையாக உங்களுடைய கள்ள ஞானங் கொஞ்ச நாளைக்குள்ளாக வெளிப்பட்டு நீங்கள் ஏய்த்துப் போட்ட மனுஷருக்குத்தானே அறியப்படும். கள்ள ஞானியே நீ நினைத்த காரியம் அநுகூலமாகத்தக்கதாக நாடிப்போகாட்டுகிற வழியை உற்றுக்கேள். உன்னுடைய கள்ள ஞானத்தை முழுதுந் தள்ளு. தேவமாதாவின் பேரிலே மெய்யான பத்தியாய் இருந்து நினைத்த காரியத்துக்காக அந்தப் பெரிய ஆண்டவளைச் சரியாய் வேண்டிக்கொண்டால் கள்ள ஞானத்திலே அநுகூலமாகாதகாரியந் தேவமாதாவின் உதவியினாலே அநுகூலமாகுமென்று அறியக் கடவீர்களாக.



# சகூ-ம் சனிக்கிழமைப்

புதுமையாவது.



தேவமாதாவின் அநுக்கிரகத்தினாலே
யூதசாதியான ஓர் சிறு பெண் ஞானஸ்நானம்
பெற்று யூதரை மறுத்த அற்புதம்.

கொலோஞ் என்கிற பட்டணத்திலே யூதர் கோத்திரத்திற் பிறந்த ருக்கேல் என்கிற ஒரு பெண்பிள்ளை இருந்தாள். அவளுக்கு ஐந்து வயது நடக்கிற போது ஒரு விசை அவளுக்கு வந்த யோசனையாவது: யூதர்களுக்குங் கிறீஸ்துவர்களுக்கும் வஸ்திரத்திலேயும் ரூபத்திலேயும் பேச்சுவார்த்தையிலேயும் வேற்றுமையில்லையே. ஆனால் இவர்களுக்குக் கிறீஸ்துவர்களென்கிறபேரும் அவர்களுக்கு யூதரென்கிற பேருமிருக்கிறது, இந்தப்பேர் வேற்றுமைக்குக் காரணம் என்னவென்று யோசித்தாள். இதல்லாமல் அந்தப் பெண்பிள்ளை யூதர் கோத்திரத்தை நேசிப்பதைப்பார்க்கக் கிறீஸ்துவர்கள் பேரிலே வெகு பட்சமாய் இருந்து கிறீஸ்துவர்களுக்குள்ளே மரியாயி என்கிற பேரைக் கூப்பிடுகிற சத்தம். அவள் கேட்ட உடனே அந்தப் பேரின்பேரிலே மகா சந்தோஷமாய் இருப்பாள். அந்தப் பேரை அவள் கேட்கத்தக்கதாக கிறீஸ்துவர்களுக்குள்ளே உண்டான சில பிச்சைக்காரருக்குப் பிச்சை கொடுத்தாள்.

இப்படி இருக்கையிலே இந்தப் பெண்பிள்ளையுடைய தாய் தகப்பன் அந்தப் பட்டணத்தை விட்டு லூவனென்கிற பட்டணத்துக்குப் போனார்கள். அங்கே இவர்களிருந்த வீட்டின்கிட்ட மகாத்துமா

வான ஒரு குருவானவர் இருந்தார். அவரிடத்தில் முன் சொல்லப்பட்ட பெண்பிள்ளை அடிக்கடி போவாள். இதினாலே அந்தக் குருவானவர் இந்தப் பெண்பிள்ளையைப் பார்த்து நீ கிறீஸ்துவளாய் இருக்கிறதற்கு மனதாய் இருக்கிறாயோவென்று கேட்டார். இதற்கு அவள் ஆமென்று சொன்னதும் அல்லாமல் கிறீஸ்துவளாய் இருக்கிறதற்கு அர்த்தமென்னவென்று கேட்டாள். அப்போ வேதத்தின் குறிப்பிடமெல்லாம் அவளுக்குச் சொல்லிக் காண்பித்தார். அப்போது அவளுக்கு ஆறரை வயது நடந்தாலும் புத்தி மெத்தவும் இருந்ததினாலே அந்தக் குருவானவர் சொன்னதெல்லாம் அவள் கண்டுபிடித்து மகா சந்தோஷமாய் வேதத்தைக் கேட்கச் சம்மதித்து மந்திரங் குறிப்பிடங்களைப் படித்தாள். அவளுடைய தாய் தகப்பன் தங்கள் மகள் அடிக்கடி அந்தக் குருவின் வீட்டுக்குப் போகிறதைக் கண்டு கிறீஸ்துவளாய்ப் போவாளோ எப்படியோவென்று சந்தேகப்பட்டு ரின் என்கிற ஆற்றுக்கு அக்கரையிலே அவளைக் கூட்டிக்கொண்டுபோய் அங்கே உடனே கலியாணம் முடிக்கவேணுமென்று மற்ற யூதரோடே ஆலோசனை பண்ணினார்கள். இந்த ஆலோசனையை அந்தப் பெண்பிள்ளை அறிந்து உடனே அவள் குருவின் கிட்டப்போய்த் தனக்கு அப்போது தானே ஞானஸ்நானங் கொடுத்துத் தன்னை அப்பாலே கூட்டிக்கொண்டு போகச் சொல்லி அழுதுகொண்டு மன்றாடினாள். அந்தக் குருவானவர் நல்லதென்று சொல்லி நாளை இங்கே வா, ஞானஸ்நானங் கொடுப்போமென்று சொன்னார்.

அந்தப் பெண்பிள்ளை தன் வீட்டுக்குப்போய் அன்றிராத்திரி நித்திரை போகிறபோது மோக்ஷத்துக்கு இராக்கினியானவள் மகா சந்தோஷத்தோடேயும்

மகிமையோடேயும் அவள்கிட்ட வந்து நித்திரை போகிற அவளைக் கத்தரீனென்று கூப்பிட்டாள். ருக்கேல் என்கிற அந்தப் பெண்பிள்ளை கூப்பிடுகிற சத்தத்தைக் கேட்டு என் ஆண்டவளே தேவரீர் என்னை ஏன் இந்தப் பேர் சொல்லிக் கூப்பிட்டீரெ ன்று கேட்டதற்குத் தேவமாதா நீ ஞானஸ்நானம் பெறுகிறபோது உனக்கு இந்தப் பேர் இடவேணு மென்று திருவுளம் பற்றினாள். இதல்லாமல் மோட் சராக்கினி தமது கையிலே இருக்கிற தங்கத்தினு லே உண்டாக்கப்பட்ட பிரம்பை அவளுக்குக் காண் பித்துக் கத்தரீனென்கிறவளே" இந்தப் பிரம்பை வாங்கிக்கொள், நீ இனிமேல் பயணமாய்ப் போகிற போது உனக்கு உதவுமென்று தேவமாதா சொன்ன பிற்பாடு அவள் கையை நீட்டி வாங்குகிற சமயத் திலே கட்டிலின்மேலே இருந்து கீழே விழுந்தாள். விழுந்தவுடனே விழித்துக்கொண்டு சரீரத்தின் வலி யினாலே அழுதாள். அந்த அழுகைச் சத்தம் அவ ளுடைய தாய் கேட்டு மகளிடத்திற் போய் ஏன் அழுகிறாயென்று கேட்டாள். ஆனால் அவள் நடந்த சேதியைச் சொல்லாமல் போக்குச் சொல்லித் தா யைப் போகச் சொன்னாள். தாய் போன பிற்பாடு அவள் தன்பேரில் வஸ்திரமெல்லாம் போட்டுக்கொ ண்டு பொழுது விடிந்த பிற்பாடு குருவானவரிடத் திற் போய் நடந்த சேதியை அவரிடத்திலே சொன் னாள். அவர் மகா சந்தோஷப்பட்டு அர்ச். பெர்நர்து சபையில் உட்பட்ட கன்னியாஸ்திரீகள் மடத்துக்கு அவளைக் கூட்டிக்கொண்டுபோய் அவர்கள் இட மாய் அவளை ஒப்பித்து அவளுக்கு ஞானஸ்நானங் கொடுத்துக் கத்தரீனென்று பேரிட்டார். அன்று மத்தியானத்திலே அவள் சாப்பட வரவில்லையென்று கண்டு அவளுடைய தாய் தகப்பன் எங்கே இருக்கி றாளென்று விசாரிக்குமிடத்தில் தங்கள் மகள் ஞான

ஸ்நானம பெற்று பேர்நர்து சபையில் உட்பட்ட கன்னியாஸ்திரீகள் மடத்திலே இருக்கிறுளென்று அறிந்தார்கள். இதிலுலே அவர்களும் மற்ற யூதர் களுங் கஸ்திப்பட்டு அந்தப் பட்டணத்துக் காரியம் விசாரிக்கிறவர்கள் கிட்டப்போய் நடந்த சேதியைச் சொல்லித் தங்கள் மகளை அந்த மடத்தை விட்டுக் கூட்டிக்கொண்டு போகப் பிரயாசப்பட்டார்கள்.

ஆனல் அவள் தங்கலுக்கு இது காரியத்திலே இடங் கொடுக்கவில்லையென்று கண்டு மேற்றிராணி யாரிடத்திற் போய் நடந்த சேதியைச் சொன்னுர் கள். அவரும் இடங்கொடுக்கவில்லையென்று உரோ மாபுரியிலிருக்கிற யூதர் வழியாக அர்ச். பாப்பான வரைக் கேட்ட மன்றாட்டாவது: சிறு பிள்ளையாகிற தங்கள் மகளைத் தாங்கள் கூட்டிக்கொண்டு போக வும் அவள் பனிரண்டு வயதுமட்டுங் கிறீஸ்துவளாய் நடந்தால் பிற்பாடு கிறீஸ்துவர்களுக்கு அவளை ஒப் புக்கொடுக்கவுங் கேட்டார்கள். இந்தச் சேதியை அவளுக்கு ஞானஸ்நானங் கொடுத்த குருவானவர் அறிந்து நினைத்ததாவது: கத்தரீனென்கிறவள் தாய் தகப்பன் வீட்டுக்குப்போய் அங்கே பனிரண்டு வய துமட்டுமிருந்தால் அவர்கள் அடிக்கடி சொல்லுகிற துர்ப்புத்தியிலுலே அவளுடைய ஆத்துமத்துக்கு மோசம் வருமென்று எண்ணினுர். ஆதலால் அவள் தாய் தகப்பன் வீட்டுக்குப் போகாதபடிக்குத் தேவ மாதா துவக்கின காரியம் நிறைவேறத்தக்கதாக மோக்ஷ இராக்கினியை அடிக்கடி வேண்டிக்கொண் டார்.

கத்தரீனென்கிறவள் தன்னுடைய தாய் தகப்பன் அர்ச். பாப்பானவரை மன்றாடுகிறதையும் மற்றச் சேதிகளையுங் கேட்டுப் பூலோகத்தின் ஆண்டவள் உதவியினுலே அவள் தன்னுடைய தாய் தகப்பனு

க்கும் மற்ற யூதருக்கும் அறிவித்ததாவது: நான் கிறீஸ்துவளாய்ப் போனது ஏதுக்கென்றும் இது மெய்யான வேதமென்றும் ஒப்பிக்க யூதருக்கும் என்னுடைய தாய் தகப்பனுக்கு முன்பாக நான்தானே தர்க்கம் பண்ணுவேனென்று அறியப்பண்ணினாள். அதற்கு யூதரெல்லாரும் மகா சந்தோஷத்தோடே சம்மதித்ததினாலே நாளும் இடமுங் குறித்தார்கள். குறித்த பிரகாரத்துக்கு மேற்றிராணியாரும் மற்றச் சனங்களும் வந்ததல்லாமல் யூதர்களும் அவர்களுடைய சாஸ்திரிகளும் வெகு பேர் வந்து குறித்த ஸ்தலமாகிற அர்ச். லம்பேர்த்துக் கோயிலிலே கூடினார்கள். கத்தரீனென்கிறவள் கோயிலுக்குள்ளே போய் அவள் சொல்லுகிற வார்த்தையை எல்லாருங் கேட்கத்தக்கதாகப் பிரசங்கம் பண்ணுகிற மேடையின் மேலே ஏறச் சொன்னார்கள். அவள் அதின்மேல் ஏறின பிற்பாடு அந்தச் சபையைப் பார்த்துச் சொன்னதாவது: கிறீஸ்துவர்கள் படிப்பிக்கிற வேதம் மெய்யான வேதமுமாய் மோட்சத்துக்குப் போகிறதற்கு மெய்யான வழியுமாயிருக்கிறது. அந்த வழியல்லாமல் வேறே வழி இல்லையென்று ஞாயத்தினாலேயும் வேதத்தினாலேயும் எழுதப்பட்ட வசனங்களினாலேயும் அவள் ஒப்பித்த பிற்பாடு, மோட்சத்தை அடைய நான் கிறீஸ்துவளாய் இருக்கிறேனென்று கத்தரீனென்கிறவள் சொன்னாள்.

அந்த ஞாயத்துக்கு யூதருக்குள்ளே இருந்த சாஸ்திரிகள் மறுவுத்தாரஞ் சொல்ல மாட்டாததினாலே கத்தரீனென்கிறவள் அவர்களைச் செயங் கொண்டாள். யூதரும் வெட்கப்பட்டுத் தங்கள் வீட்டுக்குப் போனார்கள். இதுதவிர அந்தத் தர்க்கத்திலே இருந்தவர்களெல்லாருங் கத்தரீனென்கிறவள் சொன்ன

ஞாயங்களைக் கேட்டுப் பத்து வயதுள்ள ஒரு பெண்பிள்ளை எத்தனை சாஸ்திரங்களைச் சொல்லிக் காண்பித்தாளென்று ஆச்சரியப்பட்டதும் அல்லாமல் புதுமையினாலே இப்படியாச்சுதென்று நினைத்தார்கள். கத்தரீனென்கிறவளுடைய வியாச்சியம் இந்தத் தாக்கத்தோடே முடிந்ததினாலே அவள் தான் முன்னிருந்த கன்னியாஸ்திரீகள் மடத்துக்குப் போனாள்.

பிற்பாடு அவளைக் கெடுக்கத்தக்கதாக அவளுடைய தாயுந் தகப்பனும் மற்ற யூதருங் கபடாக ஒரு உபாயஞ் செய்தார்கள். அதாவது: இந்தக் கத்தரீனென்கிறவளுடைய மச்சினன் கொஞ்ச வயதுமாய்ச் சவுந்தரியமுள்ளவனுமாய் இருந்தான். இவன் கத்தரீனென்கிறவளுடைய மடத்திலே போய்த் தானுங் கிறீஸ்துவனாகவேணுமென்று கபடாகச் சொல்லி மந்திரம் படித்த பிற்பாடு ஞானஸ்நானம் பெற்றான். பிற்பாடு அவன் அந்த மடத்திலே சிரேஷ்டாளைக் கேட்ட மன்றாட்டாவது: நான் வேதத்திலே சில காரியங்களை அறிந்து உறுதியாய் இருக்கத்தக்கதாக என்னுடைய மச்சினிச்சியாகிற கத்தரீனென்கிறவளிடத்திலே பேச உங்களுடைய உத்தாரம் எனக்கு வேணுமென்றான். அவனுடைய கபடு சிரேஷ்டர் அறியாததினாலே கத்தரீனென்கிறவள் அவனோடே பேச உத்தாரங் கொடுத்தார். இவள் இது காரியத்திலே தேவமாதா தனக்கு உதவி செய்ய மன்றாடினாள். அப்போ மோட்சத்துக்கு இராக்கினி ஆனவள் புதுமையாக அவளுக்கு அறிவித்ததாவது: உன்னுடைய மச்சினன் துரோகி, அந்தக் கள்ள ஞானி உன்னைத் துமத்துக்கு மோசம் பண்ணக் கபடமாய் ஞானஸ்நானம் பெற்றானென்று அறிவித்தாள். அவள் இந்தச் சேதி அறிந்து அவனைக் காணவும் அவனோடே ஒரு பேச்சுப்பேசவுஞ் சம்மதிக்கவில்லை.

அவன் அதை அறிந்து கிறீஸ்துவ நடக்கையை விட்டுத் தன்னுடைய பழைய வேதத்தின்படியே நடந்தான். அந்தக் கத்தரீனென்கிறவளோவெனில் சிவனோடே இருக்குமட்டுந் தேவமாதாவின் உதவியினாலே எப்போதும் புண்ணியவழியிலே நடந்து கடைசியாய் நல்லமரணம அடைந்தாள்.

கிறீஸ்துவர்களே, தேனீயானது அந்தந்தப பூவிலேயிருக்கிற இரசங்களை எடுத்துத் தேன் கூட்டுகிறாப்போலே நீங்கள் இப்போ கேட்ட புதுமையில் அடங்கிய பிரயோசனமாகிற ஞான இரசங்களை எடுத்து உங்களாத்துமத்திலே ஞானத்தேனைக் கூட்டவேணும். முதலாவது. இந்தப் புதுமையிலே ஒரு குருவானவர் அந்தச் சின்ன பெணபிள்ளைக்குப புத்தி சொன்னதினாலே அவள் சத்தியவேதத்தைக் கேட்டு அநேகம புண்ணியஙக பண்ணினாளென்று கேட்டீர்களே. அந்தப பிரகாரமாய் நீங்கள் சமயமபார்த்து உலோகத்தாருக்குள்ளே சிறியவர்களுக்குப புத்தி சொன்னால் சிலபேர்கள் கிறீஸ்துவேதத்தைப பற்றிக்கொண்டு அநேகம புண்ணியங்களைப் பண்ணுவார்கள்.

இரண்டாவது. முன் சொல்லப்பட்ட கத்தரீனென்கிறவள் தன் மச்சினனோடே பேசுகிறதற்கு முன்னே இதுகாரியத்திலே தேவமாதா தனக்கு உதவியாயிருக்க அந்த ஆண்டவளை வேண்டிக்கொண்டதினாலே மச்சினன் வழியாக அவளுக்கு வரவிருந்த பொல்லாப்பில் நின்று பூலோகத்தின் ஆண்டவள் அவளை இரட்சித்தாளென்று சொன்னோமே. ஆகையால் நீங்கள் அந்தந்தக் காரியத்தைச் செய்கிறதற்கு முன்னே அதின் வழியாக உங்களுக்குப் பொல்லாப்பு வாராதபடிக்குப் பூலோகத்தின் ஆண்டவளை வேண்டிக்கொள்ளவேணும்.

மூன்றாவது. மோட்சராக்கினி கத்தரீனென்கிற அந்தப் பெண்பிள்ளை காரியத்தை ஏற்றுக்கொண்டதும் அல்லாமல் அவள் தமக்கு நல்ல மனதோடே நல்ல ஊழியம் பண்ணினதினாலே அந்தப் பெண்பிள்ளை சாகுமட்டுந் தன்னுடைய சத்துருக்களைச் செயங் கொள்ளத் தக்கதாக அவளுக்கு வேண்டிய உதவிகளைத் தேவமாதா கட்டளையிட்டாள். ஆனபடியினாலே நீங்களுஞ் சாகுமட்டும் உங்களுடைய சத்துருக்களைச் செயிக்கத்தக்கதாகப் பூலோகத்தின் ஆண்டவள்பேரிலே எப்போதும் பத்தியாயிருந்து அவளுக்கு நல்ல ஊழியம் பண்ணவேணுமென்று அறியக்கடவீர்களாக.

---

## ௬௭-ம் சனிக்கிழமைப்

### புதுமையாவது.

---

தன்னிடத்தில் அடகாகவைத்த
கோவில் வஸ்திரங்களைத் தேவமாதாவின் திருநாளுக்குக்
கொடுக்காததைப்பற்றி ஒருவனுக்கு
உண்டான பயங்கரமான
ஆக்கினை.

கர்த்தர் மனுஷாவதாரம் பண்ணி ஆயிரத்தொருநூற்று எண்பத்தோராம் வருஷங் காலியா தேசத்திலே ரோக்கமதூர் என்கிற பட்டணத்திலே ஆஸ்திக்காரன் ஒருவனிருந்தான். அந்தப் பட்டணத்திலே தானே ஒரு பெரியமடத்திலிருந்த சந்நியாசிகள் தங்

கள் செலவுக்கு இக்கட்டினாலே ஆஸ்திக்காரனிடத்தில் போய்ச் சிலபணங் கடன் கேட்டார்கள். அவன் அந்தப் பணங்கொடுக்கச் சம்மதியாததினாலே சந்நியாசிகள் தங்கள் மடத்தில் இருந்த கோயிற் சம்மந்தமாகிய உயர்ந்த சில வஸ்திரங்களை அடகாக அவனுக்குக் கொடுத்துத் திரும்பக் கடன் உத்தரிக்கக் கெடுவும் வைத்தார்கள். இதற்கு ஆஸ்திக்காரன் சம்மதித்து அந்த வஸ்திரங்களை வாங்கிக்கொண்டு அவர்கள் கேட்ட பணங்கொடுத்தான். கொஞ்சநாளைக்குள்ளாக அந்தக் கோயிலிலே தேவமாதாவின் திருநாள் வந்ததினாலே சோடிக்கிற வஸ்திரம் இல்லாதிருந்தால் திருநாள் நன்றாய் இராதென்று சந்நியாசிகள் நினைத்து அவர்கள் அந்த ஆஸ்திக்காரனிடத்திற் போய் இந்தச் சேதிகளைச்சொல்லி அந்த வஸ்திரங்களைக் கொடுத்தால் திருநாள் முடிந்த பிற்பாடு திரும்பக் கொடுப்போமென்று கேட்டார்கள். அதற்கவன் சம்மதியாமல் இருக்கிறதைச் சந்நியாசிகள் கண்டு மோட்ச இராக்கினியைக் குறித்தாகிலும் அந்த வஸ்திரங்களைக் கொடுமென்று மன்றாடினார்கள். இதற்கவன் சொன்ன போக்காவது: என்னுடைய ஸ்திரீ ஆனவள் பிரசவித்திருப்பதினாலே அவளுக்குக் காற்றுப்படாத படிக்கு அந்த வஸ்திரங்கள் அவளுடைய படுக்கையைச் சுற்றிக் கட்டியிருக்கிறதினால் இப்போது அந்த வஸ்திரங்களைக் கொடுக்கக்கூடாதென்று சொன்னான். சந்நியாசிகள் என்ன செய்யப்போகிறோமென்று சொல்லி ஒரு பிரகாரமாய்த் திருநாளை முடித்தார்கள் திருநாள் முடிந்த மூன்றிராத்திரி தானே தேவமாதா அந்த ஆஸ்திக்காரன் பெண்சாதிக்குக் காண்பித்துக் கோபத்தோடே அவளைப்பார்த்துச் சொன்னதாவது:

உன்னுடைய புருஷன் கனமான பாவங் கட்டிக்கொண்டதினாலே அவனுக்கு ஆக்கினைவரச் சர்வேசு

னுக்குச் சித்தமாச்சுது. ஆகையால் நம்முடைய கோயில் வஸ்திரங்களுக்குள்ளாகப் பிறந்த குழந்தை மூன்றும் நாள் சாகிறதும் அல்லாமல் நம்முடைய திருநாள் முடிந்த எட்டாம் நாள் உன்னுடைய புருஷன் நரகத்திலே பசாசுகளுக்குள்ளே இருப்பான், இதல்லாமல் நீ சாகுமட்டும் புதன்கிழமைதோறும் உனக்கு வருகிற மயக்கத்தினாலே சனிக்கிழமை மத்தியானமட்டும் நினைவில்லாமற் கிடப்பாய். பின்னேயும அந்த மூன்று நாளும உன்னுடைய மூக்கினாலே இரத்தம விழுமென்றாள். இதுவெல்லாந் தேவமாதா திருவுளம் பற்றின பிற்பாடு காணாமல் மறைந்து போனாள். அந்தப் புண்ணியவதி மறுநாள் அழுது கொண்டு மகா கஸ்தியோடே புருஷனிடத்தில் நடந்த சேதியெல்லாஞ் சொன்னாள். அவன் பெண்சாதி சொன்ன வார்த்தைகளை விசுவசியாமல் அவள் கனவுகண்டாளென்று பரியாசம் பண்ணி அதைச் சட்டைபண்ணாதிருந்தான். அந்தப புண்ணியவதி இதைக் கண்டு சொல்லக் கூடாத கஸ்தி அநுபவித்தாள். தன் குழந்தை தேவமாதா சொன்னபடி மூன்றும நாள் செத்ததினாலே அவள் முந்தி அநுபவித்த கஸ்தியைப் பார்க்க அதிக துக்கப்பட்டாள். செத்த குழந்தையினுடைய தகப்பன் பெண்சாதி சொன்னபடி குழந்தை செத்ததென்று நினையாமல் மற்றக் குழந்தைகள் சாகிறாப்போலே சுபாவமாய்ச் செத்ததென்று நினைத்தான். இதல்லாமல் தேவமாதா சொன்னபடியே அவன் தன் பெண்சாதிக்குப் புதன் கிழமை மயக்கம் வந்தது. சனிக்கிழமை மட்டும் நினைவில்லாமல் தேவமாதா சொன்னபடியே கிடந்தாளென்று கண்ணாலே தான் கண்டாலும் மற்றப் பெண்பிள்ளைகளைப்போலே இவளுக்கும் பிள்ளைபெற்றதினாலே இப்படி வந்ததென்று நினைத்திருந்தான்.

இதன்றியே தன்னுடைய சரீரம் பெலத்ததாய் வியாதி இல்லாமல் நன்றாய் இருக்கிறதினாலே என் பெண்சாதி சொன்னபடி எட்டாம் நாள் நான் சாக ப்போகிறதில்லை என்று நினைத்திருந்தான். அப்படியே அவன் நினைத்தாலும் அந்தத் திருநாள் முடிந்த எட்டாம் நாள் இருந்தாப்போலே அவன் செத்தான். அவனுடைய பெண்சாதி இந்தக் காரியமெல்லாங் கண்டு தன் புருஷன் செய்த பாவத்துக்குத் தான் எப்போதும் பயந்து நடந்ததுமல்லாமல் தன்னுடைய பத்தியெல்லாந் தேவமாதாவின் பேரிலே வைத்தாள். ஆகையால் மோட்சத்துக்கு இராக்கினியானவளுக்கு அவள் நல்ல ஊழியம் பண்ணினதினாலே பூலோகத்தின் ஆண்டவள் அவள்பேரிலே மெத்தப் பட்சமாயிருந்து அவளுக்கு அநேகம் உபகாரங்களைக் கட்டளையிட்டாள்.

கிறீஸ்துவர்களே, பிள்ளையானது தாயிடத்திலே பால் குடிக்கிறாப்போலே எல்லாருக்குந் தாயாகிற தேவமாதாவின்பேரிலே பத்தி என்கிற ஞானப்பால் இந்தப் புதுமையைக்கொண்டு நீங்கள் குடிக்கவேணும். முந்த முந்த யாதொரு கோயிலிலே தேவமாதாவின் திருநாள் கொண்டாடினால் அது குறையில்லாமல் நன்றாய் நிறைவேறத்தக்கதாக நீங்கள் உதவி செய்கிறதும் வேண்டிய வஸ்துக்களைக் கூடினமாத்திரங் கொடுக்கிறதுந் தேவமாதாவுக்குப் பிரியமாகும். எப்படியும் அதற்கு விக்கினம் பண்ணவேண்டாம். சிலபேர்கள் பிசுனத்தனத்தினாலே ஒன்றுங் கொடாமல் இருப்பார்கள். சிலர் நல்ல வஸ்துக்களைத் தங்களுக்கு வைத்துக்கொண்டு ஆகாத வஸ்துக்களை அந்தத் திருநாட்களுக்குக் கொடுத்தால் நம்மால் முன் சொல்லப்பட்ட ஆஸ்திக்காரனுக்கு வந்த பொல்லாப்பு தங்களுக்கும் வருகிறதற்கு இப்படிக்

கொத்தவர்கள் இடங் கொடுக்கிறார்கள். தேவமாதா வின்பேரிலே பத்தியாய் இருக்கிறவர்கள் மோட்ச இராக்கினியானவளுடைய அந்தந்தத் திருநாளிலே கூடினமாத்திரந் திருநாளுக்கு வேண்டிய வஸ்துக் களையென்கிலும் அதுகளை வாங்குகிறதற்குச் செல வையாகிலும் உதாரத்தனமாய்க் கொடுக்கிறாப்போ லே நீங்களுங் கொடுக்கவேணும். இந்த வழியாகச் சம்மனசுகளுடைய இராக்கினியானவள் அவர்களு க்கு நன்மையைக் கட்டளையிடுகிறாப்போலே உங்க ளுக்குங் கட்டளையிடுவாள்.

இரண்டாவது. அந்த ஆஸ்திக்காரன் தன் பெண் சாதி சொன்ன புத்தியைக் கேட்டுத் தான் செய்த பாவத்துக்குத் தபசு பண்ணியிருந்தால் அவனுக்கு அத்தனை பொல்லாப்பு வராதென்று நாம் நினைக் கிறோம். ஆனால் அவன் பெண்சாதி சொன்ன சேதி களை நினைத்துச் சட்டைபண்ணாதிருந்தான். நீங்கள் இப்படி நடக்கவேண்டாம். ஆகையால் நீங்கள் பாவ த்தை விடுகிறதற்கும் அதற்கான தபசு பண்ணுகிற தற்கும் எந்தெந்த வழியாகப் புத்தி வந்தாலும் அ தைக் கேட்டு அதின்படியே நடக்கவேணும்.

மூன்றாவது. தேவமாதா அந்தப் புண்ணியவதிக் குக் காண்பித்து நம்முடைய கோயிற் சேலைக்குள் ளாகப் பிறந்த உன் குழந்தை செத்துப்போமென்று திருவுளம் பற்றினதைக் கேட்டீர்களே. ஆகையால் உங்கள் ஆத்துமத்தைத் தேவமாதாவுக்கு ஒப்புக் கொடுத்து நாங்கள் தேவமாதாவின் அடிமைகளாய் இருக்கிறோமென்று நீங்கள் சொன்னதினாலே உங்க ளுடைய ஆத்துமம் அந்த ஆண்டவளுடைய சம்மந் தமாச்சுது. அப்படிக்கொத்த ஆத்துமத்துக்குள்ளே சாவானபாவம் பிறக்க நீங்கள் இடங்கொடுத்தால் சம்மனசுகளுடைய இராக்கினிக்கு உங்கள் பேரிலே

எம்மாத்திரம் மனத்தாங்கல் வருமென்று நினைத்துத் தேவமாதாவுக்குக் காணிக்கையாக ஒப்புக்கொடுத்த உங்கள் ஆத்துமத்திலே முந்திப் பிறந்த இஷ்டப்பிரசாதமுந் தேவமாதாவின் பேரிலே பத்தியுஞ் சாகாமல் எப்போதும் இருக்கத்தக்கதாகப் பிரயாசப்பட வேணுமென்று அறியக்கடவீர்களாக.



## ௪௮-ம் சனிக்கிழமைப்

புதுமையாவது.



தாயார் தேவமாதாவுக்கு மக்களாக ஒப்புக்கொடுத்த இரண்டு பெண்பிள்ளைகளுக்குக் கிடைத்த அற்புதமான நன்மைகள்.

இத்தாலியா தேசத்திலே ஒரு பட்டணத்திலே புருஷன் பெண்சாதியும் அவர்களுடைய இரண்டு பிள்ளைகளும் இருந்தார்கள். அவர்கள் பட்ட பிரயாசத்தினாலே தங்களுக்கு வேண்டிய செலவு நடத்திக்கொண்டு வந்தார்கள். சில நாளைக்குள்ளாகப் புருஷன் செத்துப்போனதினாலே அந்தக் கைம்பெண்சாதிக்கும் பிள்ளைகளுக்கும் இக்கட்டாச்சுது. அந்தக் கைம்பெண்சாதியும் அவள் மக்களாகிற இரண்டு பெண்பிள்ளைகளும் ஆக மூன்று பேரும் எத்தனை வேலைகள் செய்தாலுஞ் சாப்பாட்டுக்குத்தானே பற்றிருப்பதும் அல்லாமல் வஸ்திரத்துக்கு வெகு இக்கட்டாச்சுது.

இப்படியிருக்கையிலே தாய்க்கு வந்த விசாரமாவது: என்னுடைய மக்களுக்குக் கலியாணம் பண்ணுகிற வயதாச்சுது. இக்கட்டு முகாந்தரமாய்க் கலியாணத்துக்கு அவுகாசமில்லை. அந்த இக்கட்டு நீங்கிப்போகத் தக்கதாகப் பசாசின் தந்திரத்தினாலே அவர்கள் பாவத்திலே விழுந்தால் அவர்கள் ஆத்துமங் கெட்டுப்போமென்று வெகு கஸ்தியோடே யோசனை பண்ணினாள். பின்னேயும் அவள் நினைத்தது ஏதென்றால் என்னுடைய மக்களை இந்தப் பட்டணத்திலே யாதொரு துரைமகளாகிற புண்ணியவதிகிட்ட ஊழியம் பண்ணவிட்டால் அப்போது அவர்களுக்குச் சாப்பாடு வஸ்திரங் கிடைப்பதல்லாமல் அவர்கள் ஆத்துமத்துக்கும் மோசம் வராதென்று யோசித்துத் துரைமக்களுக்குள்ளே நல்ல புண்ணியவதி ஆரொன்று விசாரித்துப் பார்க்கிறபோது அவளுக்கு வந்த வேறே விசாரமாவது: மற்ற துரைகளுடைய குமாரத்திகளைப் பார்க்கப் பிதாவாகிய சர்வேசுரனுடைய குமாரத்தியாகிற தேவமாதா எல்லாத்தையும் பார்க்க நல்ல ஆண்டவளென்றும் அவளுக்கு ஊழியம் பண்ண என் மக்களை அந்த ஆண்டவளிடத்தில் ஒப்புக்கொடுத்தால் தாவிளையென்றும் தெரிந்துகொண்டாள்.

பிற்பாடு தன்னுடைய இரண்டு மக்களையுங் கோயிலிலே கூட்டிக்கொண்டு போய் அங்கே இருந்த நூற்றைம்பது மணி மாதாவின் சுரூபத்து முன்பாகத் தன் இக்கட்டுகளை அழுகையோடே சொல்லிக் காண்பித்த பிற்பாடு தன்னுடைய இரண்டு மக்களையுந் தேவமாதாவுக்கு ஒப்புக்கொடுத்து மக்களைப் பார்த்து நீங்கள் இந்த ஆண்டவளைத் தாயாரொன்று கூப்பிடுவதும் அல்லாமல் இனிமேல் என்னைத் தாயாரொன்று கூப்பிடாதேயுங்களென்று சொல்லி முன்

றுபேருந் தங்கள் வீட்டுக்குப் போனார்கள். அன்று தானே தாயானவள் பிள்ளைகளைப் பார்த்து நீங்கள் தேவமாதாவுக்குப் பிள்ளைகளாய் இருக்கிறதினாலே இன்று துவக்கிச் சாகுமட்டும் உங்கள் தாயாரை நீங்கள் சங்கிக்கத்தக்கதாகத் தினம் நூற்றைம்பது மணிச் செபம் பண்ணவேணுமென்று சொன்ன பிற்பாடு தாயும் பிள்ளைகளும் அன்றுதானே செபந் துவக்கினார்கள்.

அப்படியே தினந்தப்பாமல் செய்துகொண்டு வருகிறபோது பூலோகத்தின் ஆண்டவள் இப்போ சொல்லப்பட்ட கைம்பெண்சாதியுடைய பிள்ளைகளைத் தம்முடைய வசம் பண்ணினதினாலே அந்த மூன்று பேருஞ் செய்கிற வேலையைக்கொண்டு அவர்களுக்குத் தினம் மெத்த ஆதாயம் வரப் பண்ணினாள். அதெப்படியென்றால் அந்தப் பிள்ளைகள் தேவமாதாவினிடமாய் ஒப்புக்கொடுக்கப் படுகிறதற்கு முன்னே தினம் எத்தனை பிரயாசத்தோடே அவர்கள் வேலை செய்தாலுங் கொஞ்சச் சாப்பாடு அகப்படுகிறதேயல்லாமல் வஸ்திரத்துக்கு இடமில்லை. பிற்பாடு அந்த வேலையைக்கொண்டுதானே தேவமாதாவின் உதவியினாலே அவர்களுக்கு வஸ்திர போசனங் குறையில்லாமற் கிடைத்து மிச்சம் உண்டாச்சுது. அவர்கள் அதைக் கண்டு இது தங்கள் ஆண்டவள் செய்த சகாயமென்று நினைத்துத் தங்கள் தாயாரிய தேவமாதாவைத் தோத்திரம் பண்ணி வந்தார்கள். சம்மனசுகளுடைய இராக்கினியின் பேரிலே அதிக பத்தியாய் இருந்தார்கள்.

அவர்கள் இப்படிச் சந்தோஷமாய் இருக்கிறபோது பசாசின் தந்திரத்தினாலே அவர்களுக்குவந்த ஒரு கஸ்தியாவது: அந்தக் கைம்பெண்சாதியுடைய மக்கள் இரண்டுபேருங் கோயிலுக்குப்போகிறபோது

தங்கள்மேலே தரித்துக்கொண்டிருக்கிற நல்ல வஸ்திரங்களைச் சனங்கள் கண்டு முந்தி இவர்கள் பிச்சைக்காரராய் இருந்தார்கள், இப்போது இவர்களுக்கு நல்ல வஸ்திரம் எந்த வழியாய் வந்தது. இவர்களுடைய ஆகாத நடக்கையினாலே யாதொருத்தர் இவர்களுக்கு இந்த வஸ்திரங்களைக் கொடுத்தார்கள் என்று இப்படிப் பலவார்த்தையாக அந்த இரண்டு பெண்பிள்ளைகள் பேரிலே ஆவலாதியும் அபாண்டமான புறணியுஞ் சொன்னார்கள். இந்தப் பேச்சு வரவர அதிகமானதினாலே அந்தப் பட்டணமெல்லாம இந்த இரண்டு பெண்பிள்ளைகள் பேரிலே அவகீர்த்தியாச்சுது.

இதுதவிர அப்படிக்கொத்த அவகீர்த்தியான பேச்சு அந்தப் பெண்பிள்ளைகள் காதிலே விழுந்ததினாலே அவர்களுக்கு வந்த கஸ்தியினாலே மிகவும் அழுதார்கள். இதன்றியே தஙகளுக்கு முந்தி இருந்த இக்கட்டைப்பார்க்கத் தங்களுடைய கீர்த்திபோனது பெரிய கஸ்தியென்று நினைத்து முந்தின இக்கட்டிலே நின்று தேவமாதா தங்களை இரட்சித்தாப்போலே இந்த அவகீர்த்தி நீங்கிப் போகத்தக்கதாகத் தஙகள் தாயாராகிய தேவமாதாவை வேண்டிக்கொண்டார்கள். அப்படியே அவர்கள் வேண்டிக்கொண்ட பிரகாரத்துக்கு அநுகூலமாச்சுது

அது எப்படி என்றால் மார்கழிமாதம எட்டாந்தேதி தேவமாதா செனமப் பாவமில்லாமல் உற்பவித்த திருநாளிலே கோயிலிலே சனங்கள் நிறைந்திருக்கிறபோது இந்த இரண்டு பெண்பிள்ளைகளுங் கோயிலுக்குப் போனார்கள். அவர்கள் மேலே போட்டிருந்த நல்ல வஸ்திரங்களைச் சனங்கள் கண்டவுடனே அந்த வஸ்திரம் மோகபாவத்தின் வழியாய் அவர்களுக்கு வந்ததென்று முன்னைப்பார்க்க அவர்

கள்பேரிலே அதிக புறணி சொல்லிக்கொண்டிருந்தார்கள். அந்தப் பேச்சு முன் சொல்லப்பட்ட பெண்பிள்ளைகள் காதிலே விழுந்ததினாலே தங்களிடத்திலே அந்தப் பாவமில்லையென்று சனங்கள் அறியத்தக்கதாக மகா பத்திச் சுறுசுறுப்போடே தேவமாதாவை வேண்டிக்கொண்டார்கள். இப்படி வேண்டிக்கொள்ளுகிறபோது கோயிலுக்குள்ளே தானே பூசை பண்ணுகிற சமயத்திலே நல்ல புஷ்பத்தினால் உண்டாச்சப்பட்ட இரண்டு முடி காண்பிக்கப்படுகிறதை அதனை சனங்களுங் கண்டார்கள். எல்லாரும் அதைக் கண்டு ஆச்சரியப்பட்டதும் அல்லாமல் மோட்சத்துக்கு இராக்கினியானவள் தம்முடைய திருநாளாகிற இன்றைக்கு இந்தப் புதுமையைக்கொண்டு என்ன அறிவிக்கச் சித்தமாய் இருக்கிறாளென்று அவரவர் யோசித்தார்கள். இப்படி இருக்கையிலே அந்த இரண்டு முடியும் உயரத்திலிருந்து மெள்ள இறங்குகிறதை எல்லாருங் கண்டு ஆருடைய தலைமேல் இந்தப் பாக்கியம் வருமென்று பார்த்துக் கொண்டிருந்தார்கள்.

இப்படி இருக்கிற சமயத்திலே எல்லாராலேயும் புறணிவார்த்தை சொல்லப்பட்ட கூடப்பிறந்தவர்களாகிய இரண்டு பெண்பிள்ளைகளுடைய தலைமேலே அந்த முடி வந்து நின்றது. மற்றவர்களெல்லாரும் அதைக் கண்டு இந்த இரண்டு பெண்பிள்ளைகளும் புண்ணியவதிகள் தானே. நாங்கள் அநியாயமாய் நினைத்த குற்றம் அவர்கள் பேரில் இல்லையென்கிறதாக இந்தப் புதுமையைக்கொண்டு தேவமாதா நமக்கு ஒப்புவித்தாளென்று நினைத்து அறியாமல் அபாண்டமான புறணி சொன்னோமென்று அவர்களை மெத்தவுங் கொண்டாடினார்கள். இதல்லாமல் அந்தப் பெண்பிள்ளைகள் ஆஸ்தி இல்லாதவர்களாய்

இருந்தாலும் பூலோகத்தின் ஆண்டவருக்கு உகந்தவர்களாய் இருக்கிறார்களென்று இந்தப் புதுமையைக்கொண்டு அறிந்து அந்தப் பட்டணத்திலே இருந்த இரண்டு துரைமக்கள் அவர்களைக் கலியாணம் பண்ணினார்கள். ஆகையால் இந்த இரண்டு பெண்பிள்ளைகளுக்கு இருந்த அவகீர்த்தியான கஸ்தி தேவமாதாவின் வழியாய் நீங்கினதும் அல்லாமல் முன்னைப் பார்க்க அவர்களுக்குக் கீர்த்தியும் ஆஸ்தியும் மகிமையும் வந்தது.

கிறீஸ்துவர்களே, சமுத்திரத்திலே முத்துக் குளிக்கிறவன் ஆசையோடே குளிக்கிறாப்போலே நீங்கள் அதிக ஆசையோடே இப்போது கேட்ட புதுமையிலுள்ள ஞான முத்துகளை எடுக்கவேணும். முந்த முந்த இப்போ சொல்லப்பட்ட பெண்பிள்ளைகளிடத்திலே மோகபாவம் இல்லாதிருந்தாலும் அந்தப் பட்டணத்தார் அநியாயமாய் அந்தப் பாவம் அவர்களிடத்திலே உண்டென்று நினைத்துப் புறணி சொன்னார்கள். புறணி சொன்னவர்கள் அநேகம் பாவங்களைக் கட்டிக்கொண்டார்கள். அப்படிக்கொத்த கேடுகளில் நீங்கள் அகப்படாதபடிக்குப் புறணி என்கிற பாவத்துக்குப் பயந்து நடக்கவேணும். சில பேர்கள் யாதொருத்தனிடத்திலே சில ஆடு மாடு உடைமைகளைக் கண்டால் அவன் எங்கே களவாண்டானோவென்று நினைத்துப் புறத்தியாருக்குச் சொல்லுவார்கள். ஐயையோ பாவத்தின் வழியாக மாத்திரமோ உடைமை ஆடு மாடு வருகிறது. பட்ட பிரயாசத்தினாலேயும் பாவமில்லாத வழியாகவும் உடைமையும் ஆஸ்தியும் வாராதோ? சாஸ்திரியுமாய் மகாத்துமாவுமாயிருக்கிற அர்ச். தோமாவென்கிறவர் எழுதி வைத்ததின்படியே அடிக்கடி புறணி பேசப் பழகி இருக்கிறவர்கள் புறத்தியாரிடத்

திலே உண்டென்று தாங்கள் நினைத்த பாவங்களிலே தங்களுக்குப் பழக்கமிருக்கிறதினாலே தங்களைப்போலே மற்றவர்கள் நடக்கிறார்களென்று நினைத்துப் புறணி பேசுகிறார்கள். அதெனென்றாற் களவிலே பழக்கமுள்ளவன் தன்னைப்போலே மற்றவர்களுங் களவாண்பார்களென்று நினைப்பான்.

இரண்டாவது. முன் சொல்லப்பட்ட கூடப் பிறந்த பிள்ளைகளுடைய தாயானவள் தன்னுடைய பிள்ளைகளுக்குச் சாப்பாடு இல்லை என்கிற இக்கட்டினாலே வருகிற கஸ்தியைப் பார்க்கப் பாவத்தினாலே வருகிற பொல்லாப்பு பெரியதென்று நினைத்து அப்படிப்பட்ட பொல்லாப்பு தன்னுடைய பிள்ளைகளுக்கு வராதபடிக்குப் பிரயாசப்பட்டாள். அந்தப் புண்ணியவதியைப்போலே மற்றத் தாய்மார்கள் நடந்தால் அத்தனை பாவம வராது. அதெப்படியென்றால் சில தாய்மார்கள் பிள்ளைகள் ஆத்துமத்துக்குப் பாவம் வருமென்று அறிந்திருந்தாலும் இக்கட்டு முகாந்தரமாய்ப் பிள்ளைகளை அக்கியானிகள் முதலான ஆகாதவர்கள் வீட்டிலே விடுவார்கள். சர்வேசுரன்பேரில் நம்பிக்கை இல்லாதவர்களே, பாமபுக்குட்டிகளுக்கு முதலாய் இரை கொடுக்கிற சர்வேசுரன் தம்முடைய ரூபமாய்ப் படைத்து இரட்சித்த உங்களுடைய பிள்ளைகளுக்கு நீங்கள் அவர்பேரிலே நம்பிக்கையாய் இருந்தால் சாப்பாடு கொடாதிருப்பாரோ.

மூன்றாவது. அந்தச் சைமபெண்சதி தன்னுடைய பிள்ளைகளைத் தேவமாதாவினிடமாய் ஒப்புக்கொடுத்துத் தானும அவர்களுந் தினம் நூற்றைம்பது மணிச்செபம் பண்ணினதினாலே அவர்களுக்கு வந்த சகல பொல்லாப்புகளிலும் நின்று மோட்சத்துக்கு இராக்கினியானவள் புதுமையாக அவர்களை

இரட்சித்தாரல்லவோ? அந்தப் பிரகாரமாய் நீங்கள் சரியாய் நடந்தால் உங்களுக்கு வருகிற பொல்லாப்பு நீங்கிப்போகத்தக்கதாகப் புதுமை வேண்டியிருந்தாலும் உங்களுக்காக மோக்ஷத்து இராக்கினியானவள் புதுமை செய்வாளென்று நீங்கள் நம்பவேணுமென்று அறியக்கடவீர்களாக.

---

## ௬௧-ம் சனிக்கிழமைப்

புதுமையாவது.

ஓர் பாவி தேவமாதாவை
வேண்டிக்கொள்ளாத இராத்திரியில்
அவனைக் கொல்ல ஓர் குரங்கின் ரூபமாய்க் காத்திருந்த
பசாசு ஓட்டப்பட்ட
அற்புதம்.

இத்தாலியா தேசத்திலே வெனீசெண்கிற பட்டணத்திலே ஐந்து காயமுள்ள அர்ச். பிரஞ்சிஸ்கு சபையில் உட்பட்ட மத்தேயுபாசோ என்கிற ஒரு குரு இருந்தார். அவர் பண்ணின புண்ணியங்களினாலேயுஞ் சிலுவிசை செய்த புதுமைகளினாலேயும அந்தப் பட்டணத்தார் அவர் பேரிலே தோத்திரம பண்ணுவார்கள். அந்தப் பட்டணத்தாருக்குள்ளே ஆஸ்திக்காரனும வித்தியாபாரகனுமாகிய ஒருத்தன் அந்தக் குருவானவர் பேரிலே மகா பட்சமாய் இருந்ததினாலே அவரைத் தன் அரண்மனையிலே ஒரு

விசை வரவேணுமென்று மன்றாடினான். அப்படியே மத்தேயு என்கிற குருவானவர் அங்கே போய்ச் சாஸ்திரியானவனோடே பற்பல சேதி பேசிக்கொண்டிருக்கிறபோது அவன் சொன்னதாவது: சுவாமீ ஒரு குரங்கு என்னுடைய அரண்மனையிலே வந்து அநேக வருஷம் ஆச்சுது. அந்தக் குரங்கு மற்ற ஊழியக்காரரைப் பார்க்க எனக்கு நன்றாய் ஊழியம் பண்ணுது. அதெப்படியென்றால் நான் சாப்படுகிற நேரத்தில் சாப்படுகிறதற்கு வேண்டிய வஸ்துக்களை அதுதானே கொண்டுவந்து வைக்கிறது, சாப்பட்டு முடிந்த பிற்பாடு அதுகளை எடுத்துக்கொண்டுபோய்ச் சுத்தம் பண்ணுகிறது, பின்னேயும் நான் புறத்தியிலே காரியமாய்ப் போய் வீட்டுக்கு வருகிறபோது அந்தக் குரங்கு எனக்கு எதிராக வந்து பட்சத்தினுடைய அடையாளங்களைக் காண்பித்த பிற்பாடு தலைவாசற் கதவை நன்றாய்த் திறந்து வெளியிலே நான் போட்டுக்கொண்டுபோன பாதரட்சைகளையும் வஸ்திரங்களையும் மற்றக் காரியங்களையுங் குரங்கு வாங்கிப் பத்திரமாய் வைக்கிறதும் அல்லாமல் வீட்டிலே இருக்கிறபோது எனக்கு வேண்டிய வஸ்திரங்களை எடுத்து வந்து கொடுக்கிறது. இப்படியாக இந்த ஊழியங்களைக் குறையில்லாமற் செய்கிறதென்று சொன்னான்.

இந்த அதிசயமான காரியங்களைக் குருவானவர் கேட்டு அப்படிக்கொத்த குரங்கை நாம் பார்க்க ஆசையாய் இருக்கிறோம் என்றார். ஆனால் அந்தச் சமயத்திலே குரங்கு இரகசியமான ஒரு இடத்திலே இருந்ததினாலே அது எங்கேயென்று எல்லோருந் தேடிப் பிரயாசப்பட்டுப் பார்க்கிறபோது கட்டிலின் கீழே ஒளித்துக்கொண்டிருக்கிறதைக் கண்டார்கள். கண்டவுடனே பட்சத்தோடே கூப்பிட்டாலுங் கட்

டாயமாய் இழுத்தாலும ஒரு அடியாகிலும் எட்டி வைத்து வாரதேபோச்சுது. எல்லாரும் இதைக் கண்டு குருவானவரிடத்திற் போய் நடந்த சேதியைச் சொன்னார்கள். அப்போது அவர் அந்த ஆஸ்திக்காரனைப் பார்த்துச் சொன்னதாவது: உன்னாலே இப்போது கொண்டாடப்பட்ட குரங்கை யாரென்று நீ அறியவேணுமானால் அது பசாசுதானே. இதை நீ விசுவசிக்கத்தக்கதாக அதின் வாயாலேதானே நாம சொல்லப்பண்ணுகிறோம். நீ என்னோடேகூட வாவென்று சொல்லி அவனையும் மற்றவர்களையுங் கூட்டிக் கொண்டு குரங்கு இருக்கிற இடத்துக்குக் குருவானவர் போனார்.

போனவுடனே குருவானவர் அந்தக் குரங்கைப் பார்த்து நீ ஆர்? இந்த அரண்மனைக்குள்ளே வந்த காரியம் என்ன, மிருகத்தின் ரூபமாகக் காண்பித்து நீ ஏதுக்கு ஊழியம் பண்ணுகிறாய், சர்வேசுரனுடைய திருநாமத்தினாலே சொல்லென்றார். இதற்கு அந்தக் குரங்கு மகா கோபத்தோடே வாய்திறந்து இந்த வீட்டுக்கு உடையவன் செய்த பாவத்தினாலே இவன் ஆத்துமம் என் சம்மந்தமாய் இருக்கிறபடியினாலே அந்த ஆத்துமத்தை நான் நரகத்திலே கொண்டுபோகிறதற்காக நான் இங்கே வந்திருக்கிறதே அல்லாமல் வேறே காரியமாய் வரவில்லையென்று சொல்லிற்று. அதற்குக் குருவானவர் நீ இங்கே இருந்த அநேக வருஷத்துக்குள்ளாக ஏன் கொண்டுபோகாமல் இருந்ததென்று கேட்டதற்குக் குரங்கு ரூபமாய் இருந்த பசாசு சொன்னதாவது: இந்த வீட்டு எசமான் இராத்திரிதோறும் நித்திரை போகிறதற்கு முன்னே சர்வேசுரனுடைய தாயாரைக் குறித்துச் சில மந்திரம் வேண்டிக்கொண்டதினாலே நான் அவனை நரகத்திலே கொண்டுபோகவில்லை. அப்படிட்

பட்ட வேண்டுதல் ஒரு இராத்திரிமாத்திரஞ் சொல்லிருந்தால் அன்றைக்குத்தானே இவன் குரல்வளையைப் பிடித்து நெருக்கி நரகத்திலே கொண்டுபோகச் சர்வேசுரன் எனக்கு உத்தாரங் கொடுத்தாரென்று சொல்லிற்று.

அந்தக் குரங்கு இப்படிச் சொல்லுகிறபோது அங்கே நின்றவர்களுக்குள்ளே அந்த வீட்டுக்குடையவன் பட்ட பயத்தினாலே அவஸ்தைக்காரன் போலே இருக்கிறதைக் குருவானவர் கண்டு அவனுக்குத் தைரியமான வார்த்தை சொன்ன பிற்பாடு குரங்கு ரூபமாய் இருந்த பசாசைக் குருவானவர் நரகத்திலே போகச் சொன்னதினாலே ஒரு க்ஷணத்திலே காணாமற் போச்சுது. பிற்பாடு குருவானவர் அந்த வீட்டுக்கு உடையவனாகிய சாஸ்திரிக்குப் பாவத்தைவிட ஆனபுத்தி சொன்னார். அவன் தன்னுடைய பழைய நடக்கை எல்லாத்தையும் விட்டுக் களவாண்ட உடைமை எல்லாம் உத்தரித்துச் சாகுமட்டும் புண்ணியவழியிலே நடந்தான். மீளவும் அவன் தேவமாதா தனக்குப் பண்ணின சகாயத்துக்கு அந்த ஆண்டவளுக்கு ஆன தோத்திரம் பண்ணினதும் அல்லாமல் அந்த ஆண்டவள்பேரிலே அதிக பத்தியாய் இருந்து சீவனுள்ளமட்டும் அவளுக்கு ஏற்க நடந்துகொண்டுவந்தான்.

கிறீஸ்துவர்களே, நந்தனவனத்திலே நல்ல புஷ்பங்களை எடுக்கிறாப்போலே இப்போது நீங்கள் கேட்ட புதுமையில் உள்ள ஞான புஷ்பங்களை எடுக்கவேணும். முந்தமுந்த மனுஷருடைய சுபாவத்தைப் பார்க்கப் பசாசினுடைய சுபாவம் மிகுந்த உயர்ந்த சுபாவமாய் இருந்தாலும் ஒரு ஆத்துமத்தைக் கைக்கொள்ளத்தக்கதாக அந்தப் பசாசு மிருகத்தின் ரூபமாய்க் காண்பித்து அநேகம் வருஷமாய் நீசஊழிய

ங்களைப் பண்ணினதென்று இந்தப் புதுமையிலே
நீங்கள் கேட்டீர்களே. ஆகையால் உங்களுடைய
ஆத்துமம் நீசவஸ்துவென்று நினையாமல் உயர்ந்த
வஸ்துவென்று நீங்கள் கெட்டியாய் நினைக்க வே
ணும். இப்படியிருக்கையிலே, பாவீ, களவுமுகாந்தர
மாகவும் அழிந்துபோகிற உன் சரீரத்துக்குப் பொல்
லாத சந்தோஷம் வருத்துவிக்கத் தக்கதாகவும் ஒரு
காசு பெறாத வஸ்துவைப்போலே உன்னாத்துமத்
தைப் பசாசுக்கு விற்றுப்போடலாமோ. பயித்தியக்
காரா இந்தக் காரியத்திலே எப்படி நடக்கிறாயென்று
நன்றாய்ப் பார்த்துக்கொள்.

இரண்டாவது. இப்போ சொல்லப்பட்ட சாஸ்திரி
நரகத்துக்குப் போகப் பாத்திரமாய் இருக்கையிலே
தேவமாதாவின் உதவியினாலே தப்பினான் என்று
சொன்னோமே. சிலபேர்கள் நாங்கள் செய்த பாவத்
தினாலே இந்தமட்டும் ஆக்கினை வரவில்லை என்று
சொல்லுவார்கள். இப்படிக்கொத்தவர்கள் அறிய
வேண்டியதாவது: சில விசை நீங்கள் மோட்ச இரா
க்கினியையக் குறித்துப் பண்ணுகிற புண்ணியங்கள்
முகாந்தரமாக இந்தமட்டும் ஆக்கினை வரவில்லை.
ஆனால் அது இனிமேல் வராதபடிக்கு ஆக்கினைக்
குக் காரணமாயிருக்கிற பாவத்தை விடவேணும்.

மூன்றாவது. தயையுள்ள அர்ச். கன்னிமரியாயி
தம்மைக் குறித்து முன் சொல்லப்பட்ட சாஸ்திரி
தினம் வேண்டிக்கொண்டதினாலே அவனுக்குக் கன
மான சகாயம் பண்ணினாளென்று நீங்கள் அறிந்து
பூலோகத்தின் ஆண்டவளுக்கு நல்ல மனதோடே
ஊழியம் பண்ணுவதுமல்லாமல் தினந் தினந் தப்
பாமல் அவளைப் பிரார்த்தித்துக்கொள்ளவேணும்.
அதேதென்றால் பாவீ தேவமாதாவைப் பிரார்த்தித்
துக்கொள்ளாதிருந்தால் அன்றைக்கு உன் பாவத்தி

ஞலே உனக்குப் பொல்லாப்பு வர நீ இடங்கொடுக்கிறப்போலே ஆச்சுது.

நாலாவது. முன் சொல்லப்பட்ட ஆஸ்திக்காரன் தன் வீட்டிலே குரங்கு ரூபமாகப் பசாசு வந்திருந்ததென்று அறிந்து பிற்பாடு நான் இன்னம் பாவியாய் இருந்தாலும் முன்னேயைப்போலே தேவமாதா என்னை இரட்சிப்பாளென்று நினையாமல் பாவத்தை முழுதும் விட்டுவிட்டான். அந்தப் பிரகாரமாய் நீங்கள் நடக்கவேணும். சிலபேர்கள் தேவமாதாவைக் குறித்து ஒரு மந்திரம் வேண்டிக்கொண்டு சனிக்கிழமை ஒருசந்தியாயிருந்து தாங்கள் சாகுமட்டும பாவ வழியிலே நடந்தாலும் முன் சொல்லப்பட்ட புண்ணியத்தைக் குறித்துத் தேவமாதா தங்களை இரட்சிப்பாளென்று நினைத்து மனதின்படியே பாவத்தைக் கட்டிக்கொள்ளுவார்கள். நீங்கள் இப்படி நினைக்கவேண்டாம். அதேனென்றால் பாவிகள் மோக்ஷத்துக்கு இராக்கினியானவளைக் குறித்து யாதொரு புண்ணியம் பண்ணினால் அந்த வழியாக அவர்கள் பாவத்தை விடுகிறதற்கு ஞான உதவி வருகிறது நிச்சயந்தானே. அதற்கு அவர்கள் இடங்கொடாமல் சாவான பாவத்தோடே செத்தால் அவர்கள் நரகத்துக்குப் போகிறது தப்பாதென்று அறியக்கடவீர்களாக.



# ௫௰-ம் சனிக்கிழமைப் புதுமையாவது.



## செபமாலையினிமித்தம் ஓர் இராச புத்திரியின் மட்டில் தேவமாதா செய்தருளின அற்புதங்கள்.

லுசித்தானியா என்கிற தேசத்திலே லீஸ்போன் என்கிற ஊரிலே ஒரு இராசா இருந்தான். அவனுடைய ஸ்திரீயானவள் தேவமாதாவின்பேரிலே மகா பத்தியாயிருந்த படியினாலே அந்தப் பத்தி தனது அரண்மனையிலிருக்கிற மற்றப் பெண்பிள்ளைகளுக்கும் வரத்தக்கதாக அவர்களுக்கு அடிக்கடி புத்தி சொல்லித் தினந் தினந் தன்னோடேகூட ஐம்பதுமணிச் செபம் பண்ண அவர்களுக்குக் கட்டளையிட்டாள். பின்னேயும் இதுகாரியத்திலே அவள் தன்னுடைய மகளாகிய அன்னம்மாளுக்குத் தான் பிரயாசப்பட்டுப் புத்தி சொன்னதினாலே அவளுந் தன்னைப்போலே மோட்ச இராக்கினிபேரிலே மகா பத்தியாய் இருக்கிறதைக் கண்டு மெத்தவுஞ் சந்தோஷமாய் இருந்தாள். அந்தப் பத்தி முகாந்தரமாக அந்த அன்னம்மாள் எப்போதுங் கன்னியாஸ்திரீயாய் இருக்கிறதற்குத் தேவமாதாவுக்கு வார்த்தைப்பாடு கொடுத்தாள்.

இப்படியிருக்கையிலே ஒருநாள் தாயானவள் தன் மகளுக்கு நல்ல செபமாலை கொடுத்து அவளுக்குச் சொன்னதாவது: என் மகளே, எப்போதும் இந்தச் செபமாலையை நீ கழுத்திலே போட்டிருந்தால் உன்

னுடைய ஆத்துமத்துக்குஞ் சரீரத்துக்கும் வருகிற பொல்லாப்பில் நின்று தேவமாதா உன்னை இரட்சிப்பாளென்றாள். அந்த அன்னம்மாள் தன்னுடைய தாயார் சொன்ன புத்தியைக் கேட்டு எப்போதுஞ் செபமாலையைத் தன் கழுத்திலே தரித்துக்கொண்டிருந்தாள். அவள் தரித்திருந்த அந்தச் செபமாலை வழியாகத் தேவமாதா அந்த அன்னம்மாளுக்கு அதிசயமான புதுமை பண்ணினாள். அதாவது: ஒரு சமயத்திலே அவளும் அவளுடைய தாயாருஞ் சில பெண்பிள்ளைகளும் அரண்மனையின் மேல் வீட்டிலே இருக்கிறபோது 'தாயானவள்' மற்றவர்களுடனே பேசிக்கொண்டிருக்கச்சே சிறு பிள்ளையாகிய அன்னம்மாள் வேறே சிறு பிள்ளைகளோடே திஷ்டி வாசலின் கிட்ட விளையாடினாள். இப்படி விளையாடுகிறபோது அந்த அன்னம்மாள் திஷ்டிவாசலின் வழியாய்த் தவறிப் புறத்தியிலே கீழே விழுந்தாள். அப்படி அவள் விழுந்ததினாலே அபாயமாய்ச் சாகவேண்டியிருந்தாலும் அவள் தேவமாதாவின் உதவியினாலே பிழைத்தாள்.

இதன்றியே அவள் விழுந்த முற்றத்திலே ஒரு சிங்கம் அடைத்திருந்தது. அந்தச் சிங்கம் அந்தப் பிள்ளை விழுந்ததைக் கண்டவுடனே மகா கோபத்தோடே வாயைத் திறந்துகொண்டு 'அந்தப் பிள்ளையைத் தின்னத் தக்கதாக வந்தது. அந்தப் பிள்ளை அதைக் கண்டு பயப்படாமல் தன்னுடைய கழுத்திலேயிருந்த செபமாலையை அந்தச் சிங்கத்தின் கழுத்திலே எட்டிப் போட்டாள். அந்தச் செபமாலை அதின் கழுத்திலே விழுந்தவுடனே புதுமையாக அதினுடைய கோபம் அமர்ந்தது. பின்னும் அந்தப் பிள்ளையைத் தொடாமல் சும்மாயிருந்தது. இந்த அதிசயத்தை அந்தச் சிறு பிள்ளை கண்டு மறுபடியுந் துணி

வோடே அந்தச் சிங்கத்தின் கிட்டப் போய் அதின் கன்னப் பரிசையைப் பிடித்து ஒரு நாய்க்குட்டியைப்போலே அதை அரவணைத்துச் சிரித்துக்கொண்டு சிங்கமே, தேவமாதாவுக்கு வார்த்தைப்பாடு கொடுத்தபடியே நான் கன்னியாஸ்திரீயாய் இருப்பேனென்கிறதினாலே நீ என்னைத் தீண்டாதே என்றாள். பிற்பாடு அதின் கழுத்திலேயிருந்த செபமாலையைக் கழற்றித் தன் கழுத்திலே போட்டுக்கொண்டு அந்த மிருகத்தை விட்டு மேல் வீட்டுக்குப் போனாள். இந்த ஆச்சரியமான காரியங்களெல்லாம் மேல் வீட்டிலே இருந்தவர்களும் அந்த மிருகத்தை விசாரிக்கிறவர்களும் கண்டார்கள். பிற்பாடு அந்த அன்னம்மாள் உலோகத்தை வெறுத்துக் கன்னியாஸ்திரீயாயிருந்து சாகுமட்டும் மோட்ச இராக்கினி பேரிலே வைத்திருந்த பத்தியைச் சொல்லக்கூடாது.

கிறீஸ்துவர்களே, ஒருத்தன் தன் விருக்ஷத்திலே கனிகளைப் பறிக்கிறாப்போலே நீங்கள் இப்போது கேட்ட புதுமையிலேயுள்ள ஞானக் கனிகளைப் பறிக்கவேணும். முந்த முந்த இப்போ சொல்லப்பட்ட அன்னம்மாளுடைய தாயானவள் மகளுக்குப் புத்தி சொல்லிப் பிரயாசப் பட்டதினாலே தேவமாதாவின் பேரிலே அவளுக்கு வெகு பத்தி வந்தது பிள்ளைகளுடைய தாய் தகப்பன்மார்களே, உங்களுடைய பிள்ளைகளிடத்திலே நீங்களும் அப்படி நடத்திக்கொண்டு வந்தால் அப்படிக்கொத்த பத்தி அவர்களுக்கும் வருமே. சில தாய் தகப்பன்மார்கள் தங்களுடைய பிள்ளைகளுக்கு உடைமை போடப் பணஞ் செலவழித்துப் பிரயாசப் படுகிறதேயல்லாமல் செபமாலை கொடுத்துச் செபம் பண்ணுவிக்க விசாரிக்கவில்லையென்று கண்டு வருகிறோம். ஆனால் அநேக

முறை அந்த உடமை வழியாக ஆத்தும்த்துக்குப் பொல்லாப்பு வருகிறதே அல்லாமல் நன்மை வராது. ஆனால் செபமாலை வழியாக ஆத்துமத்துக்குஞ் சரீரத்துக்கும் நன்மை வருகிறதற்குச் சந்தேகமில்லை.

இரண்டாவது. இப்போ சொல்லப்பட்ட அன்னம்மாள் உயர்ந்த மகிமையுள்ளவளாய் இருந்தாலும் எப்போதுஞ் செபமாலையைக் கழுத்திலே போட்டிருக்கிறது தனக்கு வெகுமானம்போலே எண்ணியிருந்தாள். கிறீஸ்துவர்களே நீங்களுங் கெட்டியாய் இப்படி நினைத்து எப்போதும் உங்கள் கழுத்திலே செபமாலையைத் தரித்திருந்தால் உலகத்தின் ஆண்டவள் அந்தச் செபமாலை வழியாக அன்னம்மாளை இரட்சித்தாப்போலே உங்களையும் இரட்சிப்பதற்கு வழியாம்.

மூன்றாவது. சிங்கமானது மற்ற மிருகங்களைப் பார்க்கக் கோபமுள்ள துஷ்ட மிருகமாய் இருந்தாலும் அதினுடைய கோபம் அமர்ந்தது. ஆகையால் தம்பீ, உனக்குக் கோபம் வருகிற சமயத்தில் நீ ஒரு சிங்கம்போலே காண்பித்தாலும் மோக காரியத்திலே நீ ஒரு பன்றியைப்போலே இருந்தாலும் பூலோகத்தின் ஆண்டவளைக் குறித்துப் பத்தியோடே தினஞ் செபம் பண்ணி உன் கழுத்திலே செபமாலையை ஆசையோடே தரித்திருந்தால் உன்னுடைய ஆகாத குணமெல்லாந் தேவமாதாவின் புதுமையினாலே நீங்கிப்போய் நீ ஒரு செம்மறியாட்டுக் குட்டியைப்போல் இருப்பாயே.

நாலாவது. அந்த அன்னம்மாள் செபமாலையைக் கொண்டு சிங்கத்தைச் செயங் கொண்டாப்போலே நீயுஞ் செபமாலையைக்கொண்டு நரகத்தின் சிங்கமாகிற பசாசைச் செயங் கொள்ளலாம். கடைசியிலே

அர்ச். கன்னிமரியாயீ தமதுபேரிலே பத்தியாயிரு ந்த அன்னம்மாளுக்குச் சகாயமாக அந்தச் சமயத் திலே ஒரு புதுமைமாத்திரமல்ல, அநேகம் புதுமை பண்ணினாள். அதேதென்றால் மகா உயரத்திலே இருந்து விழுந்த அன்னம்மாள் சாகாமல் இருக்க வுஞ் சிறு பிள்ளையாயிருக்கிற அவள் பெரிய மிருகத் தைக் கண்டு பயப்படாமல் இருக்கவுஞ் செபமாலை யை மிருகத்தின் கழுத்திலே போட்ட சமயத்திலே அதினுடைய துர்க்குணம் அமர்ந்திருக்கவும் அந்தச் சிறுபிள்ளையாகிற அன்னமமாள் சிங்கத்தின் கன்ன பரிசையைப் பிடித்து அரவணைத்துத் தடவிக்கொ டுக்க அது ஒரு ஆட்டுக்குட்டியைப்போலே இருக் கவும் இந்தப் புதுமை எல்லாந் தேவமாதா பண்ணி னாள். ஆகையால் நீங்கள் அந்த அன்னமமாளைப் போலே சம்மனசுகளுடைய இராக்கினியின் பேரி லே மிகுந்த பத்தியாயிருந்தால் ஆச்சரியமான வழி யாகத் தேவமாதா உங்களுக்கு அநேக நன்மைகளைக் கட்டளையிடுவாளென்று அறியக்கடவீர்களாக.



## ௫௧-ம் சனிக்கிழமைப்

பதுமையாவது.

### பசாசின் கையினின்று ஓர் வாலன்
### செபமாலையினாலுந் தேவமாதாவை மன்றாடினதினாலும்
### இ ர ட் சி க் க ப் ப ட் ட
### அ ற் பு த ம்.

மெக்சிக்கோ என்கிற இராச்சியத்திலே இருந்த ஒரு வாலன் மோட்ச இராக்கினியின்பேரிலே மகா பத்தியாய் இருந்ததினாலே அந்த ஆண்டவளுக்குத் தோத்திரமாகத் தினந்தோறும் ஐம்பது மணிச் செபம் பண்ணிக்கொண்டுவந்தான். இதல்லாமல் ஒரு நல்ல சேவகன் எப்போதும் தன் கையிலே ஆயுதம் வைத்திருக்கிறதுபோலே அந்த வாலன் தேவமாதாவின் செபமாலை தனக்கு ஞான ஆயுதமென்று நினைத்து எப்போதும் தன் கழுத்திலே போட்டுக்கொண்டிருந்தான்.

ஒருநாள் அவன் தன் வீட்டிலே இருக்கிறபோது அலங்காரமுள்ள ஒரு பெண்பிள்ளை அநேகம் உடைமைகளைத் தரித்துக்கொண்டு அவனுடைய வீட்டிலே வந்துபோய் நல்ல வார்த்தை சொன்னதினாலேயும் ஆகாத பட்சங் காண்பித்ததினாலேயும் இந்த வாலன் தன்பேரிற் பட்சமாய் இருக்கும்படியாகப் பிரயாசப்பட்டாள். வாலன் அவளுடைய வலையில் அகப்பட்டு இருவருங் கூட உலாத்தப்போய் ஊருக்குப் புறத்தியிலே காட்டுக்குள்ளே மனுஷரில்லாத இடத்திலே சேர்ந்தார்கள். அங்கே போன பிற்பாடு அவள் அந்த வாலனைப் பார்த்து உன் கழுத்திலே இருக்கிற

செபமாலையை இந்தச் சமயத்திலே தள்ளென்று மன்றாடுகிறபோதே பிரயாசப்பட்டுச் சொன்னாள். அதற்கு அவன் சம்மதியாமலிருக்கிறதை அவள் கண்டு அவனைப் பார்த்து நீ என்னோடே பட்சமாயிருக்கவேணுமானால் அந்தச் செபமாலையைத் தள்ளு, அதைத் தள்ளாமலிருந்தால் நான் உன்னைப் பிறக்கணித்துப் போவேன் என்றாள். அவன் இந்த வார்த்தையைக் கேட்டு என் கழுத்திலே இருக்கிற செபமாலை ஒருத்தருக்குந் தெரியாமல் சட்டைக்குள்ளே மறைந்திருக்கிறதை இவள் எப்படிக் கண்டாளென்று நினைத்து இந்தப் பெண்பிள்ளை யாரோவென்று நினைத்துச் சந்தேகமாய் இருந்தான். இதல்லாமல் அவளுடைய அலங்கார முகாந்தரமாக அவளோடே பட்சமாயிருக்க வெகு ஆசைப்பட்டாலுஞ் செபமாலையைத் தள்ள மனதில்லாததினாலே அவன் அவளைப் பார்த்துச் சொன்னதாவது: நான் உலோகத்தினுடைய சந்தோஷமெல்லாம் அநுபவிக்கிறதைப் பார்க்கச் செபமாலை என் கழுத்திலே கிடக்கிறது மகா பாக்கியமாக எனக்குத் தோன்றுது. இதினாலே செபமாலையை நான் தள்ளமாட்டேன் என்றான்.

பெண்பிள்ளை இந்த வார்த்தையைக் கேட்டமாத்திரத்தில் அவளிடத்திலேயிருந்த அலங்கார உடைமை எல்லாம் ஒரு க்ஷணத்திலே காணாமற் போனதும் அல்லாமல் மகா பயங்கரம் வருத்துவிக்கிற துஷ்ட மிருகத்தின் ரூபமாய்க் காண்பித்து அவனைப் பார்த்துச் சொன்னதாவது: நீ கழுத்திலே தரித்திருக்கிற செபமாலை இப்போ உன்னை இரட்சித்தது. அதேதென்றால் நான் பசாசு. நீ இந்தச் செபமாலையை இப்போ தள்ளியிருந்தால் நீ மனதிலே கட்டிக்கொண்ட பாவத்தினாலே உன்னை இப்போது

இரக்ஷணியமாய் இருக்கத்தக்கதாக அப்படிப்பட்ட செபமாலையை எப்போதும் உங்கள் கழுத்திலே போட்டிருந்தால் மெத்த நல்லது.

நாலாவது. அவன் உலோகத்தின் நன்மையெல்லாந் தான் அநுபவிக்கிறதைப் பார்க்கத் தன் கழுத்திலே இருக்கிற செபமாலை தனக்கு மகா பாக்கியமாய் இருக்குமென்று பசாசோடே சொன்னதினாலே அவன் இருதயத்திலே தேவமாதாவின் பேரில் பத்தி நன்றாய் ஊன்றியிருந்தது. மோக்ஷத்து இராக்கினியின் பேரிலே பத்தியாய் இருக்கிற கிறீஸ்துவர்களுக்குள்ளே சிலபேர்களிடத்திலே அந்தப் பத்தி நன்றாய் ஊன்றாததினாலே கொஞ்ச காரிய முகாந்தரமாக அதை விட்டுவிடுவார்கள். அப்படிக்கொத்தவர்களைப் போலே நீங்கள் நடவாமல் முன் சொல்லப்பட்டவனைப்போலே உங்கள் இருதயத்திலே அந்தப் பத்தி உறுதியாய் நாட்டப்பட்டிருந்தால் பூலோகத்தின் ஆண்டவள் அவனை இரட்சித்தாப்போலே உங்களையும் இரட்சிப்பாளென்று அறியக்கடவீர்களாக.



வ்ருஷத்தின் கடைசியாகிற

## ருஉ-ம சனிக்கிழமைப்

புதுமையாவது.



நூற்றைம்பத்து மூன்று
மணிச் செபஞ் செபிக்கிறதினாலே பலனில்லை
என்கிற சந்தேகந் தீர்ந்த
அற்புதம்.

உத்திராபிராச்சியத்திலே ஒருத்தன் பூலோகத்தின் ஆண்டவள் பேரிலே பத்தியாய் இருந்ததினாலே தினம் நூற்றைம்பத்துமணிச் செபம் பண்ணிக்கொண்டு வந்தான். இந்தப் பத்திவழியாக உலோகம் பசாசு சரீரமாகிற இந்த மூன்று சத்துருக்களை அவன் செயங்கொண்டான் என்று கண்டு பசாசு அவன் அந்தச் செபத்தை விட்டுவிடத் தக்கதாக அநேகம் பிரயாசப்பட்டது. ஆனால் பசாசு இதுகாரியத்திலே தான் பட்ட பிரயாசம் வீணாய்ப் போச்சுதென்று கண்டு தான் நினைத்தகாரியம் பலிக்கத்தக்கதாகக் கபடமான ஒரு உபாயம பண்ணிற்று. அதெப்படி என்றால், புண்ணியவானாகிய முன் சொல்லப்பட்டவன் ஒரு நாள் நூற்றைம்பது மணிச்செபம பண்ணி முடிந்த பிற்பாடு பசாசு அவனுக்கு வரப் பண்ணின விசாரமாவது:

நான் சிறு பிள்ளையாய் இருக்கையிலே துவக்கி இந்த மட்டும் அநேகவருஷந் தப்பாமற் பூலோகத்தின் ஆண்டவளைக் குறித்து மகா பத்தியோடே

நூற்றைம்பது மணிச்செபம் பண்ணிக்கொண்டு வந்தேன். இந்தப் புண்ணியத்தின் வழியாக இதற்கு ள்ளாக எனக்கு என்ன பிரயோசனம் வந்தது? ஒன் றுமில்லை, ஒரு சகாயமும் ஒரு நன்மையும் இல்லை, இது இப்படி ஆச்சுது. மோக்ஷராக்கினி ஆனவள் இந்த நூற்றைம்பதுமணியின் பேரிலே பிரியமில்லை ஆக்கும். அந்த ஆண்டவளுக்குப் பிரியமில்லாத புண்ணியத்தை எதுக்கு நான் செய்கிறேன். இதை விட்டு அவளுக்குப் பிரியமான வேறே புண்ணியங் களைச் செய்வேனென்று யோசித்து நூற்றைம்பது மணிச் செபத்தை விடுகிறதற்குத் துணிந்தான். அப்போது தேவமாதா நூற்றைம்பது மணிச்செப த்தின்பேரிலே தமக்கு உண்டான பிரியத்தைக் காண் பிக்கத்தக்கதாகவும் அவன் அந்தச் செபத்தை விடா மல் உறுதியாய் இருக்கவும் ஒரு நல்ல புதுமை பண்ணினாள். அதாவது:

அந்தப் புண்ணியவான் முன் சொன்ன நினை வோடே இருக்கிறபோது ஆகாசத்தில் இருந்து ஒரு சத்தம புறப்பட்டது. தன்னுடைய பேரைச் சொல் லிக் கூப்பிடுகிறதை அவன் கேட்டு மிகவும் பயந்து என்னைக் கூப்பிடுகிறது ஆரென்று ஆச்சரியத்தோ டே கேட்டான். அதற்குத் தேவமாதாவின் பேரிலே யும் அவனுடைய நூற்றைம்பதுமணிச் செபத்தின் பேரிலேயும் நீ எதுக்கு முறையிடுகிறாயென்று அறிய உன்னைக் கூப்பிடுகிறேனென்று சொல்லிற்று. இத ற்கு அந்தப் புண்ணியவான் பயந்து ஐயையோ, நான் முறையிடவில்லை, ஆனால் அதில் எனக்கு ஒரு சலிப்பிருக்கிறது. அதாவது: நான் அநேகவரு ஷந் தினம் நூற்றைம்பதுமணிச் செபம் பண்ணி னாலும் அதின் வழியாக ஒரு சகாயமாகிலும் வரவில் லையென்று சலிப்பு மாத்திரம் இருந்தது என்றான்.

இதற்கு அந்தச் சத்தம் மகா கோபக்[illegible] பட்டுச் சொன்னதாவது:

நன்றி அறியாதவனே, நூற்றைம்பது மணிச் செபத்தின் வழியாகக் கொஞ்சஞ் சகாயமாகிலும் வரவில்லை என்று நீ சொன்னதினாலே நான் இப்போது கேட்கப்போகிற சேதிக்கு நீ மறு உத்தாரஞ் சொல்லு. உன்னுடைய தம்பிமார் எங்கே இருக்கிறார்கள் என்றதற்கு இவன்: அவர்களெல்லாருஞ் செத்தார்கள் என்றான். இதற்கு அந்தச் சத்தம்: அவர்கள் உன்னைப் பார்க்கக் கொஞ்ச வயதாய் இருந்தாலும் அவர்களுக்குச் சாவு வந்தது. நீ இந்தமட்டுஞ் சுகமாயிருக்கிறாயே; அப்புறம் உன் வீட்டுக்குக் கிட்ட இருந்த இன்னான் இன்னாள் வீட்டுக்கு என்ன சம்பவித்ததென்றதற்கு அவன் அந்த வீடுகளும் அதிலிருந்த தட்டுமுட்டுகளும் நெருப்புபட்டு வெந்ததென்றான். அப்போது அந்தச் சத்தம் உன்னுடைய வீட்டுக்கு என்ன சம்பவித்தது? உன் வீடு மோசமில்லாமல் நன்றாயிருக்கிறது. பின்னேயும் உன்னுறவின் முறையாருக்குள்ளே இன்னாரின்னார் பஞ்சத்தினாலே செத்தார்களல்லோ, அப்போ நீ சாகவில்லை. இன்னாரின்னார் தண்ணீரிலே செத்தார்களாமே, அப்போது நீ தப்பினாய். இன்னின்னார் காணியாட்சியை அரண்மனையார் கட்டிக்கொண்டார்கள், உன்னுடைய காணியாட்சியை நீயே அனுபவிக்கிறாய். இன்னாரின்னாருக்கு அபகீர்த்தி வந்தது, உன்னுடைய கீர்த்திக்குப் பழுதில்லை. இன்னின்னார் பெண்சாதி பிள்ளைகளுக்குக் கனமான பொல்லாப்பு வந்தது, உன்னுடைய பெண்சாதி பிள்ளைகள் நன்றாய் இருக்கிறார்கள். நீ நூற்றைம்பது மணிச் செபம் பண்ணினதினாலே இப்போ சொல்லப்பட்ட பொல்லாப்புகளில் நின்று தேவமாதா உன்னை இரட்சித்தாள்.

இப்படியிருக்கையிலே நன்றியறியாதவனே, நூற்றைம்பது மணிச் செபத்தின் வழியாக ஒரு பிரயோசனமும் வரவில்லையென்று சொல்லலாமோ முறையிடலாமோவென்று மகா கோபத்தோடே சொல்லி அந்தச் சத்தம் முடிந்தது. அவன் இந்தச் சேதியெல்லாங் கேட்டு மகா வெட்கப்பட்டு அறியாமல், இப்படி நினைத்தேனென்று சொல்லி அன்று துவக்கிச் சாகுமட்டும் முன்னைப் பார்க்க மகா பத்திச் சுறுசுறுப்போடே தினம் நூற்றைம்பது மணிச் செபம் பண்ணிக்கொண்டு வந்தான். இதல்லாமல் அவன் தனக்குச் சம்பவித்த காரியத்தை மற்றவூர்களுக்கு அறிவித்தான். அதைக் கேட்டவர்களெல்லாரும் மகா சந்தோஷப்பட்டு அப்படிப்பட்ட செபத்தை எப்போதும் பண்ணிக்கொண்டு வந்தார்கள்.

கிறீஸ்துவர்களே, தாயிடத்திலே பிள்ளைகள் பால் குடிக்கிறாப்போலே இப்போது நீங்கள் கேட்ட புதுமையிலே எல்லாருக்குந் தாயாகிற தேவமாதாவின்பேரிலே பத்தியென்கிற ஞானப் பாலைக் குடிக்கவேணும். முந்த முந்த இந்தப் புதுமையிலே சொல்லப்பட்ட புண்ணியவான் நூற்றைம்பது மணிச் செபத்தை விட்டுவிடும்படி பசாசு பலவிதமாய்ப் பிரயாசப்பட்டாப்போலே அவரவர் இந்த வகைச் செபம் பண்ணுகிறதை விட்டுவிடுவிக்கவும் பசாசு உபாயங்களையுந் தந்திரங்களையும் பண்ணுமென்று நீங்கள் அறிந்து அந்தவகைச் செபத்தை நீங்கள் விடாதபடிக்குத் துணிந்திருக்கவேணும்.

இரண்டாவது. அப்படிக்கொத்த செபத்தின்பேரிலே தேவமாதாவுக்கு மெத்தப் பிரியமிருக்கிறதென்று இந்தப் புதுமையைக்கொண்டு நீங்கள் அறிந்துகொண்டு உங்கள்பேரிலே மோக்ஷத்துக்கு இராக்கினியானவளுக்குப் பிரியம் வரத்தக்கதாகத் தினந்

தினம் அப்படிக்கொத்த செபம் நீங்கள் அப்பியாசம் செய்துகொண்டு வந்தால் உத்தமமாமே.

மூன்றாவது. அந்தப் புண்ணியவானுக்குத் தான் பண்ணின செபத்தினாலே தனக்குப் பிரயோசனமில்லை என்கிற விசாரம் பசாசின் தந்திரத்தினாலே வந்தாப்போலே இக்காலத்திலே சில பேர்களுக்கு வருகிறதுண்டு. அப்படிக்கொத்த விசாரம் உங்களுக்கு வந்தால் அது பசாசின் தந்திரமென்று நினைத்து அந்த விசாரத்தைத் தள்ள வேணும். அதேதென்றால் பாமண்டலத்திலே இருக்கிற நட்சத்திரங்களுடைய எண்ணிக்கை ஒருவருக்குந் தெரியாதது போலே நூற்றைம்பது மணிச் செபத்தின் வழியாக மனுஷருடைய ஆத்துமத்துக்குஞ் சரீரத்துக்கும் வருகிற நன்மை இம்மாத்திரமென்று கண்டுபிடிக்கக்கூடாது.

---

# முடிவுரை

கிறீஸ்துவர்களே, வருஷத்தின் கடைசிச் சனிக்கிழமைக்குரிய இந்தப் புதுமையை நாம் சொன்னதினாலே விவேகத்திலே நாம் சொன்ன வார்த்தையின்படியே தேவமாதாவினுடைய எண்ணப்படாத புதுமைகளுக்குள்ளே ஐம்பத்திரண்டு புதுமைகளை அந்த ஆண்டவளுடைய ஆசிர்வாதத்தினாலே எவ்வளவாகிலும் வெளிப்படுத்தினாப்போலே ஆச்சுதே. ஆகையால் இந்தப் புஸ்தகத்தின் விவேகத்திலே நம்மாலே சொல்லப்பட்டபடியே இவ்வுலகத்திலே

எண்ணப்படாத கஸ்திகளிருந்தாலும் தேவமாதா வல்லபமுடையவளாகவுந் தயையுள்ளவளாகவும் இருக்கிறபடியினாலே அவளுடைய உதவியைக்கொண்டு எந்தவகைக் கஸ்திகளும நீங்கிப்போமென்று இந்த ஐம்பத்திரண்டு புதுமையிலே உங்களுக்கு ஒப்பிக்கப் பட்டாப்போலே ஆச்சுதென்று நினைத்திருக்கிறோம். ஆனபடியினாலே இப்படிக்கொத்த புதுமைகளைப் பாக்கில்லாமல் பத்தியோடே கேட்டீர்களானால் மோக்ஷராக்கினியின்பேரிலே உங்களுடைய நம்பிக்கையெல்லாம் வைக்கிறதுக்கு அவரவருக்கு ஆசை வருவதல்லாமல் அவள்பேரிலே நீங்கள் வைத்த பத்தி நம்பிக்கை வழியாக உங்களுக்கு வருகிற பொல்லாப்புகள் நீங்கிப்போமென்றும் நினைத்திருக்கிறோம். ஆகையால் இப்படிக்கொத்த மகாபாக்கியமாகிற அர்ச். கன்னிமரியாயியைப் படைத்த ஆண்டவருக்குத் தோத்திரம் பண்ணுகிறது நியாயந்தானே. இதினாலே அவளை வேண்டிக்கொள்ளுகிறதாவது.

46074.

---

# செபம்.

பிதா சுதன் இஸ்பிரீத்துசாந்துவாகிய அர்ச். திரித்துவமாயிருக்கிற ஏக சர்வேசுரா, சென்மப்பாவமில்லாமல் உற்பவித்த அர்ச். கன்னிமரியாயியைத் தேவரீர் படைத்ததினாலே எங்களுக்கு எம்மாத்திரம் பாக்கியங் கட்டளையிட்டீரென்று அளவறுக்கக்கூடாது. ஆகையால் இதிலே தேவரீர் எங்களுக்குச் செய்த எண்ணப்படாத உபகாரங்களுக்காகச் சகல